# சக்தி வளர்க்கும் கோபுரங்கள்

கான்கிரீட் அடிப்படையில் அமைந்து வருகிறது பாரதநாடு... குறிப்பிட்ட நீரையே மீண்டும் மீண்டும் மின்சக்தி உற்பத்தி நிலையங்கள் உபயோகிக்க உதவும், வானளாவி நிற்கும் குளிர்விக்கும் ஸ்தூபிகள் உணவு உற்பத்தியைப் பெருக்க வழிசெய்யும் மாபெரும் அணைகள்... உரத்தயாரிப்பு ஆலைகள்... ஜீவாதாரப் போக்குவரத்துக்கு அனுகூலமாய் அமைந்த பாலங்கள், பெரு வழிகள்... ஆலைத் தொழில்களுக்கு ஆக்க சக்தி அளிக்கும் மின்சார நிலையங்கள்... நோயாளிகளுக்கான ஆஸ்பத்திரிகள்... ஆடவரும், மகளிரும் குழந்தைகளுக்குக் கல்வி புகட்டும் புனிதப் பணியாற்றும் கலாசாலைகள், கல்லூரிகள்...

ஒப்புவமையற்ற இந்த நிர்மாணப் பணியில் ஏ.ஸி.ஸி. மற்றும் இந்தியா ஸிமெண்ட்ஸ் தரச் சிறப்புள்ள ஸிமெண்ட் விநியோகிப்பதன் மூலம் பெரும் பங்கு கொள்கிறார்கள்.

ACC

தி ஸிமெண்ட் மார்க்கெடிங் கம்பெனி ஆப் இந்தியா லிட்.,
தி அஸோஸியேடட் ஸிமெண்ட் கம்பெனீஸ் லிமிடெட்
தி இந்தியா ஸிமெண்ட்ஸ் லிமிடெட்.

உழைத்து, சேமித்து, தேசியப் பாதுகாப்புப் பத்திரங்களில் முதலீடு செய்யுங்கள்.

ACC. 1962 B TAM

தென் இந்தியப் புத்தகத் தொழில் கழகத்தார் 'வீட்டிற்கு ஒரு நூல் நிலையம்' என்று தொடங்கியுள்ள புது முயற்சி வரவேற்கத் தக்கது. நாகரிகமும் அறிவியலும் வளர்ந்துள்ள இந்த நூற்றாண்டில்—அரசியல் அமைப்பில் எல்லோரும் பங்கு கொள்ளும் குடியாட்சி முறை உள்ள நாட்டில்—எல்லோரும் எல்லாப் பொது அறிவும் சிந்தனையாற்றலும் பெற்றிருக்க வேண்டும். ஆகையால் வீட்டிற்கு ஒரு நூல் நிலையம் இருக்க வேண்டும்; பலவகை நல்ல நூல்களும் அதில் இடம் பெறவேண்டும். அந்த நோக்கத்தை எளிய முறையில் நிறைவேற்ற இந்தத் திட்டம் உதவியாகிறது. இதை எல்லோரும் பயன்படுத்திக் கொள்வார்கள் என நம்புகிறேன்.

மு. வரதராசன்



# 17 காசுக்கு ஓர் அரிய நூலகம் உங்கள் வீட்டில் உண்டாகிவிடும்



"வீட்டிற்கு ஒரு நூல் நிலையம்"

இது இதுவரை பேச்சுக்கு ஓர் அலங்காரம், செவிக்கோர் தேன்சுவை போன்று நாட்டில் இருந்திருந்தது.

"சொல்லுதல் எளிது" என்ற பழமொழியை டும் பாடமிருந்தது.

"செய்தல் கடினம்", என்ற நிதர்சனத்தைத் தங்கள் திட்டம் எவ்வளவு எளிதாக அநாயாசத் தீர்த்திருக்கிறது என்பதை, உண்மையாக என் மனம் மிக ஆழமாக உணர்கிறது.

நம் மக்கள் அறிவு இதுவரையிலேயே நன்று தீட்டப்பட்ட ஒன்று. அதற்கு எண்ணத்தின் துணை சேர்ந்தால் போதும். அது சுடர்விட்டுப் பிரகாசிக்கும். அந்தத் துணை, இப்போது தங்களுடையது.

நம் நாடு என்றும் உயர்ந்து உயரத் தாங்கள் கொண்டுள்ள நன்முயற்சி, நீதிய முறையில் வெற்றிபெற மனமார வாழ்த்துகிறேன்.

அதன் வெற்றிக்கு நானும் பங்குக்கு வழிகாட்டியாகயிருந்து உதவுவேன் என உறுதி கூறி முடிக்கிறேன்.

வணக்கம்.

இப்படிக்கு,

(சிவாஜி கணேசன்)

## இது மாயமல்ல! மந்திரமல்ல!! தந்திரமல்ல!!!



## வீட்டிற்கு ஓர் நூல் நிலையம்

நீங்களும் உங்கள் குழந்தை குட்டிகளும், உங்கள் வீட்டிற்கு வரும் விருந்தினரும் படித்து மகிழ உங்கள் வீட்டிலேயே உங்களுக்குச் சொந்தமான, உங்களுக்குப் பிடித்தமான புத்தகங்களைக் கொண்ட ஓர் அரிய நூல் நிலையம் வேண்டுவது அவசியம் என்று சொல்லவா வேண்டும்? அதற்குப் பணம் வேண்டாமா என்று கேட்பீர்கள். பணம் வேண்டும். மிக மிகக் கொஞ்சமான பணம் போதும். மாதம் ரூ. 5 செலவில் 18 மாதங்களில் ஓர் நூலகத்தை ஏற்படுத்த முடியும். அத்தகைய ஒரு திட்டத்தை தென் இந்தியப் புத்தகத் தொழில் கழகம் (BOOK INDUSTRY COUNCIL OF SOUTH INDIA) அதனுடைய அங்கத்தினர்களின் ஆதரவால் வகுத்திருக்கிறது. அந்தத் திட்டத்தின்படி தமிழ்ப் புத்தக வெளியீட்டாளர் பலர் வெளியிட்ட 2000க்கும் அதிகமான நாவல், நாடகம், வரலாறு சரித்திரம், சமயம், விஞ்ஞானம், இலக்கியம், ஓவியம், காவியம், கவிதை, சிறுவர் இலக்கியம் இன்னும் மற்றவகை நூல்களும் கொண்ட ஒரு புத்தக விபரப் பட்டியல் ஒன்று தயாரிக்கப்பெற்றுள்ளது.

### திட்ட விபரம்

இந்தத் திட்டத்தில் 18 வயதிற்கு மேற்பட்ட ஆண், பெண் யாவரும் சேரலாம். மாதம் ஒன்றுக்கு ரூ. 5 வீதம் 18 மாதங்கள் தொடர்ந்து செலுத்தவேண்டும். அதாவது

தினம் ஒன்றுக்கு 17 காசுக்கும் குறைவாகவே ஆகிறது.

★ முதல் சந்தா கிடைத்ததும் இலவசமாக ரூ. 5. விலையுடைய புத்தகங்களும், விபரப் பட்டியலும் அனுப்பப்பெறும்.

★ வேது மாதக் கடைசியில் ரூ. 25 மதிப்புடைய புத்தகங்களுடன், இலவசமாக ரூ. 5 மதிப்புடைய புத்தகங்கள் அனுப்பப்பெறும்.



### திட்டத்தின் முக்கிய அம்சங்கள்

● ரூ. 90-க்கு ரூ. 110 மதிப்புள்ள உங்களுக்கு பிடித்தமான புத்தகங்களை அடைதல்.

●● பதிப்பகத்தார் பலர் வெளியிட்ட நூலாசிரியர் பலரின் அரிய நூல்களை அடையும் வாய்ப்பைப் பெறுதல்.

●●● புத்தகத்தில் கண்ட விலைக்கே பாரத நாட்டில் நீங்கள் எங்கிருந்தாலும் உங்களுக்கும் புத்தகங்கள் கிடைக்கும் அரிய வாய்ப்பைப் பெறுதல்.

★ 12வது மாதக் கடைசியில் ரூ. 30 மதிப்புடைய புத்தகங்களுடன், இலவசமாக ரூ. 5 மதிப்புடைய புத்தகங்கள் அனுப்பப்பெறும்.

★ 18வது மாதக் கடைசியில் ரூ. 35 மதிப்புடைய புத்தகங்களுடன், இலவசமாக ரூ. 5 மதிப்புடைய புத்தகங்கள் அனுப்பப்பெறும்.

மேலே கண்டபடி 18வது மாத இறுதியில் ரூ. 110 மதிப்புடைய புத்தகங்கள் தபால் முதலிய எவ்விதச் செலவுமின்றி, நீங்கள் செலுத்திய ரூ. 90க்குக் கிடைக்கிறது.

இலவசமாகப் பெறும் புத்தகங்களின் பெயர் மற்றேரிடத்தில் உள்ளது. நீங்கள் விரும்பும் புத்தகங்களை அதிலிருந்து தேர்ந்தெடுத்துக் கொள்ள வேண்டும்.

---

விதிகள் : 1. பிரதி மாதமும் 10ம் தேதிக்குள் சந்தாவை செலுத்திவிட வேண்டும்.

2. புத்தகங்களை, கழகம் அனுப்பிய விலைப்பட்டியலிலிருந்துதான் தேர்ந்தெடுக்க வேண்டும்.

3. 18 மாதங்களும் சந்தா செலுத்தாதவர்கள் இலவசப் புத்தகங்கள் பெறும் வாய்ப்பை இழக்கிறார்கள்.

4. சில மாதங்கள் சந்தாச் செலுத்தி நிறுத்தியவர்களுக்கு, அவர் செலுத்திய தொகையளவுக்குத்தான் புத்தகங்கள் அனுப்பப்பெறும். அவ்வாறு அனுப்பும்போது, இலவசமாக ஏற்கனவே அனுப்பப்பட்ட புத்தகங்களின் விலையைக் கழித்து மீதித் தொகைக்குத்தான் புத்தகங்கள் அனுப்பப்பெறும்.

5. இந்த திட்டத்தின் சம்மந்தமான நடவடிக்கைகளுக்கு 'ஜுரிஸ்டிக்ஷன்' சென்னை நகரம்

6. இந்தத் திட்டத்தில் சேரக் கடைசி நாள் 31-5-1963



வீட்டிற்கு ஓர் நூல்நிலையம்

தென் இந்தியப் புத்தகத் தொழிற் கழகம்,
த. பெ. எண். 756, சென்னை-8

அன்புடைய ஐயா,

நான் "வீட்டிற்கு ஓர் நூல் நிலையம்" திட்டத்தில் அதன் விதிகளுக்கு உட்பட்டு அங்கத்தினராகச் சேர விரும்புகிறேன். இத்துடன் முதலாவது தவணைத் தொகை ரூ. ஐந்து மணியார்டர்மூலம்/போஸ்டல் ஆர்டர்மூலம் அனுப்பியிருக்கிறேன்.

தேதி..................... கையொப்பம்.....................
பெயர்..................... தொழில்.....................
முகவரி..................... .....................
..................... ரயில் நிலையம்.....................



## வீட்டிற்கு ஓர் நூல் நிலையம்

முதன் முதலில் சேர்ந்த அங்கத்தினர்கள் :

திரு E. நடேசன், சர்க்கிள் மானேஜர், ரூபி ஜெனரல் இன்ஷ்யூரன்ஸ் கம்பெனி, சென்னை. 2. திரு V. சுப்பையா, டிப்டி செகரட்டரி (ரெவின்யூ) சென்னை அரசாங்கம், சென்னை. 3. திரு C. N. S. செங்கல்வராயன், அட்வகேட், சென்னை. 4 & 5. ரங்கோலி புகழ் அபயம் சகோதரிகள்-குமாரி அபயம் & மீனு, சென்னை. 6. 'நெஞ்சில் ஓர் ஆலயம் புகழ்' திரு கல்யாண்குமார். 7. திரு D. K. சுவாமி, பார்ட்னர், ராஜன் எலக்டிரிக் பிரஸ், சென்னை. 8. திரு V. R. ஜெகதீசன், நேஷனல் & கிரிண்ட்லேஸ் பாங்க், சென்னை. 9. திரு M. R. ராஜா, B.E., இங்கிலீஷ் எலக்டிரிக் கம்பெனி, சென்னை. 10. திருமதி ராஜலக்ஷ்மி மணி, ஆசிரியை, ஹைதராபாத். 11. 'பாசப் பிரிவினை' புகழ் குமாரி பத்மினி பிரியதர்சினி சென்னை. 12. திரு K. R. லெட்சுமணன், கமலா பிக்சர்ஸ், சென்னை. 13. திரு G. வெங்கோபராவ், III B.Sc., விவேகானந்தா கல்லூரி, சென்னை. 14. திரு R. நீலகண்டன், II B. Sc., நியூ காலேஜ், சென்னை. 15. திரு C. பவானந்தம், டெலிபோன் ஆப்பரேட்டர், உம்மிடி ராமய்ய செட்டி குருசாமி செட்டி கம்பெனி, சென்னை.

## வீட்டிற்கு ஓர் நூல் நிலையம்

இலவசமாகப்பெறும் புத்தகங்களின் பட்டியல்

1. அமெரிக்க குபேரன் ராக்பெல்லர், எஸ். விஸ்வநாதன்: ரூ. 2-00; 2. அணு நமது நண்பன் அ. நடராஜன்: ரூ. 3-25: 3. ஆபத்தில் சிக்கிய அபலைகள், மேதாவி: ரூ. 1-50; 4. இந்தியாவின் கதை, மூல்க்ராஜ் ஆனந்த்: ரூ. 1-00; 5. இரண்டு ஆண் ஒரு ராணி, ரெஞ்சீவி: ரூ. 1-50; 6. ஈசாப் நீதிக் கதைகள், வி.எஸ். வெங்கடேசன்: ரூ. 3-00; 7. உலகத்துச் சிறந்த

# தென்னிந்தியப் புத்தகத் தொழில் கழகம்

# கல்கி



## பொருளடக்கம்

சோபகிருது, சித்திரை 1உ ★ ஏப்ரல், 14உ 1963





படவிளக்கம் 17ம் பக்கம்

"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.



மலர் 22 | தமிழ்த்திரு நாடுதன்னைப்—பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா —பாரதியார் | இதழ் 37

# புத்தாண்டு

எண்ணிறந்த இன்னல்களிடையே ‘சுபக்ருத்’ ஆண்டு முடிந்து, நாடு சோபை குன்றியுள்ள சமயத்தில் ‘சோபக்ருத்’ பிறக்கிறது.

அரசாட்சி தாறுமாறான முறையில் நடப்பதே மக்களின் இன்றைய மனச் சோர்வுக்குக் காரணமாகும். சோஷலிஸம் என்ற பெயரிலும், திட்டம் என்ற பெயரிலும் எவ்வளவோ தவறுகள் இழைத்து விட்டார்கள். கண்மூடித்தனமாக நோட்டுக்களை அச்சடித்துப் பணப்புழக்கத்தை அதிகப்படுத்தி விலைவாசிகளை ஏற்றிவிட்டார்கள். இந்நிலையில் சீன அபாயம் வேறு நேர்ந்துள்ளது. அதைத் தவிர்க்க உருப்படியான திட்டங்களை வகுக்காமல் மக்களைக் கசக்கிப் பிழியக்கூடிய வரிப் பிரேரணைகளைக் கொண்ட பட்ஜெட்டை வெளியிட்டிருக்கிறார்கள். இதனால் மக்களின் உற்சாகம் குன்றிக் கொண்டே வருகிறது.

இப்படிப்பட்ட சூழ்நிலையில் புத்தாண்டுப் பிறப்பிலும் கூடக் களிப்பு காண இயலவில்லை. ‘பூமி சூரியனைச் சுற்றுவதற்கும், சூரியன் மேஷ ராசியில் பிரவேசிப்பதற்கும் விழா வைபவ விமரிசைகள் எதற்கு? சுபக்ருத் சுபமளிக்கட்டும்; சோபக்ருத் சோபையளிக்கட்டும் — என்றெல்லாம் நாம் வார்த்தையை வைத்து விளையாடுவதில் என்ன பலன் இருக்கிறது? ஒவ்வோர் ஆண்டும் அதே சுகதுக்கங்களுடன்தான் — அல்லது முன் ஆண்டை விட அதிக துக்கத்துடன்தான்—தேய்ந்து வருகிறது’ என்று உள்ளம் சோர்வடைகிறது.

இப்படிச் சோர்வடையும்போது, இரு சான்றோர்களின் திரு உருவங்கள் நம் முன் னின்று ஆறுதலும் ஆதரவும் அளிக்கின்றன. தமது எண்பத்தைந்தாவது பிராயத்திலும் சிறிதேனும் அலுப்போ அயர்வோ ஆயாசமோ இன்றி எல்லையற்ற எதிர்ப்புக்களிடையே உற்சாகத்துடன் செயல் புரியும் ராஜாஜியை நினைந்து வணங்குகிறோம். பலனை ஆண்டவனிடம் ஒப்பித்து விட்டு, சுய வாழ்வை மறந்து, தர்மத்துக்காகப் பணிபுரியும் மனோபாவம்தான் அன்புத் தலைவர் ராஜாஜிக்கு இந்த வியத்தகு வினைத் திறனை அளித்திருக்கிறது என்று தெளிகிறோம். சமூகப் பணி புரிந்து கொண்டே துறவியாக வாழும் அவரை ஆதரிசமாகக் கொண்டால் நமக்கும் ஊக்கமும் உற்சாகமும் உண்டாகும் என்று கண்டு நமது மனக்கலக்கம் தெளியப் பெறுகிறோம்.

துறவியாக இருந்து கொண்டே சமூகப் பணி புரியும் மகானுகிய ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதிகளையும் இன்று நினைவு கொண்டு வழிபடுகிறோம். அரசியலின் எழுச்சியிலும் வீழ்ச்சியிலும் தொடர்பற்ற அத்வைத ஞானி அவர். தாமும் பரம்பொருளும் ஒன்று என்ற அத்வைத அநுபவத்தைப் பெற்றதால் அவர் செயலற்று இருந்துவிடவில்லை; நம்மையெல்லாம் விட அதிகமாகத் தமது தள்ளாத தசையில் உழைத்து வருகிறார். உலகம் பொய் என்பதால் அதனை அவர் வெறுத்தோடவில்லை; இந்த உலகத்தவர் மெய் வாழ்வை உணர வேண்டும் என்பதற்காகக் கிராமம் கிராமமாகச் சென்று அயராமல் பூஜை செய்கிறார்; உபதேசம் புரிகிறார். ஒழுங்கும் அழகும் கூடினால் உலக வாழ்வும் உண்மை வாழ்வுக்கு வழி வகுக்கும் என்பதனை உணர்த்தி வருகிறார்.

மங்கிய நம் உற்சாகம் இவ்விரு பெரியோரையும் எண்ணியவுடன் மீண்டும் பொங்குகிறது. சஞ்சலித்த சித்தம் சாந்தி கொள்கிறது. இந்நிலையில், இந்தப் பிரபஞ்சத்தில் ஒழுங்கும் அழகும் நிலவ வேண்டுமென்றே சூரியனைப் பூமி கிரமமாகச் சுற்றுவதும், சூரியன் மேஷ ராசியில் நியதிப்படி பிரவேசிப்பதும், புத்தாண்டு பிறப்பதும் நமக்குப் புத்துணர்ச்சியளிக்கின்றன.

அந்தப் புத்துணர்ச்சியை நாடு முழுவதும் பெற வேண்டும் என இறைவனைப் பிரார்த்தித்து, நேயர்களுக்கு நம் உளமார்ந்த புத்தாண்டு வாழ்த்துக்களை அளிக்கிறோம்.

# என்ன சேதி?

### சத்தியமூர்த்தி சிலை

சென்னை நகரை அழகுற வைத்துக் கொள்வதில் பெரும் பாடுபட்ட காலஞ்சென்ற தேச பக்தர் எஸ். சத்தியமூர்த்திக்குத் தக்க ஞாபகார்த்தச் சிலை நிறுவ சென்னை நகராட்சி மன்றம் முன்வந்துள்ளதை அறிந்து மகிழ்கிறோம். கிண்டி ராமா மெட்டல் ஒர்க்ஸ் கம்பெனியார், எட்டடி உயரத்தில் 880 பவுண்டு எடையில் ஸ்ரீ எஸ். சத்தியமூர்த்தியின் வெண்கல உருவச்சிலை செய்திருக்கிறார்கள். இந்த அழகிய உருவச் சிலை சென்னையில் முக்கியமானதோர் இடத்தில் நிறுவப்படும் என்று தெரிகிறது. பிரதமர் நேரு அவர்களை இந்த உருவச் சிலையைத் திறந்து வைக்கும்படி கேட்டுக் கொண்டிருக்கிறார்களாம்.

### எது அடிமைப் புத்தி?

டில்லி சர்க்காருக்குப் பாத தாங்கிகளாக வேலை செய்து வரும் சென்னை அரசாங்க மந்திரிகளில் ஒருவர் அடிமைப் புத்தியைப் பற்றிப்பேசத் துணிந்திருப்பதைக் கண்டு சிரிப்பு வருகிறது. சீன ஆக்கிரமிப்பை எதிர்க்க அமெரிக்க உதவியையும் நேசத்தையும் பெறுவது அடிமைப் புத்தியாம்! பாலுக்கும் சோற்றுக்கும் கப்பரை ஏந்திச் சென்றபோது என்ன புத்தியிருந்ததாம்? நம் எதிரிக்கு எதிரியாக உள்ளவர்களை நமக்கு நண்பர்களாகக் கொண்டு போர் நடத்த வேண்டும் என்பது அரச நீதி. கம்யூனிஸ்ட் சீனாவுக்கு முற்றும் மாறுபட்ட ஜனநாயக வாழ்க்கை முறைகொண்டவர்கள் அமெரிக்கர்கள். கம்யூனிஸ்ட் வாழ்க்கை முறை பரவாமல் தடுப்பதில் அக்கறை கொண்டவர்கள் அமெரிக்கர்கள். அப்படிப்பட்டவர்களின் உதவியை நாடிப் பெறுவது அறிவுடைய செயலாகும். அதற்கு மாறாக இந்திய மக்களைக் கடும் வரிகளினால் கசக்கிப் பிழிந்தால் கம்யூனிஸ்ட் சீனர்களுக்கு மங்கள ஆரத்தி எடுத்து வரவேற்பதாக முடியும். சீனா விரும்பும் அதிருப்தி நாட்டில் வளரும். வறுமை தாண்டவமாடும். மனச்சோர்வு ஏற்பட்டுப் பகைவனை எதிர்க்கும் சக்தி குன்றும். சீனர்கள் துப்பாக்கி சுடாமலே இந்தியாவுக்குள் பிரவேசிக்க ராஜபாட்டை வகுப்பதாகும். தொழில் வளத்தைப் பெருக்கி, உள் நாட்டில் சுபிட்சத்தையும் வெளிநாட்டு ராணுவ உதவியைப் பெற்று, ராணுவ பலத்தையும் வளர்த்துக் கொள்ள வேண்டும். ஹிட்லர் ருஷ்யா மீது படையெடுத்த போது, ருஷ்யாவானது அமெரிக்கா, பிரிட்டன் ஆகிய இரு நாடுகளின் உதவியைப் பெற்றது. அதனால் ருஷ்யா பிரிட்டனுக்கோ அமெரிக்காவுக்கோ அடிமையாகி விட்டதா? விஷயம் தெரியாதவர்கள் பதவிக்கு வந்தால், மற்றவர்கள் சொல்வதையாவது கேட்டுப் புரிந்து கொண்டு ஆட்சி நடத்துவது புத்திசாலித்தனமாகும். அக்பரும் திப்புவுங்கூட அதைத் தான் செய்தார்கள். இதற்கு மேல் நமது சென்னை மந்திரியின் புத்திசாலித்தனத்தை அலச விரும்பவில்லை.



### பொற்கொல்லரும் ஆட்சியாளரும்

பொற்கொல்லர்கள் தொழில் இழந்து வறுமையில் தவிப்பதைக் கண்டு பரிதாபப் படுவதைவிட, அவர்கள் தங்கள் கஷ்ட நிவாரணத்துக்காக எடுக்கும் முயற்சி முறைகளைப் பார்க்கும் போது, அதிக பரிதாபம் ஏற்படுகிறது. ஊர்வலம் போகும் போது "காங்கிரஸ் வாழ்க! நேருஜி வாழ்க! காமராஜ் நீடூழி வாழ்க! எங்கள் கஷ்டத்தைத் தீருங்கள்!" என்று கூவிக் கொண்டு போகிறார்களாம். பயம் என்னும் பேய் எவ்வளவு ஆதிக்கம் பெற்று விட்டது என்பதை இதில் காணலாம்.

ஜனநாயக ஆட்சியில், ஆளும் கட்சி தவறிழைத்தால், அதை மாற்றி மக்கள் எதிர்க் கட்சியை ஆட்சியில் வைக்க முயல்வார்கள் என்ற 'இனி' ஆளும் கட்சிக்கு இருந்

னால்தான் நேரிய ஆட்சி நடைபெறும். திரு சா. கணேசன் சொல்வதுபோல், குட்டக் குட்டக் குனிந்தால் அந்த மக்களுக்கு விமோசனமே இல்லை.

இன்றைய பொற்கொல்லர்கள் இன்னும் உறுதியாக எதிர்க் கட்சிகளுக்கு ஆதரவு தேட முன் வந்தால் தான் பரிகாரம் கிடைக்கும்.

ஒரு பெரிய சமுதாயத்தின் வாழ்வையே குலைத்து விட்ட செய்கையைச் சீர்ப்படுத்த, ஆட்சி மாறி வேறு ஆட்சி வந்தால்தான் சாத்தியமாகும். தனி நபர் தொழில்களைக் கெடுப்பதில்லை, பூரண சுதந்திரம் கொடுக்கப்பட வேண்டும் என்ற கொள்கையை உடைய கட்சிகளை ஒவ்வொரு பொற்கொல்லரும் ஆதரிக்க வேண்டும். பாதிக்கப்பட்ட ஒவ்வொரு பொற்கொல்லரும் சுதந்திரக் கட்சிப் பிரசாரகராக மாறி மற்றத் தொழில்களில் உள்ளவர்களுக்குத் தங்கள் வாழ்க்கை அனுபவத்தை உதாரணமாகக் காட்டி, ஆதரவு திரட்டினாலன்றித் தங்கக் கட்டுப்பாடு கொடுமை தீராது.

**உபதேர்தல்கள்**

மக்கள் மனோபாவம் எப்படி இருக்கிறது, ஆட்சியைப் பற்றி மக்கள் என்ன நினைக்கிறார்கள் என்பதைப் புரிந்து கொள்ள உபதேர்தல்கள் ஆளும் கட்சிக்கு ஒரு சந்தர்ப்பமளிக்கின்றன. ஆகவே உபதேர்தல்களில் மக்கள் தங்கள் வாக்குகளை நன்றாகப் பயன்படுத்த வேண்டும். ஆட்சியாளர்களும் பலவிதமாக மக்களைக் குழப்பப் பார்ப்பார்கள். இதற்கெல்லாம் படிந்து விடாமல், மக்கள் அடைந்துள்ள அதிருப்தியை ஆளும் வர்க்கத்தினருக்கு மனத்தில் தைக்கும்படி காட்ட வேண்டும். ஆளும் கட்சி அங்கத்தினர்கள் படு தோல்வி அடையச் செய்ய உறுதி பூண வேண்டும்.









## எல்லைப்புற நாடுகள்

காஷ்மீர்

# திபெத்

சென்ற இதழ் தொடர்ச்சி

நேபாளம்
சிக்கிம்
பூட்டான்
இந்தியா



1642-ல்தான் முதன் முதலாக ஒரு தலாய் லாமா பதவிக்கு வந்தார். அது முதல் கடந்த முந்நூறு ஆண்டுகளுக்கு மேலாகப் பத்து தலாய் லாமாக்கள் திபெத்தை அமைதியாக ஆண்டு வந்திருக்கின்றனர். சீன சக்கரவர்த்திகளுக்கும் தலாய் லாமாக்களுக்கும் இடையில் அந்நியோன்யமான தொடர்பு இருந்து வந்திருக்கிறது. சீனச் சக்கரவர்த்திகள் பலர் தலாய் லாமாக்களைத் தங்கள் மத போதகராகப் பாவித்துத் தருவித்ததுடன் திபெத்திய அரசர் என்ற முறையிலும் வரவேற்று மரியாதை செய்திருக்கிறார்கள். அதே சமயத்தில் தலாய் லாமாவுக்கு ராஜ்ய பரிபாலன விவகாரங்களில் உதவ இரண்டொரு பிரதிநிதிகளையும் சீன சக்கரவர்த்திகள் அனுப்பி வைத்திருக்கிறார்கள். இந்தப் பிரதிநிதிகளுக்கு ஓரளவுக்கு அதிகாரமும் இருந்து வந்தது என்பது உண்மை. இந்த அதிகார உரிமைகளைத் தலாய் லாமாக்கள் மூலமாகவே அவர்கள் நிறைவேற்றி வந்தார்கள்.

இவ்வாறு சீனாவுக்குத் திபெத்தின் மீது கொஞ்சம் செல்வாக்கு இருந்ததே ஒழிய என்றைக்குமே ஆதிக்கம் செலுத்தியதில்லை.



அமைதியை விரும்பும் திபெத்திய மக்கள் எளிய வாழ்க்கை நடத்தித் திருப்தியுடன் காலத்தை ஓட்டினார்கள். சதா சர்வ காலமும் ஆண்டவனை மனத்தில் இருத்தித் தெய்வ நெறி பிறழாமல் ஒழுகினார்கள். நெய் விளக்கேற்றிப் பிரார்த்தனை செலுத்துவதுடன் சக்கரம் போலச் சுழலும் காகிதக் காற்றாடி ஒன்றினை அநேகமாக ஒவ்வொரு திபெத்தியனும் வைத்திருப்பான். அந்தக் காற்றாடிக் காகிதத்தில் 'ஓம் மணி பத்மே ஓம்' என எழுதப்பட்டிருக்கும். தாமரையில் வீற்றிருக்கும் மாணிக்கத்தை இவ்விதமாக அவர்கள் பிரார்த்திப்பார்கள். காற்றில் சக்கரம் சுழலுகையில் இம்மகா மந்திரத்தைப் பல நூறு தடவைகளில் ஜபித்ததாக தாத்பரியம்.



**யா**டுங் பள்ளத்தாக்கு மே மாதத்தில் அதி அற்புதமாய்த் திகழும். மலைச் சரிவுகளில் செக்கச் சிவந்த மலர்களைப் பார்க்கலாம். ஆறுகளில் உள்ள பாறைகளின் மீது படர்ந்திருக்கும் பாசியில் கூடப் பல மலர்ச் செடிகள் வளரும். ஆனால் இது போன்ற காட்சிகளும் உழவு நடைபெறுகிற பிரதேசமும் சொற்பப் பகுதிகள்தான். சும்பி பள்ளத்தாக்கைத் தாண்டி அப்பால் சென்றால் திபெத்தின் உண்மையான தோற்றத்தைக் காணலாம். அறுபது மைல் தூரத்துக்குப் புல் பூண்டு ஏது மற்ற இந்தப் பிரதேசத்தில் ஊசிகளைக் கொண்டு குத்துவது போல் தூசி பறக்கும் காற்று வீசும். ரத்தத்தையே உறையச் செய்வது போன்ற குளிர்க் காற்றின் உக்கிரம் ஜனவரி மாதத்தில் அதிகமாகும். அப்போது நீர் பனிக்கட்டியாக உறைகிற நிலைக்கு இருபத்தைந்து டிகிரி கீழாகவே உஷ்ணமானியின் பாதரச மேல் மட்டம் இருக்கும். திபெத்திய பீடபூமியை ஒரு சில மக்களேனும் வாழ ஏற்றதாகச் செய்வது டிஸாங்போ நதிதான். இது ,பிரம்மபுத்திராவின் கிளை நதி என்பதைச் சமீப காலத்திலேதான் கண்டுபிடித்தார்கள்.

▼ இடது பக்கம்: பல நூற்றாண்டுகளாகத் தலாய் லாமாக்கள் வாழ்ந்து வந்த போடாலா அரண்மனை. மேலே: டிஸாங்போ நதிக்கு மேலாகப் பாலங்கள் இல்லாத குறையைக் கிராமவாசிகள் பொருட்படுத்துவதில்லை. அவர்களது தெப்பம் உறுதியானது. இதோ பக்கத்தில் வீற்றிருப்பவன் திபெத்தியரைக் கதிகலங்க அடிக்கும் மந்திரவாதிகளுள் ஒருவன். பௌத்த மதம் வேரூன்று முன்னர் திபெத்தியரிடம் மிகுந்த செல்வாக்குப் பெற்றிருந்த பான் மதத்தைச் சேர்ந்தவன்.

இத்தகைய சூழ்நிலையில் தலாய் லாமாவின் தலைமையில் நடைபெற்று வந்த அரசாங்கம் ஜனநாயகப் பற்றுள்ள நம் போன்றவர்களுக்கு வெளிப் பார்வைக்குப் பிற்போக்கான ஆட்சி முறையாகத் தோன்றலாம். ஆனால் உண்மை அதுவல்ல. ஆட்சிப் பொறுப்புடன் மக்களைப் பக்தி மார்க்கத்தில் இட்டுச் செல்கின்ற பணியையும் ஏற்றுக் கொண்டவர் தலாய் லாமா. அறிவிற் சிறந்த சான்றோர்களான பல லாமாக்கள் சிறு வயது முதலே அவரைக் கண்காணித்து வந்து இந்தப் பெரும் பொறுப்பைத் திறம்பட வகிக்க ஏற்ற வகையில் ஆளாக்குகிறார்கள். தலாய் லாமாவுக்கு வயது வந்த பின்னரும் ஆலோசகர்களாகப் பல பெரியோர்கள் இருந்து வருகிறார்கள். இன்றைய தலாய்லாமா தமது குறுகிய ஆட்சிக் காலத்தில் மக்களின் முன்னேற்றத்துக்குப் பல சீர்திருத்தங்களைச் செய்தார். திபெத்தியரின் நன்மதிப்புக்குப் பாத்திரமானார். திபெத்தியர் இந்த ஆட்சி முறையை விரும்புகிறார்கள். அதனை மாற்றிக் கொள்ளுமாறு கூற யாருக்குமே உரிமையில்லை.

பூகோள அமைப்பினாலும் தங்கள் மனோபாவத்தினாலும் திபெத்தியர் தங்கள் நாட்டுக்குள் சீனரைத் தவிர வேறு அந்நியர்கள் யாரையுமே அனுமதித்தது கிடையாது.

இது அன்றைக்கு இந்தியாவை ஆண்ட பிரிட்டிஷாருக்குப் பிடிக்கவில்லை. திபெத்துடன் இந்தியாவின் வியாபாரம் பெருக வேண்டும் என்று விரும்பினர். இருபதாம் நூற்றாண்டின் ஆரம்பத்தில் இந்தியாவில் பிரிட்டிஷ் வைஸ்ராயாக விளங்கிய கர்ஸான் பிரபு, ''திபெத்தின் மீது சீனாவுக்கு எந்த விதமான உரிமையும் கிடையாது'' எனக் கூறித் திபெத்தின் மீது ராணுவத்தை ஏவிவிட்டார். திபெத்தியர் தோல்வியுற்றனர். பிரிட்டிஷார் கோரியபடி வியாபார ஒப்பந்தம் செய்து கொண்டனர். எல்லைக் கோடுகள் நிர்ணயிக்கப்பட்டன. பிரிட்டிஷாரின் உத்தரவின்றி எந்த அந்நியனும் திபெத்திய விவகாரங்களில் தலையிடக் கூடாது என்பதாக உடன்படிக்கை கையெழுத்தாகியது. இந்த ஒப்பந்தத்தில் சீனாவைப் பற்றி எதுவுமே குறிப்பிடப்படவில்லை. திபெத் மீது சீனாவுக்கு எந்த விதமான பாத்தியதையும் இருப்பதாக ஒப்புக் கொள்ளப்படவில்லை. ஒப்பந்தம் கையெழுத்தானதும் பிரிட்டிஷ் படைகள் பின்வாங்கின. திபெத்துக்கு இதன் பின்னர் ஆங்கிலேயர் எந்த விதமான தொந்தரவும் தரவில்லை. அன்று சீனா பிரிட்டிஷாரின் இந்த நடவடிக்கைகளைக் கண்டித்தோ திபெத் மீது தனக்கிருக்கும் உரிமையை நிலைநாட்டும் வகையிலோ ஒரு வார்த்தை கூறவில்லை. மாறாக பிரிட்டிஷ்—திபெத்திய ஒப்பந்தத்தைத் தானும் ஒப்புக்கொள்வதாக இரண்டு வருஷங்களுக்குப் பின் சீனா ஓர் உடன்படிக்கையில் கையெழுத்திட்டு பிரிட்டிஷாருக்கு அளித்தது.

பின்னால் இந்த உடன்படிக்கையை மீறிச் சீனா திபெத்தின் மீது ஒரு முறை படையெடுத்தபோது இந்தியாவிலிருந்த பிரிட்டிஷார் திபெத்துடன் தாங்கள் செய்துகொண்டிருந்த ஒப்பந்தத்தின் அடிப்படையில் திபெத்தினுள் புகுந்து சீனரை விரட்டி யடித்துத் திபெத்திய அரசாங்கத்துக்கும் மக்களுக்கும் பாதுகாவலராய் விளங்கினர்.

இன்னும் சரித்திர ஏடுகளைப் புரட்டிப் பார்த்தால், திபெத்திய மக்களின் இனம், மதம், பழக்க வழக்கங்கள், கலாசாரம், அரசாங்கம் போன்ற எல்லா அம்சங்களும் சீனாவுடன் வேறுபட்டதாய்த் தனித்துச் சுதந்திரமாய் விளங்கி வந்திருக்கின்றன என்பதற்குச் சான்றுகள் பல காணலாம்.

அவ்வாறிருந்தும் திபெத்திய மக்களை 'விடுவிப்பதாய்'ச் சொல்லிக்கொண்டு சீனக் கம்யூனிஸ்ட் படைகள் 1950-ல் முதன் முதலாகத் திபெத்தினுள் பெருவாரியாகப் புகுந்தன.

அமைதியை விரும்பிய திபெத்தியர் என்றைக்குமே பலமான பாதுகாப்புக்கான படைகளையோ, நவீன ஆயுதங்களையோ வைத்திருந்ததில்லை. புத்த மதத்தின் கோட்பாடுகளை மேற்கொண்டிருந்த தலாய் லாமாவினால் இந்தப் படையெடுப்பை எதிர்த்துப் பலாத்காரச் செயல்களில் ஈடுபடுமாறு மக்களிடம் கேட்டுக் கொள்ளவும் முடியவில்லை. நாட்டைக் காப்பாற்றத் திரண்டெழுமாறு மக்களிடம் வேண்டுகோள் விடுக்காமலும் இருக்க முடியவில்லை. கூடுமானவரை சமாதானமாகவே போக விரும்பிய தலாய் லாமா அதற்கான முயற்சிகள் பலவற்றைச் செய்தார். ஆனால் வஞ்சகச் சீனர் திபெத்திய மக்களின் சுதந்திரத்தை மதிப்பதாகச் சொல்லிச் சொல்லியே ஏமாற்றி அதே சமயத்தில் அவர்களைத் தங்கள் காலடியில் போட்டு மிதித்தனர்.

தலாய் லாமாவின் சார்பிலே பீகிங்கில் பேச்சு வார்த்தைகள் நடத்தச் சென்ற தலாய் லாமாவின் பிரதிநிதிகள் சீனாவுக்குச் சாதகமான ஓர் ஒப்பந்தத்தில் பலவந்தமாகக் கையெழுத்துப் போடுமாறு செய்யப்பட்டனர்.

மதம் சம்பந்தப்பட்டவரையில் திபெத்தில் தலாய் லாமாவுக்கு அடுத்தபடியாக பஞ்சன் லாமாதான் அதிக செல்வாக்குப் பெற்றிருந்தார். ஆனால் பஞ்சன் லாமாவுக்கு ராஜ்ய பரிபாலன அதிகாரம் என்றைக்குமே இருந்ததில்லை. இன்றைய பஞ்சன் லாமாவைச் சீனர்கள் தங்கள் கைப்பாவையாக மாற்றினார்கள். மக்களை ஏமாற்றத் தலாய் லாமாவுக்குப் போட்டியாக அவரைத் தங்கள் இஷ்டம்போல் ஆட்டி வைத்தனர். ஆனால் மக்கள் எளிதாக ஏமாந்து விடவில்லை.

மனந் தளராமல் தலாய் லாமாவும் பேச்சு வார்த்தைகள் நடத்தத் தாமே நேரடியாகப் பீகிங்குக்குச் சென்றார். அங்கே 'மதம் என்பது விஷத்தைப் போன்றது' என்றும் 'அது முன்னேற்றத்தைத் தடை செய்கிறது' என்றும் மாவோ துங் தலாய் லாமாவுக்கு உபதேசிக்கத் துணிந்தார் என்றாலும் பேச்சு வார்த்தைகள் திபெத்திய உள் நாட்டு விவகாரங்களில் சீனா தலையிடாது என்று நம்ப உறுதியளித்தன. இந்த உறுதியுடனேயே தலாய் லாமா தலைநகர் திரும்பினார்.

இரண்டாயிரத்து ஐந்நூறாவது புத்த ஜயந்தியின்போது இந்தியாவுக்கு வந்த தலாய் லாமா சூ என் லாயைச் சந்தித்து அளவளாவினார். அப்போது சீனப் பிரதமரும்

இந்தியப் பிரதமரும் திபெத் பிரச்னையை ஆராய்ந்தனர். திபெத்தைச் சீனாவின் ராஜதானியாகத் தாங்கள் கருதவில்லை என்றும் கம்யூனிஸத்தை அதன் மீது பலவந்தமாகத் திணிக்கப் போவதில்லையென்றும் சூ என் லாய் நேருஜியிடம் உறுதி கூறினார்.

அதே நேரத்தில் திபெத்தில் சீனப் பிரதிநிதிகள் மக்களின் விருப்பத்துக்கு விரோதமாகக் கம்யூனிஸத் திட்டங்களைப் புகுத்தியதால் மக்கள் ஆத்திரம் கொண்டு பொருமினார்கள். குறிப்பாக, காம்பா எனப்படும் வீரப் பெருங்குடி மக்கள் பொங்கி எழுந்தனர். ஆங்காங்கே கலகங்கள் மூண்டன. சீனர் பீரங்கிகளை மட்டுமல்லாது விமானங்களையும் பயன்படுத்திக் குண்டு வீசினர்.

இந்நிலையில் 1959 மார்ச்சு மாதத்தில் திபெத்திலிருந்த சீனத் தளபதி தலாய் லாமாவுக்கு ஒரு நாடகம் பார்க்க வருமாறு அழைப்பிதழ் அனுப்பினார். தலாய் லாமா தனித்து வரவேண்டும் என்றும் பின்னோடு பாதுகாப்புக்கு யாரையும் அழைத்து வரக்கூடாதென்றும் தெரிவித்தார். சீனர்களின் நயவஞ்சகங்களுள் இதுவும் ஒன்று எனக் கருதினர் திபெத்திய மக்கள். தங்கள் தலைவரை, தெய்வமெனப் போற்றப்படுபவரை அவ்வாறு துணையின்றி ஒரு சாதாரணப் பிரஜை போல் அனுப்பி வைக்க அவர்கள் சம்மதிக்கவில்லை. தலாய் லாமாவுக்கு என்ன தீங்கு நேருமோ என அஞ்சி அரண்மனையைச் சூழ்ந்துகொண்டனர். 'திபெத்தைத் திபெத்தியரிடம் விட்டு விட்டுச் சீனனே வெளியேறு' என்பன போன்ற கோஷங்கள் ஆயிரமாயிரம் கண்டங்களினின்றும் எழுந்தன. இந்த எதிர்ப்பை நசுக்கத் தான் தயாராக இருப்பதாகப் போர் முழக்கம் செய்தார் சீனத் தளபதி. ''நீங்கள் அரண்மனையில் எந்தப் பகுதியில் இருக்கிறீர்கள் என்பதைத் தெரிவியுங்கள். அந்தப் பகுதியை மட்டும் இடித்துத் தரை மட்டமாக்காமல் விட்டு விடுகிறேன்'' என்று அவர் செய்தி அனுப்பினார் தலாய் லாமாவுக்கு. இடிபோசை போல் பீரங்கிகள் முழங்கின. சீனர்களின் நிஜமான எண்ணம் தெளிவாகி விடவே தலாய் லாமாவின் ஆலோசகர்கள் அவர் மாறு வேஷத்தில் இந்தியாவுக்குத் தப்பி விடவேண்டுமென வற்புறுத்தினார்கள். அவர் அடிமையாகச் சீனர்களிடம் அகப்படாத வரையில், உயிரோடு இருக்கும் வரையில் என்றாவது ஒரு நாள் திபெத்துக்கு நல்ல காலம் பிறக்கும் என்று நம்ப இடமுண்டு எனக் கூறினார்கள். தலாய் லாமா சாதாரணமான ஒரு சிப்பாய் போல் வேஷம் தரித்து இந்தியாவுக்கு வந்து சேர்ந்தார். இது போன்ற ஒரு நெருக்கடி நிலைமை உண்டாகலாம் என்று ஏற்கனவே எதிர்பார்த்து ஸிக்கிம் நாட்டில் கொஞ்சம் தங்கத் துகள்களும் வெள்ளியும் பத்திரப்படுத்தி வைத்திருந்தனர். அவை தலாய் லாமாவுடன் அவரைப் பின்பற்றி வந்த பல்லாயிரக் கணக்கான அகதிகளின் பராமரிப்புக்குப் பயன்பட்டன.

ஆனால் அவர்களைப் போல் தப்பி ஓடி வர முடியாமல் பின் தங்கிவிட்ட எண்ணற்ற திபெத்தியரின் கதி என்ன? வார்த்தைகளால் வர்ணிக்கக்கூடாத கோர கொடூரங்கள் நடந்திருக்கின்றன அந் நாட்டில். நமது புராணங்களில் நாம் படித்திருக்கும் எத்தனையோ அரக்கர்கள் எல்லாம் சீனக் கம்யூனிஸ்ட் சிப்பாய்களுடன் ஒப்பிடும்போது மிக மிக நல்லவர்கள் என்று கூறுமளவுக்குப் படுபாதகங்களைப் புரிந்திருக்கிறார்கள் சீனர்கள்.

இதையெல்லாம் அகில உலகத்திலிருந்தும் பொறுக்கி யெடுக்கப்பட்ட தலை சிறந்த வழக்கறிஞர்களும் நீதிபதிகளும் அடங்கிய ஒரு குழு ஆராய்ந்து பார்த்து உண்மையெனக் கண்டிருக்கிறது. குற்றங்களிலெல்லாம் மிகப் பெரிய குற்றமென ஐ. நா. சபை எதைக் கருதுகிறதோ அதைச் சீனா செய்திருப்பதாய்ச் சந்தேகத்துக்கு இடமின்றி அறிவித்திருக்கிறது. அதாவது திபெத்திய இனத்தவரைப் பூண்டோடு அழிப்பதெனக் கங்கணம் கட்டிக் கொண்டு சீனா திட்டமிட்டுச் செயலாற்றி யிருக்கிறதெனக் குற்றம் சாட்டியுள்ளது. 1959க்குப் பிறகு 100,000 திபெத்தியரைக் கொன்று குவித்திருக்கும் சீனர்களின் அக்கிரம ஆட்சி எவ்வளவு நாள் நீடிக்கும்? திபெத்தியர் தங்கள் நாட்டைத் திரும்பப் பெறுவார்களா? விடுதலை அடைவார்களா? எதிர் காலம்தான் இதற்குப் பதில் கூறவேண்டும்.



## பணிவிடைக் கலையைப் பயின்றவள்

ஒவ்வொரு நாட்டுக்கும் ஒரு தனிப் பண்பு உண்டு. அதிலே தனிப்பட்ட பழக்க வழக்கங்கள் உண்டு. ஜப்பான் நாட்டில் ஓர் இனப் பெண்கள், தளர்ந்து சோர்ந்து வரும் ஆடவருக்கு இனிமையாகப் பாடியும் ஆடியும் பணிவிடை புரிந்தும் உற்சாகமூட்டுவதை ஓர் உன்னதக் கலையாகவே போற்றி வந்திருக்கிறார்கள். தேகத் தத்துவம் கலவாத உயர்ந்த நோக்கப் பணியாகக் கடைபிடித்து வருகிறார்கள். இப்பெண்களைக் கெய்ஷா பெண்கள் என்று சொல்வர். கெய்ஷா என்றாலே மனத்தைக் கவரும் பண்பும் பழக்கமும் கொண்டவள் என்று அர்த்தமாம். இப்பணிக்கு ஏழு வயதுச் சிறுமியாக இருக்கும் போதே பயிற்சி அளிக்கத் தொடங்குவார்கள். திருமணம் செய்து கொண்டவுடன் இப்பணி முற்றுப் பெற்றுவிடும். அத்தகைய ஒரு கெய்ஷா பெண்மணியையே இங்கே காண்கிறீர்கள்.

# கோவைச் சித்திரமடல்

கோவை என்பது தமிழ் மொழியில் உள்ள தொண்ணூற்றாறு வகைச் சிறு பிரபந்தங்களில் ஒன்று. அகப்பொருள் பகுதிகளையும் அவை துறைகளையும் காவிய நயத்தோடு விளக்கும் இந்தப் பிரபந்தங்களைப் பலர் பாடியிருக்கின்றார்கள். மாணிக்கவாசகர் இயற்றிய 'திருச்சிற்றம்பலக்கோவையார்' கோவை நூல்களில் நயமானது என்பதைத் தமிழறிஞர்கள் அனைவரும் ஒப்புக் கொள்வர். 'பாவை பாடிய வாயாற் கோவை பாடுக' என்று இறைவனே வேண்டிக் கொண்டதற்கு இணங்க அந்தக் கோவை பாடப் பெற்றதாகச் சொல்வார்கள். அத்தகைய சிறப்பு வாய்ந்த கோவை நூலிலிருந்து நான்கு காட்சிகளைத் தமிழ்ப் பத்தாண்டு மலரில் நம் நேயர்களுக்கு வழங்குகிறோம். தெய்வீகக் காதலை மானிடக் காதலின் உருவகத்தோடு வெளியிடும் இந்தக் கோவையின் காட்சிகளை 18, 19, 22, 23 ஆகிய நான்கு பக்கங்களில் அழகும் கைத்திறனும் பொருந்திய சித்திர மடலாக ஓவியர் மணியம் வழங்கியிருக்கிறார்.

### 1. எதிர்பாராத சந்திப்பு

சித்திரக் கோவை மடலில் இது முதற் காட்சி. மலைச் சாரலிலுள்ள ஒரு சோலையில் தாமரைப் பூப்போன்ற முகத்தில் கருநீலப்பூப் போன்ற கண்களும் கோங்கம் பூவையொத்த நெஞ்சகங்களும், காந்தள் பூவையொத்த கைகளுமாகப் பூக்களாலேயே ஒப்பிடத் தக்க தெய்வ நறுமலர் மாலை போன்றவளாகி மன்மதனுடைய வெற்றிக் கொடி நிமிர்ந்து நிற்பதென நின்ற அழகைத் தலைமகன் சந்தித்தான்.

**திருவளர் தாமரை சீர்வளர் காவிகள்**
**ஈசர் தில்லைக்**
**குருவளர் பூங்குமிழ் கோங்கு பைங்காந்தள்**
**கொண்டோங்கு தெய்வ**
**மருவளர் மாலையோர் வல்லியின் ஒல்கி**
**அனநடை வாய்ந்து**
**உருவளர் காமன்தன் வென்றிக் கொடிபோன்று**
**ஒளிர்கின்றதே**

[திருச்சிற்றம்பலக் கோவையார் பாட்டு-1]

### 2. நாணிக் கண் புதைத்தல்

தலைமகனின் நண்பன் அவளைக் கண்டு வந்து அவள் மானிடப் பெண்ணே என்று கூறித் தலைவனின் ஐயத்தைத் தீர்க்கிறான். மறுநாள் தலைமகன் அதே பொழிலில் சென்று அவளைக் காணும் போது அவள் நாணிக் கண் புதைக்கிறாள். அவனைக் கண்டதும் இரு உள்ளங்கைகளாலும் முகத்தை மூடிக் கொண்டு மூடிய கைகளின் விரலிடுக்கு வழியே அவனைக் காணவும் வழி செய்து கொண்டு ஒரு பூங்கொடியோடு துவண்டது போல் ஒதுங்கி மறைந்து நிற்கிறாள் அவள். "நீ உன் கண்களை மூடிக் கொண்டு நாணியதே நல்லது. பெண்ணே! இடைவிடாமல் உன் பார்வை என் மேல் தைக்குமானால் அதன் கூர்மையால் என் நெஞ்சு பிளந்து விடும். அப்படி நேராமல் நீயே கண் புதைத்து என்னைக் காத்தாய்" என்று அவளை நோக்கிக் கூறினான் தலைமகன்.

**"தாழச் செந்தார் முடி**
**தன்னடிக்கீழ் வைத்தவரை விண்ணோர்**
**சூழச் செய்தான் அம்பலம்**
**கை தொழாரின் உள்ளம் துளங்கப்**
**போழச் செய்யாமல் வைவேற்**
**கண் புதைத்துப் பொன்னே என்னை !**
**வாழச் செய்தாய் சுற்றும்**
**முற்றும் புதை நின்னை வாள் நுதலே."**

[திருச்சிற்றம்பலக் கோவையார் பாட்டு-43]

### 3. பிறை வணக்கம்

மலைச் சாரல் சோலையில் சந்தித்த ஆண்மகனிடம் மனத்தைப் பறி கொடுத்து விட்ட காரணத்தால் அந்த அழகியின் நடத்தையிலும், பழக்க வழக்கங்களிலும் தோற்றத்திலும் மாறுதல்கள் தெரிகின்றன. அவளுடைய தோழி மாலை வேளையில் வீட்டு முற்றத்துக்கு அவளை அழைத்துச் சென்று வானின் கோடியில் வெள்ளிக் கீற்றாய்த் தெரியத் தொடங்கி இருந்த 'பிறைச் சந்திரனை' வணங்குமாறு வேண்டுகிறாள். காதலனை அடைந்த மகளிர் பிற தெய்வங்களைத் தொழ மாட்டார்கள். பிறைக்கு முன் தலைவியைக் கொணர்ந்து நிறுத்தி விட்டுத் தோழி பிறையை நோக்கிக் கை கூப்பிக் கொண்டு தலைவியையும் தொழத் தூண்டிய போது தலைவி தொழாமலே நாணி நின்றாள். தோழிக்கு என்னவென்று புரியாமலா போகும்? கோவை இலக்கியத்தில் நயமான இந்தப் பகுதிக்கு 'நாண நாட்டம்' என்று பெயர்.

**"மைவார் கருங்கண்ணி! செங்கரம்**
**கூப்பு மறந்து மற்றப்**
**பொய்வானவரிற் புகாது**
**தன் பொற் கழற்கே அடியேன்**
**உய்வான் புகவொளிர் தில்லை**
**நின்றோன் சடைமேல் தொத்துச்**
**செய்வான் அடைந்த**
**பசுங்கதிர் வெள்ளைச் சிறுபிறைக்கே."**

(திருச்சிற்றம்பலக் கோவையார் பாட்டு-67)

### 4. பயங்கரச் செய்தி

'தலைவிக்கு ஏற்பட்ட மாறுதலின் காரணம் என்ன — அவள் எவரையேனும் காதலிக்கிறாளா?' என்பதை வேறு விதமாக அறிய விரும்புகிற தோழி முதலியவர்கள் — தலைவியின் மனத்தைக் கொள்ளை கொண்ட ஆண் அழகன் வழக்கமாக நடந்து வரும் மலை வழியைச் சொல்லி, "அடி, தலைவி! நேற்றிரவு வந்த வழியில் கட்டழகனான ஓர் இளைஞனைப் புலி அடித்துப் போட்டுவிட முயன்றதாமே! ஆனால் அவன் வேலை ஓங்கித் தப்பினானாமே, உனக்குத் தெரியுமா?" என்று பயங்கரச் செய்தி ஒன்றைச் சொல்லிக் கேட்டு அதனால் தலைவியின் முகத்தில் ஏற்படும் தவிப்பு—பயங்கரம், மருட்சி—ஆகிய உணர்வுகளைக் கொண்டு உண்மையைப் புரிந்து கொள்ள முயல்வர். கோவை இலக்கியத்தில் இந்த நுணுக்கமான பகுதிக்கு 'நடுங்க நாட்டம்' என்று பெயர்.

**'ஆவா இருவர் அறியா**
**அடி இல்லை அம்பலத்து**
**மூவா யிரவர் வணங்க**
**நின்றோனை உன்னாரின் முன்னித்**
**தீவாய் உழுவை கிழித்தது**
**அந்தோ சிறிதே பிழைப்பித்**
**தாவா மணிவேல் பணிகொண்ட**
**வாறு இன்று ஓர் ஆண்டகையே!"**

(திருச்சிற்றம்பலக் கோவையார் பாட்டு-72)




பிறை வணக்கம்



# மொடாக்குடி மாரப்பன்

மதுவிலக்குத் தொல்லை ஒழிந்தது. நான்கு மாதங்கள் ஆயின; கள்ளும் சாராயமும் பகிரங்கமாக விற்கப்பட்டன. நகரங்களும் கிராமங்களும் மதுக் கடலில் மிதந்தன.

ஃ ஃ ஃ

பட்டாபிராம கவுண்டர் நல்லமணியனூர் காங்கிரஸ் கமிட்டித் தலைவர். தகப்பனார் ஒரு சிறிய நூல் மில் அதிபர். படிப்பு குமார்.

அடிக்கடி பாலக்காட்டுக்கு வியாபார சம்பந்தமாகப் போய் வருவார். அவ்விடம் ஏதோ சிநேகம் ஏற்பட்டுக் கடைசியாக அவ்விடத்து மலையாள ஸ்திரீ ஒருவரை மணந்தார்.

ஃ ஃ ஃ

விவாகம் சுருக்கமாக மலையாளத்து வழக்கப்படி நடந்தது. அது முடிந்ததும் இருவரும் கார்த்திகை தீபத்தன்று ரயில் ஏறி நல்லமணியனூருக்குப் புறப்பட்டார்கள். நல்லமணியனூருக்கு ரயில் ஸ்டேஷன் சங்ககிரி துர்க்கம். ரயிலில் தனியாக ஒரு மேல் வகுப்புக் கம்பார்ட்மெண்டில் வந்தார்கள். வண்டியிலிருந்து ஸ்டேஷனில் இறங்கியதும் எல்லாரும் தம்பதிகளை உற்று உற்றுப் பார்த்தார்கள். மலையாள ஸ்திரீயும் வேளாள கவுண்டரும் ஜோடியாக வருவதைப் பார்த்து எல்லாருக்கும் ஒரு குறும்பு வியப்பு. தம்பதிகளுக்கும் கூச்சம். கவுண்டருடைய மோட்டார் கார் வந்து காத்திருந்தது. வேகமாகச் சென்று ஏறிக் கிராமத்துக்குப் போனார்கள்.

ஃ ஃ ஃ

"என்ன இப்படிப் பகிரங்கமாக நடந்து கொள்ளுகிறார்களே?" என்றார் நாயுடுகாரு ஸ்டேஷன் பிளாட்பாரத்தில். இவர் சங்ககிரியில் சில்லறைக்கடை வைத்து வாழ்க்கை நடத்தி வந்தவர்.

"இல்லையண்ணா. அவர்கள் இப்போது புருஷன் மனைவியாய் விட்டார்கள். நேற்றுதான் விவாகம் பாலக்காடு ராமன் நாயர் கலியாண மண்ட



''அண்ணே! இன்னிக்கு ஏதோ விபரீதம் நடக்கப் போகிறது. மொடாக்குடி மாரப்பன் சாராயம் குடித்துப் போட்டு அரிவாள் எடுத்துக் கொண்டு ஊரில் வெறி பிடித்துத் திரிகிறான்'' என்றான் இரும்புப் பட்டறை காளியப்பன்.

''ஆபத்துத்தான் கதவை மூடு!'' என்றான் காளியண்ணனுடைய நெருங்கிய சிநேகிதன் குப்பாசாரி — கதவை மூடி உள்ளே உட்கார்ந்து கொண்டு பேசிக் கொண்டிருந்தார்கள். அடுத்த நிமிஷத்தில் வாசலில் யாரோ கதவைத் தட்டினார்கள்.

''அடே, காளி! திறப்பாயா கதவு, இல்லை



உதைத்து உடைத்துப் போடவா?'' என்றான் வெளியே மாரப்பன்.

பதில் சொல்லாமல் நிசப்தமாக இருந்தார்கள்.

பத்தில் நடந்தது'' என்றார் ரயிலிலிருந்து இறங்கிய அவருடைய நண்பர்.

''நன்றாய்ப் போச்சு! நம்ம ஊர் வெள்ளாளக் குழந்தைகளுக்கு இனி மேல் கஷ்டம்தான். எல்லாரும் பாலக்காட்டுக்குப் போய் யாரை யாவது கட்டிக் கொண்டு வருவார்கள். காலம் ரொம்ப மோசமாய்ப் போச்சு'' என்றார்.

''இந்த விவகாரத்தில் நாம் ஏன் தலையிட வேண்டும்? அவர்களுக்கு மேலிடத்தில் செல்வாக்கு'' என்றார் நண்பர்.

''தெரியும், தெரியும்! நன்றாய்த் தெரியும்'' என்றார் நாயுடுகாரு.

நல்லமணிப்பூரில் பெரிய குழப்பம்.

பத்து இடி இடித்து விட்டுக் குடிகாரன் போய் விட்டான்.

ஃ ஃ ஃ

தெருவில் கார் வந்து நின்றது. பட்டாபிராம கவுண்டர் இறங்கினார்.

''அடே, காங்கிரஸ்காரனா, நீ? சாராயக் கடையைத் திறந்து போட்டு ஊரைக் குட்டிச்சுவராக்கினீர்களா? குடிகாரச் சோமாறி! சொல்லு, விடமாட்டேன்!'' என்றான் மாரப்பன் அரிவாளை வீசிக்கொண்டு.

குடி வெறியில் இருப்பதைக் கண்டு பட்டாபிராம கவுண்டர் ஒன்றும் பதில் சொல்லாமல் ஓர் அசட்டுச் சிரிப்புச் சிரித்து மனைவிக்குக் கைகொடுத்து அவளை வண்டியிலிருந்து இறக்கினார்.

மாரப்பன் 'கொல்' என்று சிரித்தான்.

"ஓஹோ! யாரைப் பிடித்துக் கொண்டு வந்தாய்? இந்த வேலையும் ஆரம்பித்து விட்டாயா?" என்றான்.

மறுபடி, "உன்னை விடமாட்டேன், இப்போது. யார் அந்தப் பொம்பளை, சொல்லு" என்று கத்தினான் அரிவாளை வீசிக் கொண்டு.

"சும்மா போ! மரியாதையாகப் பேசு" என்றார் பட்டாபிராமகவுண்டர்.

"மரியாதையா? கள்ளு சாராயக் கடைகளைத் திறந்து போட்டு ஊரைக் கெடுத்து, விபசாரித்தனம் வெட்கமில்லாமல் ஆரம்பித்தாயா? இன்னிக்கு உன்னை விடப் போவதில்லை" என்றான் மாரப்பன்.

வீட்டிலிருந்து இருவர் வந்து மத்தியில் நின்று, "சும்மா போ, போ" என்றார்கள்.

"உங்களுக்கு வெட்கமில்லையா, இந்த மாதிரி இந்தப் பயல் மானம் கெட்டு ஊர் திரிகிறது?" என்று மாரப்பன் அரிவாளை மேலே தூக்கிக் குடிகாரக் குதி குதிக்க ஆரம்பித்தான்.

"பைத்தியக்காரா! கவுண்டர் அந்த அம்மாளைக் கலியாணம் செய்து கொண்டு இன்று பாலக்காட்டிலிருந்து வந்திருக்கிறார். கள்ளு பின்னு என்று பேசாதே. போ!" என்றார்கள்.

"ஓஹோ! நம்ம கவுண்டச்சிமார்கள் உங்க கவுண்டனுக்குப் பிடிக்கவில்லையா? மலையாளச்சியைக் கட்டிக் கொண்டானு? போகட்டும். இன்னிக்கு விட்டேன். சரி, யாராயினும் என்ன? பொம்பளை என்று சும்மா விட்டேன்" என்று சொல்லி மற்றொரு தெருவுக்குச் சென்றான்.

"குடி வெறியிலும் கொஞ்சம் புத்தி இருக்கிறது" என்றார் பட்டாபிராம கவுண்டர்.

மனோன்மணி, (அதுதான் மலையாள மணமகளின் பெயர்) நடுங்கிக் கொண்டு நின்றாள். வீட்டுக்குள்ளே போக சங்கோசம். புருஷனுடைய கையைப் பிடித்துக் கொண்டு நின்றாள்.

"இந்தக் கள்ளுக்கடைகளை ஏனப்பா, திறந்து விட்டீர்கள்?" என்றாள் பட்டாபிராம கவுண்டரின் பாட்டியம்மை, வாசற்படிக்கு வந்து நின்று கொண்டு.

"இந்த மாரப்பன் இன்று யாரையாவது வெட்டித் தீர்த்து விடுவான்" என்று சொல்லியவாறு தம்பதிகளை வீட்டுக்குள் அழைத்துச் சென்றார். 'கதவை மூடித் தாழ்ப்பாள் போடு" என்று வேலைக்காரர்களுக்குச் சொன்னார் பட்டாபிராம கவுண்டர்.

❀ ❀ ❀

"சாராயக் கடையில் ரொம்ப வம்பு செய்கிறான் இந்த மாரப்பன். அவனை என்ன செய்வது என்று தெரியவில்லை" என்றார் பட்டாபிராம கவுண்டருடைய இறந்து போன முதல் மனைவியின் அண்ணன் ராமகவுண்டர். அவர் தான் பட்டாபிராம கவுண்டருக்காக நல்லமணியனூர் கள்ளுக் கடையையும் சாராயக் கடையையும் ஏலத்தில் எடுத்திருந்தார்.

"அந்தப் போக்கிரிக்கு அவன் கேட்டது உதுத்து விடுங்கள். பணம் கேட்க வேண்டாம்" என்றார் பட்டாபிராம கவுண்டர்.

"நாள் ஒன்றுக்கு நான்கு ரூபாய் சரக்குத் தீர்த்து விடுகிறான். மூன்று வேளையிலும் கடையில் வந்து உட்கார்ந்து கொண்டு போக மாட்டேன் என்கிறான்" என்றார் ராமகவுண்டர்.

"எப்படியாவது போகட்டும். அவனைப் பணம் கேட்காதீர்கள். அவன் எங்கிருந்து கொடுப்பான்?" என்றார் கவுண்டர்.

❀ ❀ ❀

அடுத்த தை மாதம். பொங்கல் விழா. மாரப்பனை யாரோ கொன்று விட்டார்கள்; குத்தப்பட்டுக் கிடக்கிறான் என்று நல்லமணியனூரெல்லாம் கும்பல் கூடி விட்டது. போலீசாரும் வந்தார்கள்.

காயம் எங்கும் காணோம். குடித்து மயக்கம் தட்டிச் செத்துப் போய் விட்டான். கீழே கல்லின் மேல் விழுந்து ரத்தம் பெருகிற்று என்பது போலீசாரின் முடிவு. ஆனாலும் பட்டாபிராம கவுண்டரின் ஆள்காரன் குப்பனை 'அரெஸ்ட்' செய்து போலீஸார் இட்டுக் கொண்டு போனார்கள்.

❀ ❀ ❀

"குப்பன் ஏதோ வாக்குமூலம் கொடுத்திருக்கிறானாமே?" என்றார் ராம கவுண்டர்.

"நம்ம பேரில் ஏதோ சொல்லிவிட்டானாமே" என்றாள் மனோன்மணியம்மை.

"இந்த அவமானம் நமக்கு வந்ததே" என்றாள் கிழவி.

"இதற்கெல்லாம் பயப்பட வேண்டாம்!" என்றார் பட்டாபிராம கவுண்டர்.

அடுத்தநாள் சென்னைக்குச் சென்றார்.

❀ ❀ ❀

எட்டு நாட்கள் கழிந்தன. கேசு ஒன்றுமில்லை; குப்பனை விடுதலை செய்து விட்டதாகச் செய்தி வந்தது. மங்களம்.

# மணியான நாடகங்கள் மூன்று



மாரிக் காலத்தில் அழுது கண்ணீர் விடுகிற இயற்கை அன்னை, இளவேனிற் காலத்தில் ஆயிரமாயிரம் புத்தம் புதிய மலர்களாய்ச் சிரித்து மகிழ்கிறாள். கோடைக் காலத்திலோ அவள் கோபம் உச்ச நிலையை அடைகிறது. அதே போல் அந்தந்தச் சூழ்நிலைக்கு ஏற்ப, குதூகலமாய் உரையாடி சந்தோஷிப்பவனாகவும், அநீதிக்குப் பணியாமல் திடமான நெஞ்சத்துடன் உக்கிரமான போராட்டம் நடத்துபவனாகவும், அன்பும் பண்பும் கொண்டு அணைத்துப் பேசுகிறவனாகவும் விளங்குகிறவன் தாமஸ் மோர். எக்காலத்துக்கும் ஏற்ற மனிதன். (A man for all seasons) பதினாறும் நூற்றாண்டில் எட்டாவது ஹென்றியின் காலத்தில் வாழ்ந்தவன். அவன் கொண்டிருந்த ராஜ விசுவாசம் அளப்பரியது என்றாலும், மன்னனுடைய கருத்துக்களுக்கும் தனது மதக் கோட்பாடுகளுக்கும் ஒத்து வராத போது அவன் மனச்சாட்சியைக் கொன்றுவிட மறுக்கிறான். கடைசியாக அவன் தூக்கு மேடைக்கு அழைத்துச் செல்லப்படுகையில், மரணத்தைத் தழுவுவதானாலும் பரவாயில்லை, உள்ளத்தின் சத்தியக் குரலுக்குக் கட்டுப்பட்டே நடப்பேன் என்ற சோக்ரதரின் நினைவு வருகிறது நமக்கு. அற்புதமான நாடகம்; அசாத்தியமான நடிப்பு.

ஷேக்ஸ்பியரின் ஹாம்லெட் (Hamlet) வாழ்வதா சாவதா என்ற கேள்வியைத் தனக்குத் தானே கேட்டுக் கொண்டு பதிலும் கூறுகிறான். நடக்கும் அநீதிகளைப் பொறுத்துக் கொண்டு கனவிலும் நனவிலும் துன்பப் பட்டுப் புழுங்குகிற கோழை செத்தவனுக்கு ஒப்பாவான்; அதர்மத்தை எதிர்க்கத்தான் வேண்டும், வாளா இருக்கக் கூடாது என்றெல்லாம் தீர்மானிக்கிறான். வாளெடுத்து வீசுகிறான்; வாழ்வையும் பலி கொடுக்கிறான். ஹாம்லெட்டின் வாய்மொழியாகவே மற்று மோர் இடத்தில் நடிகர்கள் எப்படி நடிக்க வேண்டும் என்பதற்கு இலக்கணம் வகுத்துக் கொடுக்கிறார் ஷேக்ஸ்பியர். அந்த நெறி பிறழாமல் நடித்தார்கள் என்றாலே நாடகத்தின் சிறப்பை எளிதில் ஊகிக்கலாம். புகழ்பெற்ற நாடகம், பிரமாத நடிப்பு.

அடுத்த நாடகம் பெர்னார்ட்ஷாவினுடையது. வீரன் முதல் வேலையாள் வரையில் ஒவ்வொரு மனிதனும் அணிக்கும் போலியான வெளித் தோற்றத்தைக் கிழித்தெறிந்துவிட்டு உள்ளே ஒளிந்து கொண்டிருக்கிற உண்மையான மனிதனை அவர் வெளிக் கொணருகிற அழகு இருக்கிறதே...! ஆயுதங்களும் மனிதனும் (Arms and the man) என்ற நாடகத்தில் சமூகத்தை ஷா செய்கின்ற கிண்டலுக்கும் கேலிக்கும் கேட்கவா வேண்டும்?

நகைச்சுவை மிக்க நாடகம்; நயம்பட அமைந்த நடிப்பு.

இங்கிலாந்திலிருந்து பிரிட்டிஷ் கவுன்ஸிலின் ஆதரவில் பிரிஸ்டல் ஓல்ட் விக் கம்பெனியார் பாரத நாட்டுக்கு வந்து முக்கியமான நகரங்களில் இம்மூன்று மணியான நாடகங்களை அரங்கேற்றினார்கள்.

நடிகர்கள் அனைவருமே சிறப்பாகத் தங்கள் பணியைச் செய்தமையால் எந்த நடிகரையும் குறிப்பிட்டுக் கூறாமல் அனைவருக்குமாகச் சேர்த்து டைரக்டர் டென்னிஸ் கேரியிடம் (மேலே உள்ள படம்) நமது பாராட்டுதல்களையும் வாழ்த்துக்களையும் தெரிவித்து விடுவோம். அடுத்த இரண்டு பக்கங்களில் நாடகக் காட்சிகள் சிலவற்றைக் காணலாம்.

## அடுத்த இதழில்

கி. வா. ஜகந்நாதன் எழுதும்
வைதா' வாழ்த்து

தமிழ் வாழும் திருவான்மியூர்
—மணியத்தின் சித்திரங்கள்

மறக்க முடியாத திரைப்படங்கள்
—சபாபதி

மேமாதத்திய
நெடுங்கதை
சோழ
எழுதுகிறார்



அரசன் ஆணையிட்டாலும் சரி, உள்ளத்தில் எழும் சத்தியக் குரலுக்கு விரோதமாக நடந்து கொள்ள மாட்டேன் என்ற உறுதியுடன் நின்ற உத்தமன் தாமஸ் மோரின் கதை 'எக்காலத்துக்கும் ஏற்ற மனிதன்.' தாமஸை எதிர்த்துத் தனித்து நிற்கும் திராணி இழந்த அரசன் ஹென்றி, தமது கருத்துக்கு ஆதரவு நாடி வஞ்சகன் கிராம் வெல்லை ஊன்றுகோலாய் உபயோகித்துச் சாய்ந்து விட்டான். தாமஸை வழிக்குக் கொணருகிற பொறுப்பையும் அவன் தோள்மீதே சுமத்துகிறான். அரசனுக்கு இடப்புறத்தில் நிற்பவர் எல்லாருக்கும் நல்லவராய் விளங்க விரும்பும் டியூக்.

அரசர்களுக்கும் அவர்களின் அரசியல் சூழ்ச்சிகளுக்கும், மத குருமார்களுக்கும் மனச்சாட்சியைக் கொன்றவர்களுக்கும் இடையில் உலவி வருகிற 'சாதாரண மனிதன்.' செல்வம் மிக்கவர்களின் நடத்தை தன்னிடத்தில் சிரிப்பைக் கிளர்ந்தெழச் செய்த போதிலும், அவர்களின் சினத்துக்கு அஞ்சி நாடகம் பார்ப்போருடன் மட்டும் தனது உள்ளக் கருத்துக்களைப் பகிர்ந்து கொள்கிறவன்.





அன்பு மனைவியுடனும் அருமைப் பெண்ணுடனும் அமைதியாகக் காலம் ஓட்டிய தாமஸ் மோரின் வாழ்வில் சூறாவளி வீசுகிறது. மனச்சாட்சிக்கு விரோதமாய் அவர் நடந்து கொள்ள மறுத்ததால், சத்தியப் பாதை தம்மைத் தூக்கு மேடைக்கு இட்டுச் சென்ற போதிலும் தமது லட்சியத்தைக் கைவிடாத தீரர், எக்காலத்துக்கும் ஏற்ற மனிதர். இந்தக் காலத்துக்குத் தேவையானவர்.



தலைவனுடைய உயிரை மட்டுமல்லாது அவன் முடியையும் மனைவியையும் கூடத் தனக்கெனப் பறித்துக் கொண்ட அரசனும், கணவனை இழந்த போது வடித்த போலிக் கண்ணீரின் உவர்ப்பு நீங்கு முன்னர் மறுமணம் புரிந்து கொண்ட அரசியும்.

கீழே: பிரான்ஸுக்குச் சென்று திரும்பும் லயர்டெஸ் தந்தையின் மரணத்தைப் பற்றியும் தங்கைக்குப் பைத்தியம் பிடித்து விட்டதையும் அறிந்து சினம் கொண்டு சீறுகிறான்.

ஷேக்ஸ்பியரின் ஹாம்லெட்டில் தனி ஒருவனுக்கு ஏற்படுகிற சிக்கல்களை மட்டும் நாம் காண்பதில்லை. இவவற்றை எதிர்க்க வேண்டிய கடமை கொண்ட மனித சமுதாயத்தின் கதை அது. அந்தச் சமுதாயத்தின் பிரதிநிதியாக மேடையில் தோன்றுபவன் ஹாம்லெட்.





# முதல் மூவர்

திருக்கோவலூர் வீதியில் ஒரு நாள் மாலை பெரியவர் ஒருவர் நடந்து சென்று கொண்டிருந்தார். அப்போது திடீரென்று மழைக் காற்று வீசத் தொடங்கிற்று. யாத்திரிகர் ஒரு வீட்டு வாசலிலே ஒதுங்கி நின்றார். இதைக் கண்ட அந்த வீட்டின் சொந்தக்காரர் வெளியே வந்தார். உள்ளே வந்து அவரைத் தங்கும்படி வேண்டினார். 'ரேழி' என்று அழைக்கப்படும் இடைகழியில் நின்று, "இதில் ஒருவர் படுப்பதற்கு இடம் இருக்கிறது. இரவுப் பொழுதை இங்கே கழிக்கலாம்!" என்றார். யாத்திரிகர் உள்ளே சென்று இடைகழியில் படுத்துக் கொண்டார்.

வாடைக்காற்று சிறு தூறலாயிற்று. அப்போது இன்னொரு பெரியவர் அங்கே வந்தார். "மழைக்கு ஒதுங்க இடம் உண்டா?" என்று கேட்டார். இரேழியில் படுத்திருந்தவர் சொன்னார்: "வாருங்கள் உள்ளே! இங்கே ஒருவர் படுக்கலாம். இருவர் இருக்கலாம்!" இவ்வாறு சொல்லி இரண்டாவது யாத்திரிகருக்கு இடம் கொடுத்தார் முதலாவது யாத்திரிகர்.

சற்று நேரத்தில் மழை பலமாகப் பெய்யத் தொடங்கிற்று. அப்பொழுது இன்னொரு முனிவர் மழைக்கு ஒதுங்குவதற்காக அங்கே வந்து சேர்ந்தார். இருவர் ஒதுங்கியிருப்பதைக் கண்டு தயங்கியவாறு தமக்கும் இடம் கிடைக்குமோ என்று கேட்டார். இருவரும், "இங்கே ஒருவர் படுக்கலாம், இருவர் இருக்கலாம், மூவர் நிற்கலாம்!" என்று சொல்லி அவரையும் வரவேற்று எழுந்தருளச் சொன்னார்கள். அப்பொழுது மழை அதிகமாகி இருள் கவிந்தது. இருட்டிலே மூவரும் ஒருவரை யொருவர் விசாரித்து அறிந்து கொண்டார்கள். அப்போது மூவருக்கும் மேலாக ஒரு நெருக்கடி உண்டானதை மூவரும் உணர்ந்தார்கள். மூன்று பக்தர்கள் சேர்ந்த இடத்தில் நாலாவதாக எம்பெருமான் வந்து சேர்ந்து விட்டான்!

முதலாவது யாத்திரிகரே பொய்கை யாழ்வார். இரண்டாவது மகான் பூதத்தாழ்வார். மூன்றாவது யாத்திரிகர் பேயாழ்வார் என்ற ஞானி.

இந்தக் கதை முதலாழ்வார்கள் மூவருடைய அந்தாதியின் தோற்றத்தோடு பரம்பரையாக வந்த வரலாறு.

இந்த மூவரும் உலக அந்தகாரத்திலே இறைவனைக் காணுவதற்கு ஏந்திய ஞானத் தமிழ் விளக்குத்தான் முதல் மூன்று திருவந்தாதிகள். **முதல்** ஆழ்வார்கள் என்று இந்த மூன்று முனிவர்களை வணங்கப் பெறுகிறார்கள்.

முதல் அந்தாதியின் முதலாவது பாட்டே பொய்கையார் ஏந்திய தீபத்தை எடுத்துக் காட்டுவது போல் அமைந்திருக்கிறது.

**வையம் தகளியா**

[வையம் — பூமி. தகளி — அகல்.]

**ராஜாஜி-சோமு**

இந்த நிலவுலகமே தகளியாகவும்.

**வார்கடலே நெய்யாக**

[வார்கடல் — பெருகி நிற்கிற கடல்.]

வையகம் அகலாக விளங்குகிறது. அந்த அகலில் நிற்கிற எண்ணெய் எது? பெருகி நிற்கும் கடல்தான்! இனி, அந்த விளக்கிலே சுடரை இடுகிறார் ஆழ்வார்.

**வெய்ய கதிரோன்**
**விளக்காக—**

[வெய்ய கதிரோன் — பிரகாசமாக எரிகின்ற கதிர்களை உடைய சூரியன். விளக்காக- தீபமாகவும்.]

இந்த விளக்கை ஏற்றிய பிறகு ஆழ்வார் மாலை அணிவிக்கிறார் மூர்த்திக்கு.

**—செய்ய**
**சுடர்ஆழி யான்அடிக்கே**
**சூட்டினேன் சொல்மாலை**

[செய்ய — சிவந்த. சுடர் ஆழியான் அடிக்கே — பிரகாசம் வீசுகிற சக்கராயுதத்தை யுடைய திருமாலின் பாதங்களிலே. சொல்மாலை — சொல்லால் தொடுக்கப்பட்ட மாலையாகிய எனது பாடலை. சூட்டினேன்—சமர்ப்பணம் செய்தேன்.]

இப்படிச் சூட்டியதன் உத்தேசம் என்ன?

**இடர்ஆழி நீங்குகவே**
**என்று**

[இடர் — மக்களின் துன்பமாகிய. ஆழி — சமுத்திரம். நீங்குகவே என்று — விலகுமாக என்று.]

கதிரவன் தீபத்தின் சுடராகவே ஆகுமானால், அனைத்துக்கும் காரணனை ஈசுவரனுடைய அனலை ஒருவாறு மனத்தில் பாவித்துக் கொள்ளலாம். பூமியும், கடலும், கதிரவனும் அவனுக்கு முன்னால் வைக்கப்படும் ஒரு விளக்கு!




உதய காலத்திலே கடலையும் அதிலிருந்து கிளம்பி எரிகிற சூரிய சோதியையும் கண்டு அனுபவித்த கவிஞர் பொய்கையார்! அவருடைய பக்தி மயமான உள்ளத்திலே நிலவுலகம் ஓர் அகலாகவும், கடல் நீர் நெய்யாகவும், சூரியனே சுடராகவும் காட்சி தருகின்றன. விசுவமான இந்தத் தீபத்தை இறைவனுடைய சந்நிதியிலே ஏற்றி வைத்து, ஞானத் தமிழாகிய சொல்மாலையை அவ

னுடைய பாதங்களிலே சூட்டுகிறார் பொய்கையாழ்வார்!

இனி, முதலாழ்வார்களில் இரண்டாவது முனிவரான பூதத்தாழ்வாருடைய அந்தாதியில் சூடாமணியாக விளங்கும் முதலாவது பாடல்:

**அன்பே தகளியா**
**ஆர்வமே நெய்யாக**
**இன்புருகு சிந்தை**
**இடுதிரியா —**

[அன்பு — பக்தி. ஆர்வம் — பக்தியானது இடைவிடாமல் நெய்போல் ஒரு தாரையாக இயங்கும் ஆர்வம். இன்பு — ஆனந்தம். சிந்தையானது உருகி ஆனந்தமாகிறது.]

உள்ளத்தின் அன்பே தகளியாகவும், ஆர்வமே நெய்யாகவும், ஆனந்தமாக உருகுகிற சிந்தையே திரியாகவும்.

**— நன்புஉருகி**
**ஞானச் சுடர்விளக்கு**
**ஏற்றினேன் நாரணற்கு**
**ஞானத் தமிழ்புரிந்த**
**நான்!**

[நன்பு — ஞானம். நன்புருகி — ஆன்மா உருகித் தன் ஞான சொரூபத்தை அடைந்து. நாரணற்கு — நாராயணனாகிய இறைவனுக்கு.]

நாரணற்கு ஞானத் தமிழ் செய்த நான் என்றும், நாரணற்கு ஞானச் சுடர் விளக்கு ஏற்றினேன் என்றும் இரண்டு பக்கத்திலும் சேர்த்துப் பொருள் கொள்ளும்படி 'மத்திய தீபமாக' நாரணற்கு என்ற பதம் அமைந்திருக்கிறது!

இனி மூன்றாவது அந்தாதியின் சூடாமணி:

**திருக்கண்டேன் பொன்மேனி**
**கண்டேன் திகழும்**
**அருக்கன் அணிநிறமும்**
**கண்டேன் —**

[திரு — லக்ஷ்மி. திருக்கண்டேன் — லக்ஷ்மி தேவியைத் தரிசனம் செய்தேன். பொன்மேனி கண்டேன் — லக்ஷ்மி நாராயணனுடைய பொன்மேனியைத் தரிசித்தேன். திகழும் அருக்கன் அணிநிறமும் — சூரியப் பிரகாசமாக விளங்கும் அவனுடைய ஜோதி சொரூபத்தை]

**செருக்கிளரும்**
**பொன் ஆழி கண்டேன்**

[செரு — யுத்தத்தில். கிளரும் — சிறப்புற்று விளங்குகிற. பொன் ஆழி கண்டேன் — அழகிய சக்கராயுதத்தைத் தரிசித்தேன்.]

**புரிசங்கம் கைக்கண்டேன்**
**என் ஆழி வண்ணன்பால்**
**இன்று**

[புரி — ஒடுங்கிய. சங்கம் கைக்கண்டேன் — கையிலே சங்கு தரித்திருக்கக் கண்டேன். என் — என்னுடைய. ஆழி வண்ணன்பால் — கடல் நிற வண்ணனாகிய திருமாலிடத்தில்.]

பொய்கையாழ்வார் பூமியைத் தகழியாக்கினார். பூதத்தாழ்வார் தமது அன்பையே தகழியாக்கினார். பொய்கையாரின் விளக்குக்குக் கடல் நெய்யாயிற்று. பூதத்தாருக்கோ இதயத்தின் பக்தியார்வமே நெய்யாயிற்று. அவர் சூரியனைத் தீபமாகக் கொண்டார். இவர் சிந்தையைத் திரியாக இட்டு ஞானச் சுடரை ஏற்றினார். பேயாழ்வார் லக்ஷ்மி சமேதனை விஷ்ணு மூர்த்தியை நேரே கண்டார்.

மூன்று ஆழ்வார்களும் கண்ட இந்த ஞானக் காட்சியிலே பரவசப் பாடல்கள் பிறந்தன!

மூன்று திருவந்தாதிகளும் முதலாழ்வார்கள் ஈசுவர சந்நிதியில் இரவில் நின்றிருக்க இடத்திலேயே தோன்றின என்றும், தோன்றிய இடத்திலேயே சர்வேசுவரன் பாதங்களில் சமர்ப்பித்தனர் என்றும் பரம்பரை ஐதீகம். இவற்றில் சில பாடல்களை எடுத்துப் பரம்பரை ஆசிரியர்களின் உரைகளை யொட்டி, எளிய தமிழில் விளக்க வேண்டும் என்பது இந்தத் தொடரின் நோக்கம் ஆகும்.

---

## மானும் மங்கையும்

"மங்கையராகப் பிறப்பதற்கே — நல்ல
மாதவம் செய்திட வேண்டுமம்மா" — கவிமணி

இவ்விதழ் அட்டையில் உள்ள மானையும் மங்கையையும் பார்க்கும்போது யார் அதிக அழகு என்பது தெரியாமல் தவித்துப் போகிறோம். அந்த மங்கை அந்த மானிடம் எவ்வளவு அன்பு காட்டி நீவி விடுகிறாள் என்பதை உணர்ந்து வியக்கிறோம். இந்தப் பாசம் எத்தனையோ யுகங்களாக இருந்து வந்திருக்கிறது; எத்தனையோ அரிய இலக்கியங்களைப் படைத்திருக்கிறது!

சீதை பொன் மானைப் பிடித்துத் தா வென்று ராம பிரானைக் கேட்க வில்லையானால் ராமாயணமே ஏற்பட்டிராதே! சகுந்தலை கண்வர் ஆசிரமத்தில் மானுடன் பழகியதைக் கவி காளிதாஸர் எவ்வளவு அருமையாக வர்ணித்திருக்கிறார்!

மானையும், மானை நிகர்த்த மங்கையையும் இப்புத்தாண்டு மலரின் மேலட்டையில் கண்கவர் வண்ண ஓவியமாக வழங்கி யிருக்கிறார் கல்லூர் மணியம்.






உல்லாசப் பிரயாணத்திற்கு உகந்தது

## அம்பீஸ்

★ ஆவக்காய் ★ மாங்காய் ★ எலுமிச்சம்

முதலிய ஊறுகாய் வகைகள்

தயாரிப்பாளர்கள்:

## அம்பீஸ் கபே

6, பிராட்வே ...... சென்னை-1

சிங்கப்பூர், மலேயா & மத்தியகிழக்கு நாடுகளிலும் கிடைக்கும்

LRS/AC/20

# பசி அரக்கன் பதறி ஓடுகிறான்

எம். எஸ். சிவஸ்வாமி

மனித சமூகம் தோன்றிய காலத்திலிருந்தே பசிப் பிரச்னையும் தொடர்ந்து இருந்து வருகிறது. ஆதி மக்கள் இடம் பெயர்ந்து புதுப் புது பிரதேசங்களுக்குச் சென்று குடியேறியது கூட உணவைத் தேடியேதான். உலக மக்களின் வரலாற்றில் எந்தக் காலத்திலுமே பசிப் பிணியிலிருந்தும் பட்டினியிலிருந்தும் எல்லா மக்களுக்கும் பூரண விடுதலை கிடைத்ததில்லை. இப்போதும் எல்லா நாடுகளின் ஒத்துழைப்பும் இருந்த போதிலுங்கூடப் பசியினின்று பூரண விடுதலை பெறும் பொற்காலம் வெகு தொலைவில்தான் உள்ளது.

எனினும் இந்த லட்சியத்தை நோக்கிச் செல்லும் முயற்சியை மனித சமூகம் கைவிடவில்லை; மிகத் தீவிரமாகவே செயல்படுகிறது. இதற்கு ஒரு காரணம், இந்தப் பிரச்னையின் முக்கியத்துவத்தையும், வருங்காலத்தில் பசியினாலும் பட்டினியாலும் மக்கள் இன்னும் அதிகமாகப் பீடிக்கப்படுவர் என்பதையும் அறிஞர்களும் விஞ்ஞானிகளும் உணர்ந்திருப்பதே. உலகத்தின் முந்நூறு கோடி மக்களில் பாதிப் பேர் அரைப் பட்டினி, கால் பட்டினியிலே வாழ்கின்றனர். இவர்களில் சுமார் ஐம்பது கோடி மக்கள் பின்தங்கிய பிரதேசங்கள் என்று சொல்லப்படும் ஆசிய ஆப்பிரிக்க கண்டங்களில் பரிதாபகரமான வறுமை நிலையில் உழலுகின்றனர். சத்துக் குறைவான ஆகாரத்தினால் மட்டும் இரண்டரைக் கோடி மக்கள் ஆண்டுதோறும் இறந்து போகின்றனர். பல கோடி மக்கள் சோர்வுற்று வலிமை குன்றிச் சக்தி இழந்து காலம் தள்ளுகின்றனர். எப். ஏ. ஓ. என்னும் உணவு விவசாய, உலக ஸ்தாபனத்தின் கணக்குப்படி நிலைமை, இப்படியே சென்றால் அடுத்த முப்பது முப்பத்தைந்து ஆண்டுகளுக்குள் உலக மக்களின் ஜனசங்கியை அறுநூறு கோடியாக உயரும் போது, முழுப்பட்டினியாலும் அரைப் பட்டினியாலும் பீடிக்கப்படும் மக்களின் எண்ணிக்கை பன்மடங்கு அதிகரிக்கும்.



திரு பி. ஆர். ஸென்

இப்பிரச்னை எவ்வளவு பெரியது என்பதை எடுத்துக் காட்டவும், உலக மக்களை இவ்விஷயம் குறித்துச் சிந்திக்க வைக்கவும் எப். ஏ. ஓ. ஸ்தாபனம் சென்ற பதினைந்தாண்டுகளாக முயன்று வருவதுடன், பசிப் பிணியைத் தீர்க்க உருப்படியான நடவடிக்கைகளையும் எடுத்து வருகிறது. இந்த நடவடிக்கைகள் பிரதானமாக ஐந்து துறைகளில் மேற்கொள்ளப்படுகின்றன.

1. உலகின் எல்லா நாடுகளிலும் நீர்வளம் நிலவளம் மிகுந்த பிரதேசங்கள் எவை என்று ஆராய்வது; 2. ஜல வசதியுடன் கூடிய ஆனால் விவசாயத்துக்குக் கொண்டு வரப்படாத லட்சக்கணக்கான ஏக்கர் நிலங்களை உற்பத்திக்குக் கொண்டு வரவும், அதற்காக யந்திர சாதனங்கள், உரம், இதர உதவிகள் அளிக்கவும் ஏற்பாடுகள் செய்வது; 3. கடலில் உள்ளதும் மனிதனுக்கு உணவாகக் கூடியதுமான பல வகைப் பொருள்களைச் சேகரித்து, கடலோரம் வாழும் மக்களுக்கு மட்டுமின்றி உட்பகுதிகளில் வசிக்கும் மக்களுக்கும் கிடைக்கும்படி செய்வது; 4. கால்நடைச் செல்வங்களைப் பாதுகாக்கவும் மண்வளத்தை அபிவிருத்தி செய்யவும் சீரான யோசனைகளைக் கூறி மக்களின் அறிவை வளர்ப்பது; 5. உணவு உற்பத்தித் துறையில் நாட்டின் வளங்களைப் பூரணமாகப் பயன்படுத்திக்கொள்ள வேண்டும் என ஒவ்வொரு தேசத்தின் அரசாங்கத்தையும் கேட்டுக்கொண்டு அதற்கான ஆலோசனைகளையும் தெரிவிப்பது.

இந்த உயர் பணியைச் சென்ற ஒன்பது ஆண்டுகளில் இந்த ஸ்தாபனம் போற்றத்தக்க முறையில் செய்து

தனி ஒருவன் பசிப் பிணியிலிருந்து விடுதலை பெற்று விட்டால் மட்டும் போதாது. உலக மக்களில் ஒவ்வொருவரும் பசியிலிருந்து விடுதலை பெற்ற பின்னரே, தனி ஒருவன் பெற்ற விடுதலை உண்மை விடுதலையாகும். அந்த நிலை எய்தும் வரை ஒருவனுடைய சௌக்கியம் உண்மையான சுக வாழ்வு ஆகாது. நிரந்தரமான சுக வாழ்வும் அல்ல.

— பி. ஆர். சென்
எப். ஏ. ஓ. தலைவர்

வருகிறது. ஏறக்குறைய இரண்டாயிரத்தைந்நூறு நிபுணர்களையும் அனுபவம் மிக்க அறிவாளிகளையும் உலகெங்கிலுமுள்ள எண்பது நாடுகளுக்கு உணவு உற்பத்தியின் பல்வேறு அம்சங்களைப் பற்றியும் ஆலோசனை கூற அனுப்பி வைத்திருக்கிறது. இந்த நிபுணர்கள் உலகின் பல்வேறு நாடுகளைச் சேர்ந்தவர்கள். நெற்பயிர் விளைச்சலை அதிகரிக்கச் செய்ய இந்திய நிபுணர்கள், மீன் வள ஆராய்ச்சி நடத்த நார்வேஜியர்கள், கால் நடைகளைப் பராமரிக்கும் கலையினைப் போதிக்க அமெரிக்கர்கள், புல் வெளிகளின் செல்வச் சிறப்பை உணர்ந்தும் டேனிஷ் நிபுணர்கள், பழ வகைகளைப் பாதுகாக்கும் முறைகளை எடுத்துக்கூற இத்தாலிய அறிஞர்கள் — இப்படிப் பலர் இந்த ஸ்தாபனத்துக்காகப் பணியாற்றுகின்றனர். இவர்கள் தனியாகவும், கோஷ்டியாகவும் வெவ்வேறு நாடுகளுக்குச் சென்று அந்தந்த அரசாங்கத்தின் ஒத்துழைப்பைக் கோரிப் பெற்றுக் குறிப்பிட்ட ஸ்தலங்களுக்கு நேரில் போய் விவசாயிகளுடனேயே தங்கி அளவளாவி அவர்களுடைய தேவைகளை உணர்ந்து. ஆலோசனைகளைச் சொல்லுகின்றனர். சில நாடுகளில் இவர்கள் மாதக் கணக்கில், வருஷக் கணக்கில் கூடப் பணியாற்றுகின்றனர்.

பதின்மூன்று கோடி மக்கள் வாழும் கங்கை — பிரம்மபுத்ரா பிரதேசத்தை ஒரு எப். ஏ. ஓ. குழு ஆராய்ச்சி செய்தது. அங்கே வீணாகப் போய்க் கொண்டிருக்கும் நீர் வசதியைப் பயன்படுத்திக் கொண்டாலே, தற்போதுள்ள விளைநிலத்தை நான்கு மடங்காகப் பெருக்க முடியும் என்று நிபுணர்கள் கணக்கிட்டார்கள். இதற்கு ஆதாரமாகத் தென் ஆஸ்திரேலியா, உருகுவே, தென் பிரேஜில் முதலிய நாடுகளில் தாங்கள் மேற்கொண்ட முயற்சிகளில் வெற்றி கண்டிருப்பதை எடுத்துக் காட்டினார்கள். நானூறு லட்சம் ஏக்கரே விவசாயத்திலுள்ள இப் பிரதேசத்தில் 160 லட்சம் ஏக்கர் சாகுபடிக்குக் கொண்டு வர முடியும் என்று தக்க ஆதாரத்துடன் கூறியுள்ளார்கள்.

ஹாங்காங் மிகச் சிறிய பிரதேசம். இங்கே ஜனசங்கியை ஏற்கனவே வேகமாகப் பெருகி வருகின்ற காலத்திலே, கம்யூனிஸ்டு சீனாவிலிருந்து தப்பி வந்த கணக்கற்ற அகதிகளின் பிரச்னை தலைவேதனை அளித்து வந்தது; அவர்களுடைய உணவுப் பிரச்னை தீராததோ என்று கூடத் தோன்றியது. இதனை நல்ல முறையில் சமாளிக்க எப். ஏ. ஓ. நிபுணர்கள் யோசனை தெரிவித்தார்கள். அதன்படி பல ஏக்கர் விஸ்தீரணமுள்ள பூமி கடலிலிருந்து மீட்கப்பட்டது. இந்நிலங்களில் அகதிகள் குடியேற்றப்பட்டனர். பெரிய பெரிய குளங்கள் பல அமைக்கப்பட்டன. அந்தக் குளங்களில் மீன் வளம் பெருகுவதற்கு ஏற்பாடுகள் செய்யப்பட்டன. அகதிகள் மீன் பிடிக்கும் தொழிலில் ஈடுபட்டனர். பசி அறியாத நல்வாழ்வைப் பெற்றனர்.

ஓர் ஏக்கர் பரப்புள்ள மீன் குளத்திலிருந்து ஆண்டுக்கு ஐந்நூறு டாலர் (சுமார் 2500 ரூபாய்) வருமானம் கிடைக்க வழி ஏற்பட்டிருக்கிறது என்றால் ஆச்சரியமாயிருக்கும். அகதிக் குடும்பங்கள் பல, கோழிப் பண்ணைகளையும் வைத்து வருவாயைப் பெருக்கிக் கொண்டு தங்கள் வாழ்க்கைத் தரத்தை உயர்த்திக் கொண்டிருக்கின்றன.

நமது அண்டை நாடாகிய பர்மாவில் கால்நடை ஆராய்ச்சிக்கென்ற ஒரு நிலையம் அமைக்கப்பட்டிருக்கிறது. கால்நடை மருத்துவப் பட்டம் பெற்ற டாக்டர்களாக வெளிவரப் பலருக்கு இங்கே வாய்ப்பு அளிக்கப்பட்டிருக்கிறது. ஐம்பது லட்சம் கால்நடைகள் உள்ள பர்மாவில் அவற்றின் பராமரிப்புக்கென இன்று எட்டு வைத்தியர்களே இருக்கின்றனர். இந்தக் குறைவைத் தீர்க்கவே மேலே சொன்ன மருத்துவசாலை செயல்படுகிறது. இந்த வசதியைப் பயன்படுத்திக் கொள்ள மக்களும் பேரார்வத்துடனே இருக்கின்றனர். இருபது மாணவர்கள் அனுமதிக்கப்படுவார்கள் என்று செய்யப்பட்ட விளம்பரம் ஒன்றுக்கு இரண்டாயிரம் மனுக்கள் வந்து சேர்ந்தன என்னும் போது ஊக்கமும் வசதிகளும் தரப்பட்டால் முன்னேற்றமடைய மக்கள் எத்தனை துடிப்புடன் இருக்கிறார்கள் என்பது விளங்கும். மாணவர்களுக்குக் கல்வி அளிப்பதுடன், கால்நடைகளைப் பற்றிய விரிவான ஆராய்ச்சிகளை நடத்தியும், பலவித மருந்து வகைகளைத் தயாரித்தும் இந்நிலையம் சிறப்புப் பணியாற்றுகிறது. இந்தத் திட்டத்திற்கு நியூஸிலாந்து, ஆஸ்திரேலியா முதலிய நாடுகள் நிபுணர்களை அனுப்பியும் யந்திர சாதனங்களைக் கொடுத்தும் உதவுகின்றன.

கராச்சியில் ஒரு விரிவான மீன் மார்க்கெட்டையே இந்த ஸ்தாபனம் உண்டாக்கி விட்டது. மீன் பிடிப்போருக்கு வசதிகள் மிகுந்த துறைமுகமும், மீனவருடைய படகுகளைச் செப்பனிட வசதிகளும், மீனவர் குடும்பங்கள் அருகிலேயே வாழ நல்ல வீடுகளும் கொடுக்கப்பட்டுள்ளன. மீன் பிடிப்புத் தொழில் பாகிஸ்தானில் வெகு வேகமாக முன்னேறிக் கொண்டு வருவதற்கு எப். ஏ. ஓ. ஸ்தாபனத்தின் பணி முக்கியமாகும்.

கிழக்குப் பாகிஸ்தானில் உள்ள கங்கா கொபடாக் பிரதேசத்தில் விவசாய விஸ்தரிப்புக்கு அனுகூலமாகப் பல 'மாதிரிப் பண்ணைகளை' ஏற்படுத்தி அவற்றின் மூலம் பாகிஸ்தானி உழவர்களுக்கு எப். ஏ. ஓ. நிபுணர்கள் பயிற்சி அளித்து வருகிறார்கள். இங்கே பல உழவர் சங்கங்கள் சமீபத்தில் தோன்றியுள்ளன. விவசாய முறைகளில் முன்

## வணிகப் பெருமக்களுக்கு தமிழ்நாடு எடைகள் அளவைகள் இலாகா

## அறிவிப்பு

●

1-4-1963 முதல் மெட்ரிக் அளவைகள் தமிழ்நாட்டில் மதுரை, கோயம்பத்தூர், நீலகிரி, திருநெல்வேலி, கன்னியாகுமரி ஆகிய ஐந்து மாவட்டங்களிலும் கட்டாய அமுலுக்கு வருகிறது. அதன் பிறகு லிட்டர், மில்லிலிட்டர் முதலிய மெட்ரிக் அளவைகளைத் தவிர மற்ற மரக்கால், படி, ஆழாக்கு, கேலன் முதலிய பழைய அளவைகளை உபயோகிக்கக் கூடாது. அவைகளை உங்கள் வியாபார ஸ்தலத்தில் வைத்திருக்கவும் கூடாது. அப்படி வைத்திருந்தால் அவைகளை 1-7-1963க்குப் பிறகு அரசாங்கம் பறிமுதல் செய்யும். ஆகவே உடனடியாக புதிய அளவைகளை வாங்கி அவைகளில் வியாபாரம் செய்து பழகிக் கொள்ளுங்கள். புதிய அளவைகள் தற்போது நியாயமான விலைகளில் உங்கள் ஜில்லாவிலேயே சுலபமாகக் கிடைக்கின்றன. இந்தச் சந்தர்ப்பத்தைப் பயன்படுத்திக் கொள்ளுங்கள். தாமதிக்காதீர்கள். பின் பற்றுக்குறை ஏற்படலாம். விலையும் அதிகரிக்கும்.

மெட்ரிக் முறை சுலபமானது.
ஒரே சீரானது

தமிழ்நாடு எடைகள்
மற்றும்
அளவைகள் இலாகா

னேற்றம் காண்பதில் இவர்கள் முனைந்திருக்கிறார்கள். உயர்ந்த ரக நெற் பயிரும், கரும்பும், காய்கறி வகைகளும் இங்கே விரிவாக உற்பத்தி செய்யப்படுகின்றன. எப். ஏ. ஓ. நிபுணர்கள் உரங்களின் கலப்பு முறைகளைப் பற்றியும் செடிகளுக்கு அவற்றைத் தெளிக்கும் விதம் பற்றியும் பாடங்கள் சொல்லிக் கொடுக்கின்றனர். நேரிடையாகச் செய்தும் காட்டுகின்றனர்.

இந்தியாவிலும் இலங்கையிலும் மீன் வளத்தை அதிகமாகப் பயன்படுத்திக்கொள்வதில் எப். ஏ. ஓ. நிபுணர்கள் மிகுந்த கவனம் செலுத்தி வருகின்றனர். நூற்றுக் கணக்கான செம்படவர்களுக்கு நவீன முறைகளில் பயிற்சி அளிக்கப்படுகிறது. பல படகுகளுக்கு யந்திர சாதனங்கள் பொருத்தி அவற்றால் ஏற்படக்கூடிய நன்மைகள் விளக்கப்பட்டுள்ளன. பல ராஜ்யங்களில் இத்தத் துறையில் அபிவிருத்தி காணப்படுகிறது. ஆறு மாத காலம் பயிற்சி பெற்ற மீனவர் கோஷ்டிகளுக்கு யந்திரப் படகு அளித்து வழங்குகின்றனர். இதன் மூலம் பல மீனவர்களின் வருமானம் பெருகிப் படகின் விலையைத் திருப்பிச் செலுத்தும் நிலைக்கு வந்துவிட்டனர் என்றும் தெரிகிறது. படகு கட்டும் பல தொழிலாளர்கள் எப். ஏ. ஓ. அளிக்கும் பயிற்சியினால் மிகுந்த பயனடைந்துள்ளனர். ஸ்விட்ஸர்லாந்திலிருந்து வந்துள்ள ஒரு நிபுணரின் மேற் பார்வையில் 32 அடி நீளமுள்ள ஒரு படகு கொச்சின் துறைமுகத்தில் சமீபத்தில் தயாராகியுள்ளது. லட்சத் தீவுகளில் மீன் பிடிப்பதற்காக இது உபயோகிக்கப்படும்.

சத்துள்ள உணவு பற்றி மிகுதியான ஆராய்ச்சிகளும் ஆலோசனைகளும் தேவைப்படும் பிரதேசம் ஆசிய நாடுகள்தான். பள்ளிக்கூடத் தோட்டங்களை அமைப்பது; சோயா பீன்ஸ் பால் தயாரிப்பது; குழந்தைகளுக்குச் சாதாரணமாக வழங்கப்படும் உணவுக்குப் புரதச் சத்து சேர்ப்பது; கால் நடைகளுக்குக் கிடைக்கும் உணவைச் சத்துள்ளவைகளாக மாற்றுவது; புல் வெளிகளை வளர்ப்பது; இவை போன்ற நடவடிக்கைகள் ஆசிய நாடுகளில் எப். ஏ. ஓ. அளித்துள்ள உற்சாகத்தினால் மேற்கொள்ளப்படுகின்றன.

இந்த ஸ்தாபனத்தில் பணியாற்றும் நிபுணர்களெல்லாம் சில சமயங்களில் மக்களுடைய பழக்க வழக்கங்களையே மாற்ற வேண்டிய நிலைமைகள் ஏற்படுகின்றன. அப்போதெல்லாம் சீக்கிரம் வெற்றி காண முடிவதில்லை. அதனால் அவர்கள் மனச் சோர்வு அடைவதில்லை. விடாமுயற்சியுடன் பணியாற்றி முடிவில் வெற்றியே கண்டு வருகின்றனர்.

உணவு விஷயத்தில் இரண்டு வகையில் உலகத்தின் இதரபகுதிகளிலிருந்து இந்தியா நன்மை அடைந்திருக்கிறது. முதலாவது, மேலை நாடுகளில் விவசாயம் எவ்வாறெல்லாம் அபிவிருத்தி யடைந்துள்ளது, என்னென்ன முறைகளில் உற்பத்திப் பெருக்கு ஏற்பட நடவடிக்கைகள் எடுக்கப்பட்டுள்ளன, என்னென்ன முறைகளை நாமும் கையாளக் கூடும் என்பவை பற்றிக் கண்காட்சிகள் மூலம் நமக்கு

> உலகத்தில் காணும் அமைதி இன்மைக்குக் காரணம் மனித வர்க்கம் இரண்டு பெரும் பகுதிகளாகப் பிரிந்திருப்பது. ஒன்று பெரிய பகுதி. மற்றொன்று சிறியது. சிறிய பகுதியைச் சேர்ந்தவர்கள் பெருந் தீனி தின்று, அதனாலேயே தங்களுடைய ஆயுளைக் குறைத்துக் கொள்கின்றனர். பெரிய பகுதியில் வாழ்பவர்களோ என்றால், உணவு கிடைக்காததால், அரைப் பட்டினியாலும் முழுப் பட்டினியாலும் தங்கள் ஆயுள் குன்றி வருவதைக் கண்டு வருந்துகின்றனர்.
>
> டாக்டர் ஜியார்ஜிபி,
>
> நோபல் பரிசுபெற்ற விஞ்ஞானி

விளக்கப்பட்டிருக்கின்றன. இரண்டாவது, முன்னேற்ற மடைந்துள்ள நாடுகளின் உபரி உணவுப் பொருள்கள் நமக்குப் பெருமளவில் கிடைத்து வருகின்றன. பி. எல். 480 திட்டத்தின் கீழ் அமெரிக்காவிலிருந்து கோதுமையும், பால் பவுடரும் நாம் இறக்குமதி செய்துள்ளது மட்டும் பல கோடி ரூபாய் மதிப்புள்ளவை. நமது பொருளாதார முன்னேற்றத்துக்கு இவற்றின் மூலம் கிடைக்கும் நலனை அளவிட்டுச் சொல்ல முடியாது.

எப். ஏ. ஓ. ஸ்தாபனத்தின் தலைவராகத் திகழ்ந்து அதன் உன்னதமான லட்சியங்களுக்கு உலக நாடுகளின் ஆதரவைப் பெறும் நன்முயற்சியில் ஈடுபட்டிருப்பவர் ஓர் இந்தியர் என்பதைப் பெருமையுடன் குறிப்பிட வேண்டும். திரு பினய் ரஞ்சன் ஸென் இந்திய ஐ.ஸி. எஸ். வர்க்கத்தைச் சேர்ந்தவர். வங்காளத்தில் பல்லாண்டு சேவை புரிந்து கிராம மக்களுடைய வாழ்க்கையை நேரிடையாகப் பார்த்து அவர்களுடைய சிரமங்களை உணர்ந்தவர். நாடு சுதந்திரமடைந்த பின்னர் வெளி நாடுகளுக்குத் தூதுவராகச் செல்லவும் ஐ. நா. சபையைச் சேர்ந்த பல பல ஸ்தாபனங்களில் இந்தியக் குழுவின் தலைவராகச் செயலாற்றவும் சந்தர்ப்பங்கள் கிடைத்தன.

1956ம் ஆண்டில் எப்.ஏ.ஓ. ஸ்தாபனத்தின் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். அவருடைய தலைமையில் இந்த ஸ்தாபனத்தின் அலுவல்கள் பல வகையிலும் சுறுசுறுப்புற்று விரிவடைந்தன. இந்த ஸ்தாபனத்தின் அடிப்படை லட்சியங்களை வலியுறுத்தவும் உபரி தானியங்கள் உள்ள நாடுகளிலிருந்து அதிகப்படி உணவைப் பின்தங்கிய நாடுகளுக்குக் கிடைக்கச் செய்யவும் அவர் உலக உணவு காங்கிரஸ் என்ற மகத்தான மகாநாட்டை வருகிற ஜூன் மாத மத்தியில் அமெரிக்காவில் ஆரம்பித்து வைக்கப் போகிறார். நம்னர், நம் தேசம் போன்ற குறுகிய மனப்பான்மைகள் நீங்கிப் பசியும் பிணியும் அறியாத ஒரே மக்கள் சமுதாயம் வாழும் உலகம் உருவாகி அனைவரும் இன்புற்றிருக்கும் நாளை எதிர்நோக்கியிருக்கிறார் டாக்டர் ஸென். அவருடைய சீரிய முயற்சி வெற்றி பெறுவதாக!

# அறிவுக் கனலே, அருட் புனலே!

ரா. கணபதி

மேதினிப்பூரில் வசித்து வந்த க்ஷுதிராமின் மருமகர் ராமச்சந்திரரைப் பற்றி நாம் முன்பே குறிப்பிட்டிருக்கிறோம். அவர் தமது பூர்விகக் கிராமமான சேலம்பூரில் ஆண்டுதோறும் நவராத்திரி உற்சவத்தை விமரிசையாக நடத்துவது வழக்கம். இவ்விழாவில் க்ஷுதிராம் தவறாமல் கலந்துகொள்வார்.

1843ம் ஆண்டு. நவராத்திரித் திருநாட்கள் வந்தன. ராமச்சந்திரரிடமிருந்து க்ஷுதிராமுக்கு அழைப்பும் வந்தது. க்ஷுதிராமுக்கு இப்போது அறுபத்தெட்டு பிராயமாகி விட்டது. அடிக்கடி ஜீரணக் கோளாறுகள் ஏற்பட்டுப் பலம் குன்றிப் போயிருந்தார் அவர். எனவே இவ்வாண்டு சேலம்பூர் போகாதிருந்து விடலாம் என்றே அவர் நினைத்தார். ஆனாலும் அவர் உள்ளத்தில் ஏதோ ஒன்று, 'அடுத்த ஆண்டு நாம் இருப்பது என்ன நிச்சயம்? தேவியை இனி நவராத்திரியில் ஆராதிக்கும் பாக்கியம் தமக்குக் கிட்டுமோ, கிட்டாதோ?' என்று கூறிற்று.

கதாதரனுக்கு முத்தமிட்டு விட்டு, மூத்த மகன் ராமகுமாருடன் சேலம்பூர் புறப்பட்டார் க்ஷுதிராம்.

கதாதரன் தன் தந்தையை அதன் பின் காணவில்லை.

புனிதமான விஜயதசமியன்று சேலம்பூரில் க்ஷுதிராம் சட்டர்ஜி இறைவனடி சேர்ந்தார். வாழ்க்கையில் எந்த விதமான தவறும் செய்து அதற்காகப் பச்சாத்தாபம் கொள்ள வேண்டிய அவசியமில்லாமல் அறுபத்தெட்டாண்டுகள் தூய வாழ்வு வாழ்ந்த நிம்மதியுடன் காலகதியடைந்தார்.

சந்திரமணியின் சோகத்துக்கு வார்த்தைஏது? வார்த்தைகளில் சொல்ல முடியாத அந்தச் சோகத்தைத் தேக்கி நின்ற அன்னையைக் கண்டு குழந்தை கதாதரனும் பிஞ்சு உள்ளம் ஒடிந்து போனான்.

'தன்னை மடியில் வைத்துக்கொண்டு கதையெல்லாம் சொல்லிய அப்பா என்ன ஆனார்?' என்று அவனுடைய இளம் உள்ளம் சிந்திக்க ஆரம்பித்தது. 'செத்துப் போய் விட்டார் என்கிறார்களே, செத்துப் போவது என்றால் என்ன அர்த்தமாம்? அம்மாவிடம் அர்த்தம் கேட்டாலோ அவள் துடிக்கிறாள்! அப்பாவைப் பற்றிச் சொன்னாலோ அம்மாவுக்கு அழுகையாக வருகிறது! அதைப் பார்த்தால் தனக்கும் ரொம்ப அழுகை வருகிறது!'




அம்மாவிடம் உள்ள அன்புக்காக ஏழு வயதுக் குழந்தை தன்னுடைய இனம் தெரியாத துக்கத்தைத் தனக்குள்ளேயே புதைத்துக் கொண்டது. அம்மா துக்கத்தில் நொடித்துப் போய் விழுந்து விட்டதால் மன்னிக்கு வேலை அதிகமாகி விட்டது. கதாதரன் இருவருக்கும் கூடமாட ஒத்தாசை செய்து வந்தான். இப்போதெல்லாம் கதாதரன் முன்போல அம்மாவிடம் பிடிவாதம் செய்வதில்லை. சமர்த்துப் பிள்ளையாக இருந்தான். அவனது முகத்தைப் பார்த்துப் பார்த்தே சந்திரமணியும் தேறி வந்தாள். ஆனால் கதாதரனுக்கு அவள் முகத்தைப் பார்த்துத் தேற முடியவில்லை. அவளைப் பார்க்கப் பார்க்கத் துக்கம் அதிகரித்துக் கொண்டுதான் வந்தது. அந்தப் பாலன் தனியாக வெளி இடங்களில் சுற்றி வந்தான். மாணிக்க ராஜரின் மாந்தோப்பிலும், மயானபூமியிலும் ஏதோ ஆழ்ந்த யோசனையுடன் உலவி வரலானான்.

இப்போது அவன் உள்ளத்தில் ஒரு புதுத் தெம்பு பிறக்கச் சூழ்நிலை உதவிற்று. தர்மதாஸ் லாஹா என்ற ஊருக்குப் பெரிய தனவந்தர் — கதாதரன் படித்த பள்ளியை நடத்தி வந்தவர் — சாதுக்களுக்கென்று ஒரு சாவடி கட்டி வைத்திருந்தார். கமார்புகூர் வழியே புரிஜகந்நாதத்துக்குப் பரதேசிகள் போவதுண்டு. இவர்கள் சாவடியில் வந்து தங்குவார்கள். துனி என்ற அக்கினியை வளர்த்து அதன் முன்பாக அமர்ந்து ஜபம் செய்வார்கள்; மதுரிரத்தங்களைப் பாராயணம் செய்வார்கள்.

கதாதரனை இந்த ஆண்டிப் பரதேசிகளின் வாழ்க்கை ஈர்த்தது. அவர்களின் சங்கத்தை அவன் அடிக்கடி நாடத் தொடங்கினான். 'வீடு வாசலை விட்ட சந்நியாசிகள் கடவுளைக் காண்பதற்காகச் சாதனை செய்பவர்கள்; அவர்களுடைய

சங்கம் மிகவும் புண்ணியமானது' என்று பௌராணிகர்கள் பலர் சொல்லக் கேட்டிருக்கிறான் கதாதரன்.

எப்படி வளருவது என்று தெரியாமல் தத்தளிக்கும் கொடி, அந்தரத்தில் துழாவித் துழாவிப் பார்த்து, கொழுகொம்பைப் பிடித்துக் கொண்டு லளிதமாக அதனைக் கவ்விக் கொள்வது போல, உள்ளம் சிதறிக் கொண்டிருந்த பால கதாதரன், தான் எந்தக் கொழுகொம்பை அணைந்து வாழ வேண்டுமோ அந்தச் சந்நியாச சங்கத்தைப் பிடித்துக் கொண்டு விட்டான். அவர்கள் புரியும் யோக சாதனைகளை யெல்லாம் கூர்ந்து கவனித்தான்; வீடு வீடாகப் பிச்சை யெடுத்து வந்து தாங்கள் கொண்டு வந்த உணவை ஆண்டவனுக்கு நிவேதித்து விட்டு, அவர்கள் உண்ணும் ஏழைமையின் எளிமை எழிலைக் கண்டான். அவர்கள் எவ்வளவு குறைவான தேவைகளோடு காலம் கடத்துகிறார்கள் என்பதைக் கண்டான். கஷ்டங்கள் வந்த போது, அவர்கள் அவற்றை எப்படி அமைதியாகத் தாங்கிக் கொள்கிறார்கள் என்பதைக் கவனித்தான். எல்லாவற்றுக்கும் மேலாக அவர்கள் கடவுளிடம் எப்படிக் கனிந்து வாழ்கிறார்கள் என்பதைப் பார்த்து ஆனந்தம் கொண்டான். அவர்களில் வேஷதாரிகள் இருப்பதும் குழந்தையின் ஆழமான கண்களுக்குத் தப்பவில்லை. உண்மையான துறவிகளிடம் கதாதரனுக்கு ஏற்பட்ட அன்பின் விளைவாக அவன் அவர்களிடம் நெருங்கிப் பழகத் தொடங்கினான். அவர்களுக்காகச் சுள்ளிகள் பொறுக்குவான்; தண்ணீர் சேந்துவான்; இன்னும் வீட்டில் எப்படி அம்மாவுக்கு ஒத்தாசை செய்தானோ அப்படியே இங்கும் இருந்தான். இரண்டு இடங்களில் சேவை புரியும் உயரிய மனப்பான்மை கதாதரனுக்கு ஏழெட்டு வயதிலேயே வந்து விட்டது. சாது யாத்திரிகர்களுக்கும் கதாதரனிடம் ஒரு விசேஷமான பிரியம் ஏற்பட்டு வந்தது. ஒரு முறை அந்தச் சத்திரத்திலேயே நீண்ட நாட்கள் தங்கிய ஒரு சாது கோஷ்டிக்கு அவனிடம் பெருத்த ஈடுபாடு உண்டாயிற்று.

ஸ்படிகம் புஷ்பித்தாற்போல், தெளிவும், நெளிவும் கொண்ட அந்தப் பிள்ளைக்கு அவர்கள் பஜனைவரிகளும், துதிப் பாடல்களும் சொல்லிக் கொடுப்பார்கள். நெருப்பொளி நீலக் கண்ணாடியில் குவிந்து பிரதிபலிப்பது போலத் தாங்கள் கனத்த குரலில் கனத்த பக்தியுடன் பாடும் அடிகளை அவன் தனது குயிற் குரலில் துலங்கும் பக்தியுடன் திருப்பிப்



பாடும்போது கேட்டு மெய்ம் மறந்தார்கள். தங்களில் ஒருவனாகவே தான் அவர்கள் அவனைக் கருதினர். தங்களுடைய பிக்ஷை உணவை இந்தப் பால 'சந்நியாசி'க்குப் பகிர்ந்துகொடுத்த சாதுக்கள் பலர். ஒரு நாள் முகத்திலும் உடல் முழுவதிலும் விபூதிப் பூச்சும், ருத்ராட்சமும், அரையில் வெறும் கௌபீனமும் அணிந்து பெருமை பெருமையாக வீடு திரும்பினான் கதாதரன்.

''அம்மா, அம்மா! என்னைப் பார், அம்மா! சாதுக்கள் எனக்கு எப்படி அலங்காரம் செய்திருக்கிறார்கள், பார்த்தாயா?'' என்றான் பால முருகன்போல் பூரிப்புடன்.

ஆனால் அவளோ அவனை அந்தக் கோலத்தில் கண்டவுடன் விசும்பி அழத் தொடங்கி விட்டாள்.

''கதாயி, நீ அங்கேயெல்லாம் போகாதேயடா! அவர்கள் உன்னையும் தங்களோடு அழைத்துப் போய் விடுவார்கள். அப்புறம் நான் என்னடா கண்ணே செய்வேன்? அப்பாவும் போய் விட்டார்....''

மீண்டும் கேவத் தொடங்கி விட்டாள் சந்திரா.

''அம்மா! அழாதேயம்மா! நான் இனிமேல் அங்கே போக மாட்டேன், அம்மா! இது மட்டும் போனதற்கு 'புத்தி'ப் போட்டுக் கொள்கிறேன், அம்மா'' என்று அவள் முதுகைக் கட்டிக் கொண்டு, அழத் தயாராக நெளியும் உதடுகளிலிருந்து வார்த்தைகளை உதிர்த்தான் கதாயி.

முதுகுப்புறம் இருந்தவனை முன்புறமாக வாரியிழுத்து அணைத்துக் கொண்டாள் சந்திரா.

அவளிடமிருந்து விடுபட்டுச் சாதுக்கள் சத்திரத்துக்கு ஓடினான் கதாதரன்.

''சாமியார்களே, நான் இனி மேல் இங்கு வரமாட்டேன். ஏனென்றால், நீங்கள் என்னை அழைத்துக் கொண்டு போய் விடுவீர்கள் என்று அம்மா பயப்படுகிறாள்!'' என்றான். அவனைப் பொறுத்த மட்டும் அவனுக்கு ஏதும் பயமில்லை. அவர்கள் உண்மையிலேயே அவனைத் தங்களுடன் அழைத்துப் போனாலும் அதில் அவனுக்குப் பட மில்லை. யாத்திரைசெய்வதில் பயமென்ன இருக்கிறது?

கதாதரனின் பேச்சைக் கேட்டவுடன் அந்தச் சாதுக்களே சந்திராவிடம் வந்தார்கள். ''தாயே! எங்களைத் தவறாக எண்ணாதே! உன் பிள்ளையிடம் ஏதோ அற்புதங்கள் நிறைந்திருப்பதால் உலகை விட்ட எங்களுக்கும் அவனிடம் ஒரு வசியம் இருக்கிறது. அதற்காகவே அவனோடு பொழுது போக்கி மகிழ்கிறோம். மற்றபடி, நாங்கள் இங்கிருந்து



பறப்படும் போது அவனையும் இட்டுச் செல்லும் நோக்கம் எங்களுக்கு இருந்ததும் கிடையாது'' என்று உறுதி கூறினர்.

இதன் பின்னர் சந்திரா தன் பிள்ளை சாதுக்கள் சத்திரத்துக்குச் செல்வதைத் தடுக்க வில்லை.

குமார்புகூருக்கு இரண்டு மைல்கள் வடக்கே அநூர் என்று ஒரு கிராமமுண்டு. அங்கு விசாலாக்ஷி என்ற திவ்விய நாமத்தில் அம்பிகை உறைந்திருந்தாள். ஏழைகளின் அருமைத் தெய்வம் அவள். ஏழைகளைப்போலவே தனக்கு ஒரு கூரைகூட இன்றி வெட்ட வெளியில் வானம் பார்க்க வாழ்ந்தவள் அவள். அவளுக்கு யாரேனும் கோயி லெடுக்க எண்ணினாலும் அவர்களின் கன வில் தோன்றித் தடுத்து வந்தாள் அவள். ஹிமாலய சாம்ராஜ்யத்தின் ராஜகுமாரியாகிய அவள் அந்தப் பெருமையைத் துறந்து, பிச்சை எடுத்துண்ணும் ஈசனுடன் மயானத்தில் குடிபுகுந்தவள் அல்லவா? அதன் நினைவாகத் தான் போலும் இந்த அநூரில் ஏழையாகவே இருந்து வந்தாள் அவள். தான் ஏழையாக இருந்தாலும் அடியார்க்குக் கேட்டதை யருளும் வரப் பிரசாதையாக அவள் விளங்கினள். விசாலாக்ஷிக்கு வேண்டிக் கொண்டு தங்கள் மனோரதம் நிறைவேறிய பலர் அவளுக்குப் பழமும் பணியாரமும் காணிக்கை செலுத்துவார்கள். இவற்றில் ஒரு பகுதியைத் தாங்கள் வைத்துக் கொண்டு மிகுதியைத் தேவியின் சந்நிதியிலேயே விட்டுச் செல்வார்கள். அவற்றை ஏழைச் சிறுவர்கள் — முக்கியமாக மாடு மேய்க்கும் பாலர்கள் — எடுத்துப் புசிப்பது என்று ஒரு வழக்கம் இருந்து வந்தது.

இங்கு, தெய்வத்துக்குப் பிரார்த்தனை செலுத்தும் பழக்கம் பற்றியும் சிறிது சிந்தித்துப் பார்க்கலாம்.

ஆண்டவன் கைகளிலேயே நம்மைக் குயவன் கைக் களிமண் போல ஒப்பித்துக் கொண்டு, அவன் நம்மை எப்படி உருவாக்கினாலும் சரி என்ற பூரண சரணாகத புத்தியுடன் வாழாத வரையில் நாம் சுய முயற்சியின் மீதுதான் காரியங்கள் செய்ய வேண்டும். அவற்றின் பலன் நம் பூர்வ கர்மத்தைப் பொறுத்தது என்று ஹிந்துக்களாகிய நாம் நம்புகிறோம். இப்படிக் கர்மமும், நம் முயற்சியுமே காரியங்களை நடத்தும் போது கர்மநியதிக்கு உட்பட்ட லௌகிக காரியங்களில் ஆண்டவனை ஏன் இழுக்க வேண்டும் என்று சிலர் நினைக்கிறார்கள். இவர்கள் ஒரு விஷயத்தைக் கவனிக்க வேண்டும். பூர்வ கர்மத்தின் பலனை நாம் இன்று பெறுகிறோம் என்று சொல்லும் போதே, ஏதோ ஓர் அளவுக்குப் பூர்வத்தில் நாமாகக் கர்மம் புரியச் சுதந்திரம் பெற்றிருந்தோம் என்பதும் அதில் தொக்கி நிற்கிறது. அந்தச் சுதந்திரம் நமக்கு இப்போதும் இருக்கிறது என்பது. 'நல்ல கர்மங்களைச் செய்து கெட்ட கர்மப் பயனைக் கழித்துக்கொள்' என்ற சாஸ்திர வாசகத்திலிருந்தும் வெளியாகிறது. அதாவது நம்முடைய பூர்வ கர்மவினைப் பிரகாரம் நாம் எய்தும் இன்ப துன்பங்களோடு இப்போது செய்யும் கர்மங்களாலும் பழைய வினையைப் பெருக்கவோ, சுருக்கவோ செய்கிறோம். நமக்கு இருக்கும் இந்தச் சுதந்திரம் நம்முடைய காரியங்களில் தொடர்புடைய எல்லாருக்கும்தானே உண்டு? அந்தச் சுதந்திரத்தின் காரணமாக அவர்கள் இப்போது தவறாக நடக்கவும் இடமுண்டல்லவா? எனவே, நாம் சுய முயற்சி செய்த பின்னும், நம்முடைய பூர்வ கர்மம் நமக்குச் சாதகமாக இருக்கும்போதும், இப்போது நாம் தொடங்கியுள்ள ஒரு காரியத்தில் சம்பந்தப்பட்டுள்ள மற்றவர்கள் தவறாக நடப்பதால் அது நிறைவேறாமல் போகக் கூடுமல்லவா? கர்ம நியதிப்படி, இதற்குப் பிரதியாக ஒரு நலனை நாம் என்றோ ஒரு நாள் பெறக் கூடும். ஆனாலும் அந்த என்றோ ஒரு நாளுக்காக மனித உள்ளம் காத்திருப்பதில்லை. 'இப்போது ஒரு தடை ஏற்படுவானேன்? பிறகு என்றோ ஒரு நாள் அதை ஈடு செய்ய ஒரு நலன் விளைவானேன்? இப்போதே இவ்விதப் பிரதிபந்தகம் எதுவும் நேராமல் இருக்க வேண்டும்' என்று விரும்புவது மானுட இயல்பல்லவா? ஆகவே ஆண்டவனிடம் புதுத் தடைகளை நீக்குமாறு பிரார்த்திக்கிறோம். உலகமெல்லாம் ஆத்ம ஞானிகளாகி விடக்கூடும் என்று பகவானே நினைப்பதற்கில்லை. தர்மம் பிறழாமல் மக்கள் லௌகிக வாழ்வு வாழ்ந்தாலும் போதும் என்றே கருணைக் கடலான அவன் கருதுகிறான். 'அதர்மமில்லாத ஆசையாக நான் இருக்கிறேன்' என்று கீதை வாயிலாக மொழியும் அவன் மக்களின் இக உலகத்து நேரிய ஆசைகளையும் மதிக்கிறான். எனவே கர்ம வினை நமக்குச் சாதகமாக இருந்து, நாமும் யத்தனம் செய்து, தர்மமான ஆசை நிறைவேற வேண்டும் என்று பிரார்த்திக்கும் போது அவன் நிச்சயமாக மற்றவர்களின் குறுக்கீடு இல்லாமல் காத்துத் தருவான். இது தான் உலக லாபங்களுக்காகக் கடவுளை வேண்டுவதின் உட்பொருள்.

அப்படி நாம் வேண்டியதற்கு ஆண்டவன் இரங்கி அருள் புரிந்தால் அவனுக்கு நன்றி செலுத்த வேண்டும் என்ற

சடாரென்று தடைப் பட்டது. கதா தரன் நிலத்தில் சாய்ந்தான். பெண் களுக்குத் தூக்கிவாரிப் போட்டது. கதாயியைப் பார்த்தார்கள்.

அவனது கண்கள் எதை — அல்லது யாரை — அப்படி நோக்குகின்றன?

விசாலாக்ஷியையா?

அவளும் தனது விசாலமான கண்க ளால் இந்தக் குழந்தையைப் பார்க்கி றாளா? அமிருதம் போன்ற அந்தப் பார்வை குழந்தையின் உடம்பை யெல் லாம் குளிப்பாட்டுகிறதா? அதனால் தான் அவனது உடல் அப்படிச் சில்லிட்டு விட்டதா?

சந்திரகாந்தக் கல் உருகி வழிவது போல் அவனது முகத்தில் மாலை மாலை யாக அப்படி நீர் பெருகு வது ஏன்?

''கதாயி, கதாயி'' என்று அந்தப் பெண்கள் பயத்தில் கிறீச்சிட்டுக் கத்தினார்கள். ஆனால் அவனுடைய காதில் அந்த ஒலி ஏறவேயில்லை.



வெயில் தாங்காமல் அவ னுக்கு நரம்புகள் வெடித்து விட்டன என்றே அந்தப் பெண்களில் சிலர் நினைத்து விட்டனர்.

'ஆகா, இந்தச் சந்திராவுக்கு இப் படியும் ஒரு வேதனையா? கணவர் போய்ச் சில காலத்திலேயே செல்லப் பிள்ளையையும் அவள் இழக்கப் போகி றாளா? இந்தக் கொடுமைக்கு நாம் காரணமானோமே!' என்று அந்தப் பெண்கள் ஓலமிடலானார்கள்.

பிரஸன்னா அப்போதும் பிரஸன்ன மான புத்தியுடனேயே இருந்தாள்.

''பெண்களே, உங்களுக்குக் கதாயி யைத் தெரியாது. அவனுக்கு ஒன்றும் வந்து விடவில்லை. விசாலாக்ஷியிடம் அவன் வசமாகி யிருக்கிறான்! அவ்வளவு தான். அவள் பெயரை எல்லாரும் ஜபிப்போம். அவன் எழுந்து விடு வான்'' என்றாள்.

''விசாலாக்ஷி, விசாலாக்ஷி'' என்று பல பெண்கள் பக்தியோடு கூவிய ஒலி விசாலமான வயல் வெளியில் பரவியது.

தங்கத் தீபத்தில் முத்துச் சுடர் ஏற்றி னாற்போல் கதாதரனின் திவ்விய முகத் தில் நகை பரவியது. விரைத்துப் போயிருந்த அங்கங்கள் நெகிழ்ந்து கொண்டன.

அப்போது அவனிடம் ஏற்பட்ட பொலிவைக் கண்ட பெண்கள் விசா லாக்ஷியேதான் அவனது உடலில் ஆவே சமாக வந்திருக்கிறாள் என்று கூறிக் கொண்டார்கள்; அவனுக்கு விழுந்து விழுந்து வணங்கினார்கள். சிலர் தேவிக் காகக் கொண்டு வந்திருந்த பழங்களை யும் பணியாரங்களையும் கூட அவனுக்கே நிவேதித்தார்கள்.

சிறுகச் சிறுகப் பிரக்ஞை பெற்று வந்தான் கதாதரன். இனி என்று நினைத்து ஜோலியில் அமர்ந்த சிட்டு தத்த ளிப்பது போல அவனது அழகிய இரப் பைகள் துடித்தன; கண்முன் ஒரே செவ்வொளி. மறுகணமே கன்னென்ற சூரிய வெளிச்சத்தை உணர்ந்த கதாதரனின் கம லக் கண்கள் ரவியொளி பட்ட கமலமாகவே விகஸித் தன. அந்தக் கமலத்தி னுள்ளே கருவண்டுகளாக விழிகள் பளிச்சிட்டன. வாரிச் சுருட்டிக் கொண்டு எழுந்தான் பாலன்.

பெண்கள் எல்லை கடந்த ஆனந்தம் கொண்டு அவ னைத் தழுவி மகிழ்ந்தார்கள்.

அவன் மயக்கமாக இருந்த களைப்பேதுமின்றித் துள்ளிக் கொண்டு கிளம்பினான். எல் லாரும் உள்ளம் குவிந்து விசாலாக்ஷியைச் சென்றடைந்து வழி பட்டார்கள். ஏற்கனவே கேட்ட பல வரங்களைப் பூர்த்தி செய்ததோடு இன்று அவர்களைப் புதிதாக ஒரு வரம் கேட்க வைத்து அதையும் நிறைவேற்றி விட்டாள் அன்னை விசாலாக்ஷி!

இதையெல்லாம் கேள்விப்பட்ட சந்திரா பயந்தே போய் விட்டாள். கதா தரனோ, ''ஏனம்மா, பயப்படுகிறாய்? நான் அம்பாளிடம்தான் இருந்தேன்; ரொம்பவும் சந்தோஷமாக இருந்தேன். இதற்கு ஏன் விசாரப்படுகிறாய் அம்மா?'' என்று திரும்பத் திரும்பக் கூறினான்.

கதாதரனுக்கு ஒன்பதாவது வயதில் உபநயனம் நடைபெற்றது. உபநயன மான பின் கதாதரனுடைய நீண்ட நாள் அபிலாஷைகள் சில நிறை வேறின. முன்பெல்லாம் அவன் தெய்வ உருவங்களைத் தொடக் கூடாது என்று இருந்தது. இப்போது பிரம்மசாரி யான அவன் அவைகளைத் தன் சொரு சான விரல்களால் நேயமுடன் தீண்டி அலங்கரிக்க முடிந்தது. ரகுவீரனையும், சீதளா தேவியையும், ராமேசுவரத்துச் சிவபெருமானையும் உள்ளன்போடு வழி பட்டான் கதாதரன்.

''ரகுவீர்! என் அப்பாவுக்கு என்ன வெல்லாமோ தரிசனம் தருவாயாமே! அதெல்லாம் எனக்கும் தா!'' என்று வேண்டிக் கொண்டான். (தொடரும்)

# உங்கள் கேசத்தை அழகுபடுத்த நிரூபணமான பாமாலிவ் வழி






## பாமாலிவ் பெர்பியூம்டு கோகோனட் ஹேர் ஆயில்...

உங்கள் கேசத்திற்கு போஷாக்கு அளிக்கிறது. பாமாலிவ் உபயோகிப்பதால் நீண்ட, செழிப்பான கேசம் இயற்கையாக வளருகிறது. ரோஜா, லவண்டர் அல்லது மல்லிகை—இம்மூன்று வாசிக்கும் சுகந்தங்களில் ஏதேனும் ஒன்றைத் தேர்ந்து எடுத்துக் கொள்ளுங்கள்.




## பாமாலிவ் கோகோனட் ஆயில் ஷாம்பு...

உயர்தரமான தேங்காய் எண்ணெயுடன் தனிப்பட்டு தயாரிக்கப்பட்ட பிரசித்தி பெற்ற கலவை. இது அழுக்கு நீக்கம் செய்யும் ஷாம்பு என்பதுடன், ஒரு கூந்தல் அழகு சாதனமும் ஆகும். பாமாலிவ்வின் செழிப்பான நுரை கூந்தலுக்கு ஊட்டத்தைக் கொடுப்பதுடன் உங்கள் தலையையும் கூந்தலையும் துப்புரவாக்கி பசுமை புத்துயிரூட்டுவதனால், புதிய ஆரோக்கியமான கேச வளர்ச்சி ஏற்படுகிறது.

**நவநாகரீக இந்தியப் பெண்டிர் கூந்தல் அழகிற்கு விரும்பியெடுப்பது பாமாலிவ்**


சந்திரனே சாட்சி
கதை: கெளசிகன்
17
சித்திரம்:


மிஸ்டர் நித்சின்டன்....?
நானேதான்! உள்ளே வாருங்கள்.


இந்த ஊருக்குப் புதுசு போலிருக்கே! என்னைத் தேடி வந்த காரணம் என்னவோ?
இவ்வூரிலுள்ள பிரபல ஆலை நிர்வாகி துரைபால் உங்கள் 'க்ளையண்ட்' என்று அறிந்தோம்


ஆலையின் உரிமையாளர் ஜெயராமனின் மனைவி நளினியின் விஷய மாகப் பேசவே...
என்னிடமா? நான் பேச வேண்டிய இடம் நீதிமன்றமல்லவா? தவிர இது முடிந்து போன கேசாயிற்றே...


முடிந்து போனதுதான் வக்கீல் சார்! ஆனால் அந்தப் பெண்ணுக்கு நியாயம் கிடைக்கவில்லை என்பதைப் பேசவே வந்தோம்.
நீங்கள் அக்கறை காட்டு வதன் நோக்கமென்ன? நளி னிக்கு உறவா நீங்கள்?


ஒரு விதத்தில் அப்படித்தான் என்று வைத்துக் கொள்ளுங்களேன்
உண்மையாகவா? மிஸ்டர் சேகர், கொல்லன் தெருவில் ஊசி விற்கப் போகிறீரா? நீங்கள் யார், எதற்காக...


வந்திருக்கிறீர்கள் என்பது எனக்குத் தெரியும். இன்னும் உங்கள் வேலையைச் சுலபமாக்கித் தரட்டுமா? நீங்கள் யாரை முக்கியமாகப் பார்த்துப் பேச வேண்டுமோ அவர் அந்த அறையிலேயே இருக்கிறார். தனபால், இப்படி வாருங்கள்...
தனபால் இங்கிருக்கிறார் என்று தெரிந்துதான் வந்தோம் வக்கீல் சார்!


இவர்தான் தனபால் அவர்களோ?
இப்படி உட்காருங்கள் தனபால்! உங்களைப் பார்க்கவே இவர்கள் வந்திருக்கிறார்கள்
அப்படியா? எது விஷயமாகவோ?


உங்கள் சகோதரியின் மகன் இராமனுக்கும் அவர் மனைவி ரஞ்சனிக்குமிடையே மனக்கசப்பை உண்டாக்கி அவர் மகள் பாப்பாவுக்காகச் சொத்தைப் பாதுகாக்கும் பொறுப்பை அவரை ஏமாற்றி உங்கள் பேரில் உயில் எழுதி...
வாங்கிக் கொண்டதாக வழக்காட வந்திருக்கிறார் வக்கீல் சேகர் அவர்கள். அப்படித்தானே வக்கீல் சார்?


ரத்தினச் சுருக்கமாகச் சொல்லி விட்டீர்களே!
உங்களுக்குச் சில ஆயிரம் ரூபாய்கள் கிடைக்கும் என்பதற்காகத்தானே இந்த வழக்கை மறுபடி நடத்தப் போகிறீர்கள்?
பணத்துக்காக வழக்காடவில்லை மிஸ்டர் தனபால். பிரிந்திருந்த பாப்பாவை அவரிடம் சேர்ப்பிக்கவும் இராமனின் சொத்துக்களை அவர் முறைப்படி அனுபவிக்க ஏற்பாடு செய்து அநீதி இழைக்கப்பட்ட ஒரு அப்பாவிப் பெண்ணுக்கு வாழ்வளிக்கவே வாதாடப் போகிறேன்.


இராமனின் உயில்படி, நீங்கள் குறிப்பிட்ட எதுவும் நடக்கக் கூடியது இல்லை என்பதை நீங்கள் அறிந்திருப்பீர்கள் என்று நினைக்கிறேன்.
உங்கள் பக்கம் வெற்றி தேடித் தந்த அந்த உயிலை ரத்து செய்து விட்டு இராமன் வேறு உயில் தயாரித்திருந்தாலும்...?



## உங்களுக்கும் ஒரு

# பிலிப்ஸ்

## ஸைக்கிள்

## அவசியம்

பளபளவென கண்ணைப் பறிக்கும் பிலிப்ஸ் ஸைக்கிள் உங்களைப் போன்ற இன்றைய சுறுசுறுப்புள்ள இளைஞர்களுக்காகவே பிரத்தியேகமாய்த் தயாரிக்கப்பட்டது. உயர்ந்த ரக எஃகினாலான இந்த 'ஸைக்கிள், உறுதியும், எவ்விதமான கரடு முரடான பணிகளைச் சமாளிக்கவல்ல சக்தியும் வாய்ந்தது. 70 வருட காலமாய் உலகெங்கும் புகழ் பெற்ற பிலிப்ஸ் ஸைக்கிள், டி.ஐ. ஸைக்கிள் ஸாரின் மிக்க நவீன இயந்திர வசதி கொண்ட தொழிற்சாலையில், உங்களுக்காக தயாரிக்கப்படுகிறது.




**PHILLIPS**

டி. ஐ. ஸைக்கிள்ஸ் ஆப் இந்தியா, அம்பத்தூர், மதராஸ்

JWT-TIC-PH-2053a

# முற்றுப் பெறாத ஓவியங்கள்

இலக்கியத்தையும் இதர கலைகளையும் தொழிலாக நடத்துவது என்பது சமீப காலமாக ஜனநாயக அடிப்படையில் ஏற்பட்டதொரு பழக்கம். வால்மீகியோ, காளிதாஸனோ, இளங்கோ அடிகளோ, கம்பனோ இலக்கியத்தைத் தொழிலாகக் கொண்டார்கள் என்று நினைத்துப் பார்க்கக்கூட முடியாது. ஆனால் வயிறு வளர்ப்பதற்கு ஏதாவதொரு தொழில் நடத்தியாக வேண்டுமென்பது இன்றைய நியதி. எந்தத் தொழிலுக்கும் மதிப்பு உண்டு. எந்தத் தொழிலைச் செய்தாலும், மனிதனுடைய தன்மையையும், அறிவையும், பண்பையும், அந்தத் தொழிலின் பெருமையோ சிறுமையோ கட்டுப்படுத்திவிட முடியாது. தரும சூக்ஷ்மங்களை அறிந்த வேதாந்தியான தருமவியாதன் கசாப்புத் தொழிலில் ஈடுபட்டிருந்தார். அதுபோலவே, மேலை நாட்டுத் தத்துவ ஞானியான ஸ்பினோஸா கண்ணாடி தேய்க்கும் தொழிலை நடத்திக்கொண்டு தத்துவ விசாரணையில் ஈடுபட்டிருந்தார்.

மற்றும், முத்தமிழ், மும்மதம் பொழியானையாக இருந்த ஒட்டக்கூத்தரை எதிர்த்து நின்று,

**கூனையும் குடமுங் குண்டு சட்டியும்**
**பானையும் பண்ணுமங்குசப் பயல் யான்**

என்று கவியால் குத்தி மடக்கிய குயவனும்,

**"பல்லைப் பிடுங்கி பருந்தூட்டமாட்டிப் பகைவர் முன்னே**
**அல்லும் பகலு மடிப்பேன் கவியிருப் பாணி கொண்டே"**

என்று சொன்ன கொல்லனும், இதர தொழிலாளிகளும் கவி பாடக் கற்றுக்கொண்டவர்களாயினும், கவிதை எழுதுவதைத் தொழிலாகக் கொண்டவர்களல்ல.

இது மட்டுமல்ல. பெரிய இலக்கியங்களையும் படைத்துப் பெரிய பெரிய பதவிகளையும் வகித்துத் திறம்பட நடத்தி யிருக்கும் பெரியார்களையும் தமிழ் வரலாற்றில் காணலாம். பெரிய புராணத்தை இயற்றிய சேக்கிழார் மந்திரி பதவி வகித்தவர். 'அங்கிங்கெனாதபடி எங்கும் பிரகாசமான' பரம்பொருளுடன் ஒன்றி நின்று தானற்ற நிலையை அடைந்த பிரும்மஞானியான தாயுமானவரும் மந்திரி பதவி வகித்தவர்தான். சமீப காலத்தில் புது இலக்கியத்தைத் தோற்றுவித்த பெரியார்களில் ஒருவரான வேதநாயகம் பிள்ளையும் நீதி இலாகாவில் நேர்மையுடனும், திறமையுடனும் வேலை செய்து வந்த மகான்தான். இவர்கள் எல்லோரும் இன்று தமிழிலும், தமிழ் மக்கள் இதயத்திலும் இடம் பெற்றிருப்பது அவர்கள் செய்து வந்த தொழில்களாலல்ல. அவர்கள் நமக்கு அளித்துவிட்டுப் போன அரிய இலக்கியத்தினால்தான்.

நானும் எழுத்துத் துறையில் ஈடுபட்டிருந்தாலும் அதையே தொழிலாக நடத்தாதவன். ஒவ்வொருவரும் ஒவ்வொரு விதத்தில் இரட்டை வாழ்க்கை நடத்துகிறவர்கள்தாம். இகத்திற்காகச் சில காரியங்களைச் செய்கிறோம். பரத்துக்காகச் சில காரியங்களைச் செய்கிறோம். அதைப் போலவே, பிழைப்புக்காக ஒரு தொழிலையும், பொழுது போக்குக்கோ, பெருமைக்கோ அல்லது ஆன்ம ஆனந்தத்துக்கோ மற்றொரு தொழிலையும் செய்வதில் ஆச்சரியப்படுவதற்கு ஒன்றுமில்லையல்லவா?

தவிரவும் வேறு விதத்தில் தொழில் செய்யவோ, பிழைக்கவோ தெரியாமல், கவி பாட மாத்திரம் தெரிந்து கொண்ட நமது முன்னோர்களான புலவர்கள் எப்படி வாழ்க்கையில் கஷ்டப்பட்டிருக்கிறார்கள் என்பதற்கு அவர்கள் நமக்குத் தந்துவிட்டுப் போன கவிதைகளே சான்று. பரிசில் கிடைக்காத போனாலும் பரவாயில்லை; பாராட்டில்லாமல் இருந்தால் அந்தக் கவியுள்ளம் என்ன பாடுபட்டிருக்கும்? இலக்கியத்தைப் பொருள் கொடுத்துப் போற்றாமலும், அனுபவித்து ஆதரிக்காமலும் இருந்த இரசிகத் தன்மையற்ற மகாஜனங்களைக் காரசாரமாகச் சபித்துவிட்டுப் போனான் ஒரு கவி. கவி, மக்களுக்குச் செலுத்திய மதிப்பீடு என்று இதைச் சொல்லலாம். காளமேகம், தன்னைப் பாராட்டாமல் அவமதித்த ஜனங்களை வாழ்த்தினான்!

**"கோளரிருக்குமூர், கோள் களவு கற்றவூர்,**
**காளைகளாய் நின்று கதறுமூர் — நாளையே**
**விண்மாரியற்று வெளுத்து மிகக் கறுத்து**
**மண் மாரி பெய்க விந்த வான்."**

ஆகவே இலக்கியத்தைத் தொழிலாக வைத்துக் கொள்வதில் எவ்வளவு கஷ்டங்கள் இருக்கின்றன என்பதை அறிகிறோமல்லவா?

போகட்டும். இலக்கியத்தைத் தொழிலாகக் கொள்ளவில்லை யென்று சொன்னேனல்லவா? நான் எந்தத் தொழில் செய்ய வேண்டுமென்று நினைத்து அதற்காகப் படித்தேனோ அந்தத் தொழிலிலும் ஈடுபடவில்லை. நான் படித்தது ஆடிட்டர் (கணக்கர்) வேலை பார்ப்பதற்காக. ஆனால் ஈடுபட்டிருக்கும் தொழிலோ வேறு. 'தொழிலும் தாரமும் அவரவர் விருப்பம் போல் அமைவதில்லை' என்று ஒரு பழமொழி உண்டு. அதற்கேற்ப என்னுடைய சுபாவத்துக்கும் தொழிலுக்கும் ஒவ்வாதிருக்கும், படிப்புக்கும் தொழிலுக்கும்

# ந. சிதம்பர சுப்ரமணியம்

விஜயா, வாகினி ஸ்டுடியோவைப் பற்றிக் கேள்விப்படாதார் இருக்க முடியாது. அங்கு அலுவல் பார்க்கும் பிரபல எழுத்தாளர் ஸ்ரீ சிதம்பர சுப்ரமணியம் அவர்கள் எழுதிய இக்கட்டுரையின் ஆரம்பம் 'எழுத்தும், தொழிலும்' என்ற இப் புதிய அம்சத்துக்கு அழகியதொரு முன்னுரையாக அமைந்துள்ளது.

ஒவ்வாதிருக்கும் ஒரு தொழில் செய்யும்படி ஏற்பட்டது. இறைவன் விளையாட்டுத்தான்.

சூயஸ் கால்வாய்க்குக் கிழக்கே, மிகப் பெரியதான விஜயா வாகினி ஸ்டுடியோ ஸ்தாபனத்தின் பொறுப்பானதொரு சிறு பணியைச் செய்யும் பேற்றைப் பெற்றிருப்பதில் பெருமையும், மகிழ்ச்சியும் அடைகிறேன். வெகுநாட்கள் வரையில் தொழில் முறையில் என்னுடன் பழக நேர்ந்த கனவான்களுக்கு நான் ஓர் எழுத்தாளன் என்ற விஷயம் தெரியவே தெரியாது. அது போலவே எழுத்தாளனாக மாத்திரம் என்னை அறிந்த நண்பர்களுக்கு நான் என்ன தொழில் செய்கிறேன் என்பதும் தெரியாது. திரைப்பட ஸ்டுடியோவில் வேலை பார்ப்பதை மட்டும் அறிந்த சில நண்பர்கள், கதை இலாகாவில் கதை வசனம் எழுதுவதாக நினைத்துக் கொண்டிருந்தார்கள். அத்துடன் மட்டுமின்றி, எங்கள் நிறுவனத்திலிருந்து வரும் படங்களில் ஏதாவது அவர்களுக்குத் திருப்தியாக இருந்தால், என்னுடைய பங்கும் அதில் சேர்ந்திருக்கிறது என்று நினைத்துக் கொண்டிருப்பார்கள். எங்கள் ஸ்தாபனத்திலிருந்து வந்த படம் பிடிக்கவில்லை என்றால், ஏன் இவர் இருந்தும் இதைச் சரிவரக் கவனிக்காமல் இருந்திருக்கிறார் என்று ஆச்சரியப்பட்டிருக்கிறார்கள். நான் கதாசிரியனாயிருந்தாலும், எழுத்தாளன் என்ற முறையில் பணியாற்றவில்லை. ஆகவே, எங்கள் நிறுவனத்திலிருந்து வந்த படங்களின் கதை அமைப்பினாலே, பெருமை கொள்வதற்கு என்னுடைய பங்கு அவற்றில் சிறிதும் இடையாது.

என் வேலை யெல்லாம் பணம் வரவு செய்வது போன்ற நிர்வாகப் பொறுப்புத்தான். திரைப் படக் காட்சிகளைப் படம் எடுக்கும் கொட்டகைகளில் (Studio Floor) பலதரப்பட்ட நாடகக் காட்சிகள் உருவாகிக் கொண்டிருக்கும். ஆனால் ஒரே ஒரு நாடகம் மாத்திரம் என்னுடைய நிர்வாக அறையில்தான் நடக்கும். கதையில் நடக்கும் முத்தாய்ப்பு (Climax) கட்டம் போலவே, என் அறையில் நடக்கும் நாடகம்தான் படம் தயாரிப்பவரின் முத்தாய்ப்புக் கட்டம்.

படம் தயாரிப்பதில் பல நாடகக் கட்டங்கள் உண்டு. ஒன்று படம் ஆரம்பிப்பதாக விளம்பரப்படுத்தும் பூஜை போடும் கட்டம். பிறகு அநேக கண்டங்களைத் தாண்டிக் கொண்டு, இந்தப் படம் திரையிடப்படுவதற்கு லாயக்கானதுதான் என்று தணிக்கை செய்யப்படும் கட்டம். கடைசியில், என் முன்னால் நடக்கும் முத்தாய்ப்புக் கட்டம். அதாவது, ஸ்டுடியோவுக்குச் சேர வேண்டிய தொகைகளைக் கட்டிவிட்டுப் படத்தின் பிரதிகளைப் படம் தயாரிப்பவர் எடுத்துச் செல்ல அநுமதி பெறுவது. இது மேல்பஞ்சமத்தில் நின்று கொண்டு ஆலாபனம் செய்வதற்கொப்பான உச்ச நிலையை அடையும் கட்டம்.

இதில் என்ன விசேஷமென்றால், திரைப் படத் தயாரிப்பில் புழக்கத்தில் இருக்கும் முறைகள் ஒரு தனிச் சிறப்பு கொண்டவை. ஒருவர் வீடு ஒன்று வாங்க வேண்டும் என்று நினைத்தால், விலையைப் பேசி முடித்துக்கொள்வார். பணத்தைத் தயார் செய்து கொள்வார். கிரயப் பத்திரத்தைச் செய்து கொள்வார். தம்மிடம் எவ்வளவு பணம் இருக்கிறது என்பதையும், அந்தத் தொகைக்கு மேற்பட்ட விலையுள்ள சொத்துக்களைப் பற்றி நினைப்பதில் பிரயோசனம் இல்லை என்பதையும் அறிவார். ஆனால் திரைப்பட உலகத்துச் சம்பிரதாயம் இதற்கு முற்றிலும் மாறுபட்டது.

திரைப் படம் தயாரிக்கும் ஒருவர், அதை ஆரம்பிக்கும் பொழுதே, பல தொகுதிகளுக்கு விலை பேசி முடித்து விடுவார். இன்னின்ன தவணைகளில் இந்தப் பணத்தைக் கொடுக்க வேண்டியது; இவ்வளவு தொகையைப் படத்தின் பிரதிகளைக் கொடுக்கும்போது கொடுக்க வேண்டியது என்று ஒப்பந்தங்களில் கண்டிருக்கும். படம் இன்ன தொகையில் முடியும், எப்பொழுது முடியும், எந்த மாதிரி முடியும் என்பது தயாரிப்பவருக்கும் தெரியாது; வாங்குபவருக்கும் தெரியாது. பெரிய நிபுணர்கள் சேர்ந்து செயல் புரியும் அரசாங்கத் திட்டங்கள் அறுபது கோடி என்று ஆரம்பிக்கப்பட்டு நூற்றறுபது கோடியில் வந்து நிற்பது போல், ஆறு லட்சம் என்று நிர்மாணித்து ஏழு லட்சத்துக்கு விற்று விட்டு, சாமர்த்தியமாகச் செய்து விட்டதாகக் கனவு கண்டு கொண்டிருப்பார். படம் அவர் எதிர்பார்த்த வேகத்தில் வளர்ந்து போகாது. ஆறு மாதங்களில் முடித்து விடலாம் என்று அவர் கோட்டை கட்டியது முடிந்து. ஆறு வருஷங்கள் ஆகியும் இம்மிகூட நகர்ந்திருக்காது. வட்டித் தொகை விசுவரூபம் எடுத்து, இவருக்கு வரவேண்டிய தொகைகளை யெல்லாம் ஏப்பம் விட்டு விட்டு மேலும் கேட்டுக் கொண்டிருக்கும். சர்க்கார் ஏற்கனவே போட்டிருந்த வரிகளை இரண்டு பங்குக்கு உயர்த்தி யிருப்பார்கள். திரைப்பட முதலாளி கனவிலேகூட நினைக்காத புது வரிகளைக் கொண்டு வருவார்கள். முதலாளியின் கணக்கு தப்பாகப் போய் நிற்கும். படத்துக்குப் பணம் கொடுத்திருக்கும் தொகுதிக்காரர்கள், நெஞ்சம் பொறுமிக் கொண்டிருப்பார்கள். படம் வருமா என்று நம்பிக்கையிழந்து நிற்பார்கள். அப்படியே வந்தாலும் இந்த ஆறின கஞ்சியை யார் விரும்புவார்கள் என்று சுவாரசியமிழந்து நிற்பார்கள்.

"சார்! உங்களைச் சிரமப்படுத்துவதற்கு மன்னிக்கணும்! இந்தப் பக்கத்திலே யாராவது போலீஸ்காரர் வந்ததைப் பார்த்தீர்களா?"

"இல்லையே? நான் பார்க்கலையே?"

"அப்படியா? உங்கள் பர்சையும், கடிகாரத்தையும் முதல்லே கழற்றி வையுங்க!"

"சரி! இந்தாங்க!"

"கொடுத்தாச்சில்லே. போயிட்டு வாங்க...என் கையை ஏன் பிடிக்கிறீங்க?"

"அதுவா? நட ஸ்டேஷனுக்கு! நான் இன்னிக்கு 'மப்டி'யிலே வந்திருக்கேன்!"

---

தயாரிப்பாளரோ வெளியிடுவதைவிட வெளியிடாமல் இருப்பதே மேல் என்று வேறு வழியின்றித் திணறிக் கொண்டிருப்பார். வர வேண்டிய தொகைகள் குறைந்து கொண்டே வரும். கொடுக்க வேண்டிய தொகைகள் ஏறிக் கொண்டே போகும். துண்டு விழும் தொகையை எப்படிச் சரிக் கட்டுவது? இவைகளையெல்லாம் ஒழுங்குபடுத்திப் படத்தை வெளிக் கொணருவது என்பது பிரம்ம பிரயத்தனமாயிருக்கும். தொகுதிக்காரர்கள், கொட்டகைக்காரர்களிடம் இந்தத் தேதியில் வருகிறது என்று சொல்லிச் சொல்லிப் பல தேதிகளை நழுவ விட்டிருப்பார்கள். கொட்டகைக்காரர்களிடம் மறுபடியும் ஒரு தேதியைச் சொல்லிக் கொண்டு போனால், ஒருவருக்கும் நம்பிக்கை இருக்காது. அதற்காகப் பத்திரிகையில் படம் எடுப்பவரைத் தேதியைக் குறிப்பிட்டு விளம்பரப்படுத்தச் செய்வார். ஆனால் அந்தத் தேதியில் வந்து விடும் என்பதில் முதலாளிக்கோ, தொகுதிக்காரருக்கோ நம்பிக்கையிருக்காது. பரஸ்பரம் அவநம்பிக்கையுடன் என்ன ஆகுமோ, ஆகுமோ என்ற பரபரப்புடன் நாளையும் நிமிஷத்தையும் கணக்குப் பண்ணிக் கொண்டிருப்பார்கள். பிரதிகள் 'லேபரேடரி'யில் தயாராகிக்கொண்டிருக்கும். விநியோகஸ்தர்கள் லேபரேடரியில் நடைப் பக்கம் இருந்து கொண்டு காத்துக் கொண்டிருப்பார்கள். இந்தச் சமயத்தில் கோர்ட்டிலிருந்து ஓர் அமீனு வருவார். ஸ்டுடியோ நிர்வாகி என்ற முறையில் என்னிடம் ஓர் உத்தரவைச் 'சாதரா' செய்வார். பரபரப்புடன் தயாராகி வரும் மேற்சொன்ன படத்தின் பிரதிகளைத் தயாரித்து வரும் முதலாளிக்குக் கொடுக்கக் கூடாது என்ற தடை உத்தரவு அதிலே இருக்கும்.

விஷயம் என்னவென்று பார்க்கப் போனால் இந்தப் படம் தயாராகிக் கொண்டிருந்த பொழுது, வெற்றிலை பாக்குக் கடைக்காரர் ஒருவர் வெற்றிலை பாக்கு கொடுத்துக் கொண்டு வந்திருப்பார். அவருக்குச் சேர வேண்டிய தொகை நூற்றைம்பது ரூபாய் ஆகியிருக்கும். வெற்றிலைக் கடைக்காரர் பணம் கேட்டிருப்பார். பட முதலாளி பிறகு தருகிறேன் என்று சொல்லியிருப்பார். கடைக்காரர் தம் தொகை, வக்கீல் தொகை, படிச் செலவு, வட்டி நஷ்டத்தையெல்லாம் கணக்குப் பண்ணிப் பார்ப்பார். அவருடைய தொகை ரூ. 550 ஆகியிருக்கும். இந்தப் பணம் வெற்றிலைக் கடைக்காரருக்குச் சேரும்வரையில் படத்தின் பிரதிகளைப் பட முதலாளிக்குக் கொடுக்கக் கூடாது என்று அந்த உத்தரவில் கண்டிருக்கும். இப்படிப்பட்ட சந்தர்ப்பத்தில் என்ன பரபரப்பு ஏற்படும்! இப்படிப்பட்ட முத்தாய்ப்பு திரைப் படக் கதையிலேகூட இருக்குமா என்பது சந்தேகம்தான். இந்தச் சந்தர்ப்பங்களில் ஸ்டுடியோவுக்குச் சேர வேண்டிய பணத்தை வசூலித்துக் கொண்டு படப்பெட்டிகளை முதலாளியிடம் கொடுப்பதற்குள் எவ்வளவு சிக்கல்களும் சங்கடங்களும் வந்து சேருகின்றன என்பதை ஊகித்துக் கொள்ளலாம் அல்லவா? இப்படிப்பட்ட சிரமங்கள் இல்லாமல் நல்ல முறையில் படமெடுக்கும் தயாரிப்பாளர்களும் இல்லாமல் இல்லை. ஆனால் பெரும்பான்மை மேற்சொன்ன வகையில்தானிருக்கும்.

ஃ ஃ ஃ

ஒரு சமயம் ஒரு பட முதலாளி ஒரு புகார் கொண்டு வந்தார். ஸ்டுடியோவைப் பார்ப்பதற்கு எவ்வளவோ மனிதர்கள் ஆசைப்பட்டு வருவார்கள். வருபவர்களையெல்லாம் உள்ளே அனுமதிப்பது என்பது இயலாத காரியம். நாம் தாட்சிண்யம் காட்ட வேண்டியவர்கள், பெரிய சிபாரிசு கொண்டு வருபவர்கள் இப்படி வடிகட்டி அனுப்புவது வழக்கத்தில் இருந்தது. சிலர், அவரைப் பார்க்க வேண்டும், இவரைப் பார்க்க வேண்டும், அவர் வரச் சொன்னார், இவர் வரச் சொன்னார் என்று சொல்லிக் கொண்டு உள்ளே நுழையப் பார்ப்பார்கள். அவர்கள் அனுமதிக்கப்பட மாட்டார்கள். படம் பிடிப்பவர்களும் கண்டபடி வேடிக்கை பார்க்கும் ஜனங்கள் வருவதை விரும்புவதில்லை. மேலே சொன்ன முதலாளிக்கு வேண்டியவர், உள்ளே அனுமதிக்கப்படாமல் தடுக்கப்பட்டு விட்டார். பட முதலாளி 'என்னைத் தேடி வந்தவரை எப்படி இவர்கள் தடை செய்து திருப்பி அனுப்பலாம்?' என்று கோபத்துடன் வந்தார். "ஐயா! உங்களிடமிருந்து அவர் கடிதம் கொண்டு வரவில்லை. வந்தவர் உங்களுக்கு வேண்டியவராக இருக்கலாம். வருவோர் போவோர் எல்லோரையும் அனுப்பி வந்தாலும் உங்களுக்குத்தானே அசௌகரியமாயிருக்கும்" என்று சமாதானப்படுத்த முயன்றேன். அவர் திருப்தியடையவில்லை. ஒரே பிடிவாதமாக, "யாராயிருந்தாலும் பரவாயில்லை. என்னைத் தேடி வரும் ஒவ்வொருவரையும் நேராக என்னிடம் அனுப்பி வைக்கச் சொல்லுங்கள்" என்று உறுதியுடன் சொல்லிவிட்டு நின்றார். சில நிமிஷங்களுக்கு முன் நடந்த சம்பவம் அவர் வார்த்தைக்கே எதிரிடையாக இருந்தது என்பதை அவர் அறியார். எனக்கு வரும் சிரிப்பை அடக்கிக் கொண்டு, நான் சொன்னேன். "அடுத்த அறையில் கோர்ட்டிலிருந்து வந்த அமீனு உட்கார்ந்து கொண்டிருக்கிறார். உங்களிடம் படத்தைக் கொடுக்கக் கூடாது என்ற உத்தரவை என்னிடம் சமர்ப்பித்தாகி விட்டது. உங்களுக்காகத்




மைத்தான் ஏஸி, பாக்ரா டிஸி 900 மிமீ, 1200 மிமீ, 1400 மிமீ, 1500 மிமீ.



டிலக்ஸ் 400 மிமீ மேஜை மாடல்
- இஷ்டமான கோணத்தில் பொருத்தி, இருபுறமும் திரும்பி வீசக்கூடியது.
- ஒரு சில நிறங்களில் எனாமல் பூச்சு.

# AEI

# ஸீலிங்

மற்றும்

# மேஜை விசிறிகள்

மிகுந்த சக்தியுடையதாக, குறைந்த மின்சாரச்செலவே ஆகும்படி அமைக்கப்பெற்ற ஏஇஐ ஸீலிங் மற்றும் மேஜை விசிறிகள், பொறுக்கியெடுத்த சிறந்த உறுப்புக்களைக் கொண்டு நிர்மாணிக்கப்படுவதாகும். ஏஇஐ விசிறிகளின் தயாரிப்பில் தொழில் நுட்பத் திறமையுடன், இந்தியாவின் மிகப்பெரிய மின்சார சாதன சப்ளை ஸ்தாபனத்தின் விசேஷ ஆற்றலும் அனுபவமும் கூடியிருக்கிறது.

**அசோஸியேடட் எலக்டிரிகல் இண்டஸ்ட்ரீஸ் (இந்தியா) பிரை. லிட்.**
கிரௌன் ஹவுஸ், 13, ராஜேந்திரநாத் முகர்ஜி ரோடு, கல்கத்தா-1.
கிளைகள்: பம்பாய் - புதுடில்லி - மதராஸ் - பெங்களூர் - கோயமுத்தூர் - கான்பூர்.

AEI-47A TAM

# ஒரு சில லோமா துளிகள் நரை மயிரை

தவிர்க்க உங்களுக்கு உதவுகிறது

'லோமா'வைத் தவறுமல் தினந்தோறும் ஒரிரு தடவை உபயோகியுங்கள். நரை மயிர் மறையும் அடையாளங்களையும், அவற்றிற்குப் பதிலாகக் கண்கவர் கருமையான கேசம் இளமைப் பொலிவுடன் விளங்குவதையும் காண்பீர்கள்.




கேசத்தைக் கருமையாக்குவது மட்டுமல்ல, கேசத்திற்கு ஓர் போஷாக்கும் கூட!

ஏகபோக ஏஜெண்டுகள் &
ஏற்றுமதியாளர்கள்:

எம். எம். கம்பாத்வாலா,
அஹமதாபாத்-1. (இந்தியா)

ஏஜெண்டுகள்:

ஸி. நரோத்தம் & கோ., பம்பாய்-2.

'TAM

ஸ்டாக்கிஸ்டுகள் : மெஸர்ஸ் ஜே. [illegible] & கம்பெனி, 260, [illegible] பஜார், மதராஸ்-1

தான் உட்கார்ந்து கொண்டிருக்கிறார். நீங்கள் விரும்பியபடியே, முதல் விருந்தினராக உங்களிடம் அவரை அனுப்பி வைக்கிறேன்'' என்றேன். பட முதலாளியின் முகம் அப்பொழுது எப்படி இருந்திருக்கும் என்று விவரிக்க வேண்டியதில்லையே!

* * *

எங்கள் ஸ்தாபனங்களில் ஒன்றில் வடநாட்டுப் படம் ஒன்றை வாங்கியிருந்தோம். அதை விற்ற தயாரிப்பாளர், அந்தப் படத்தில் நடித்த முக்கிய நடிகரிடம் ஓர் ஒப்பந்தம் செய்து கொடுத்திருந்தார். அந்தப் படத்தை டப் (அதாவது படத்தை மாற்றாமல் மொழியை மாத்திரம் மாற்றுவது) செய்வதோ, இதர மொழிகளில் வெளியிடுவதோ என்றால், அவருடைய அநுமதியைக் கேட்டு வாங்கிக் கொண்டு தான் செய்ய வேண்டும். இதைப் பற்றிப் படத்தை வாங்கிய எங்களுக்கு ஒன்றும் தெரியாது. நாங்கள் ஆந்திர தேசத்தில் தெலுங்கு விளக்கத்துடன் வெளியிட்டு விட்டோம். அந்த நடிகர் தயாரித்தவருக்கு ஒரு நோட்டீஸ் கொடுத்தார். ''ஒப்பந்தத்துக்கு விரோதமாக இவ்வாறு வெளியிட்டது தவறு என்றும், இந்த வெளியீட்டால் வரக் கூடிய வசூலில் தமக்கு ஒரு பங்கு உண்டென்றும்'' கண்டிருந்தார். நாங்கள் அந்த ஒப்பந்தத்தின் ஷரத்துக்களை வாங்கிப் படித்தோம். நாங்கள் செய்தது தவறு ஒன்றும் இல்லை என்பதை அறிந்தோம். மற்ற ஷரத்துக்களையும் ஊன்றிக் கவனித்தோம். அதிலுள்ள வேறு ஒரு ஷரத்து எங்கள் கவனத்தைக் கவர்ந்தது. அதாவது அந்த நடிகர் நடிக்க வேண்டிய கட்டங்களில் எக்காரணத்தைக் கொண்டும் வேறு பதில் ஆள் வைத்துக்கொண்டு படம் எடுக்கக் கூடாது என்றிருந்தது. அந்தப் படத்திலே மேற்சொன்ன நடிகர், ஒரு கொடிய மிருகத்துடன் சண்டை போடுவதாக வருகிறது. அந்தக் கட்டத்தை டைரக்டர் ஒரு சர்க்கஸ்காரரை வைத்து எடுத்திருந்தார். அதை வைத்துக் கொண்டு தயாரிப்பாளர் மூலமாகவே பதில் நோட்டீஸ் விட்டோம். அதாவது, மேற்படி நடிகர், கொடிய மிருகத்துடன் சண்டை போடாமல் வேறு ஆளைப் போட்டு எடுக்க நேர்ந்ததனால், அவர் ஒப்பந்தத்தை மீறியிருப்பதாலும் அந்த நடிகரே கொடிய மிருகத்துடன் சண்டை போட்டிருந்தால், பல லட்சங்கள் அதிக வசூல் ஆகியிருக்குமாதலாலும், அந்த நஷ்டத்தை நடிகர் ஈடு செய்ய வேண்டும் என்று நோட்டீஸில் கண்டிருந்தது. கடைசியில் யானைக்கும் பானைக்கும் சரி என்ற கதையாகி விட்டது.

* * *

திரைப் படம் தயாரிக்கும் மனிதருக்கு ஏற்படும் சிக்கல்களையும் பிரச்னைகளையும் பார்க்கப் போனால், ஒவ்வொரு தயாரிப்பாளரையும் செயற்கரிய காரியங்களைச் செய்தவர் என்று தயங்காமல் சொல்லலாம். சில பிரச்னைகளுக்கு முடிவு இல்லாமலே போய்விடும்.

ஒரு படாதிபதி படம் ஒன்றை எடுத்துக் கொண்டிருந்தார். அந்தப்படத்திலே, சிறுவன் ஒருவன் வரும் காட்சி அடிக்கடி வந்து கொண்டிருந்தது. அந்தப் பாத்திரத்துக்கு நல்ல முக வெட்டோடு கூடிய ஒரு சிறுமியை ஒப்பந்தம் செய்திருந்தார். அந்தச் சிறுமியும் அழகாக நடித்து வந்தாள். அந்தச் சிறுமிக்குச் சுமார் பத்து வயது இருக்கும். படம் பல காரணங்களால் முடியாமல் தாமதமாகிக் கொண்டே வந்தது. நாட்கள், மாதங்கள் வருஷங்களாக ஓடின. சுமார் ஆறு வருஷங்கள் தாண்டிப் போய் விட்டன. படம் வளர வில்லை என்பதற்காகச் சிறு பெண் வளராமல் இருப்பாளா? நல்ல பருவ மங்கையாக வளர்ந்து கன்னிகையாக எழிலுடன் விளங்க ஆரம்பித்தாள். பையனாக இருந்து நடிக்க வேண்டிய காட்சிகள் மேலும் இருந்தன. படாதிபதியின் மனம் எப்படி இருந்திருக்கும்?

இதைச் சொல்லும்பொழுது பிரசித்தி பெற்ற ஆசிரியர் ஹென்றி ஜேம்ஸ் எழுதியுள்ள கதை ஒன்று நினைவுக்கு வருகிறது.

ஓர் ஓவிய நிபுணன் மிகச் சிறந்ததொரு அழகியைப் பார்க்கிறான். அந்த அழகியின் தெய்வீக முகத்தை வரைய வேண்டும் என்று நினைக்கிறான். அந்தப் புனித ஓவியத்தை வரைவதற்கு வேண்டிய அளவு தனக்கு இன்னும் திறமை வரவில்லை என்று ஓவியம் வரைவதை ஒத்திப் போடுகிறான். முகத்தைப் பார்க்கும் பொழுதெல்லாம் அதைரியப்பட்டுக் கொண்டு ஒத்திப் போட்டுக் கொண்டே வருகிறான். இப்படிக் கழித்துக் கழித்து வாழ்நாட்களையே அழித்து விட்டான். கடைசியில் ஒரு நாள் அவனுக்கு நெஞ்சிலே தைரியம் வந்தது. இப்பொழுது அந்தப் புனித ஓவியத்தை எழுத முடியும் என்ற தீர்மானத்துடன், அந்தச் சித்திரத்துக்கு மூலமான அந்த அழகியின் முகத்தைக் கூர்ந்து கவனித்தான். அவன் கண்ட காட்சி அவனைத் திடுக்கிட வைத்தது. அந்த முகத்தில் பழைய அழகியின் எழிலுருவத்தைக் காணவில்லை. நரை திரை மூப்பினால், அழகு சிதைந்து நிற்கும் ஒரு கிழவியின் முகத்தைத் தான் ஓவியன் பார்த்தான். அவன் கனவு கண்ட ஓவியம் முடிக்கப்படாமல் நின்றது.

ஹென்றி ஜேம்ஸ் முடிவு பெறாத ஓரே ஒரு ஓவியத்தை உலகுக்குக் கொடுத்தார். திரைப்பட உலகு முடிவுபெறாத பல ஓவியங்களைக் கொடுத்திருக்கிறது. ஒவ்வொன்றும் சோகம் நிறைந்ததொரு காவியம்தான்.



# மறக்கமுடியாத



# தியாக பூமி

முதன் முதலாக ஒரு காரியம் நடந்தால் அப்படி முதன் முதலாக நிகழ்வதாலேயே அதற்கு ஒரு பெருமை சேருகிறது. தியாக பூமியைப் பொறுத்தவரை பெருமைப்படத் தக்க பலப் பல முதன் முதல் நிகழ்ச்சிகளைக் கூறலாம். திரைப்படத்துக்கு எடுத்துக் கொள்ளப்பட்ட ''கல்கி'' அவர்களின் முதல் கதை தியாக பூமி. ஸ்ரீ எஸ். எஸ். வாஸன் முதன் முதலாகத் திரைப்படத் தயாரிப்பாளரானது தியாக பூமி படப் பிடிப்பின் போது. ஸ்ரீ கே. ஜே. மகாதேவன் திரை உலகில் முதன் முதலாக அடியெடுத்து வைத்ததும் இப்படத்தில்தான். ஸ்ரீமதி டி. கே. பட்டம்மாள் முதன் முதலாக சினிமாவில் பின்னணி இசை பாடியது தியாக பூமியில்தான். பம்பாய் தியேட்டரில் காலைக் காட்சியில் மட்டுமின்றி எல்லாக் காட்சிகளிலும் முதன் முதலாக ஓடிய தமிழ்ப் படம் தியாக பூமி. தேசிய எழுச்சியைத் தூண்டுகிற தென்பதால் அன்றைய பிரிட்டிஷ் அரசாங்கத்தின் அடக்குமுறைக்கு உள்ளான முதல் படம் தியாகபூமி. முதன் முதலாகத் திரைப் படத்தின் பெயர் புடவைகளுக்குச் சூட்டப்பட்டது தியாகபூமி படம் வெளியான போதுதான். தியாகபூமி புடவை, உமாராணி புடவை என்றெல்லாம் அமர்க்களப்பட்டது அக்காலத்தில். இப்படிப் பல 'முதல் பரிசு'களைத் தட்டிக் கொண்டு போன சிறப்பு தியாக பூமிக்கு உண்டு. அத்தகைய ஒரு படத்தை எப்படி மறக்க முடியும்?

இந்தப் படத்தை மட்டும் மறக்க முடியாத திரைப் படங்களின் வரிசையில் சேர்த்துவிட்டால் போதாது. இந்தப் படத்தைப்பற்றிய ரஸிகர்களின் பாராட்டுதல்கள், பத்திரிகைகளின் கடுமையான தாக்குதல்கள், விவாதங்கள் ஆகிய எவற்றையுமே மறக்க முடியாது. எல்லாவற்றையும்விட ஆசிரியர் ''கல்கி'' அவர்கள், தாக்குதல்களுக்கும், விவாதங்களுக்கும் தம் பேனாவின் மூலம் வன்மையாகவும், ஹாஸ்யமாகவும், திறமையாகவும் பதில் அளித்ததும் மறக்கமுடியாதுதான்.



ஸ்ரீ பாபநாசம் சிவன் அவர்கள் அரிய இசை ஞானம் பெற்ற அபூர்வ சாகித்ய கர்த்தா என்று மட்டுமே நினைத்துக் கொண்டிருந்தவர்கள் படத்தில் அப்பாவி சம்பு சாஸ்திரியாக அவரைப் பார்த்ததும் அதிர்ந்துதான் போனார்கள். பேச்சும், முக பாவங்களும் அவ்வளவு தத்ரூபமாக இருந்தன. இவரை வைத்துக் கொண்டுதான் 'கல்கி' அவர்கள் ''தியாக பூமி''யை எழுதினாரோ என்று சந்தேகப்படும்படி இருந்தது.

எத்தனை வருஷங்களானால் என்ன? பேபி சரோஜா என்றும் நம் நினைவை விட்டு அகலாத குழந்தை நட்சத்திரம்தான். படம் முழுவதும் வந்து, பலரும் புகழ நடித்து, மனம் முழுவதும் நிறைந்து விட்டாள். படுசுட்டித் தனமான அவள் பேச்சு, நடிப்பு, ராதா கிருஷ்ண நடனத்தில் கிருஷ்ணனாக வந்து 'கொஞ்சும் கிளியே நீ கோபம் கொண்டாயோ' என்ற பாட்டுக்கு பாவபூர்வமாக, அற்புதமாக நடனம் ஆடியது ஆகியவை மனத்தில் பதிந்து விட்டன.

ஒரு சமூக சீர்திருத்தக் கதை; ஓர் ஆசார சீர்திருத்தக் கதை; தந்தையன்பு, குழந்தைப் பாசம், ஆதரவற்ற அபலைப் பெண்ணின் அவதி ஆகியவற்றை யெல்லாம் படம் பிடித்துக் காட்டிய கதை ''தியாக பூமி''. இருபத்தைந்து ஆண்டுகளுக்கு முன்பு சீர்திருத்தம் பற்றிச் சிந்தித்துப் பார்க்கக் கூட முடியாத நிலையில் இருந்த சமூகச் சூழ்நிலையில் ஆசார சீர்திருத்தத்தைத் துணிந்து வெளியிட்ட புரட்சிப் படம்.

இந்தப் படத்தில் கதாநாயகியாக—சாவித்திரியாகவும், உமா ராணியாகவும் — தோன்றிய எஸ். டி. சுப்புலட்சுமி அவர்களைச் சந்தித்துத் ''தியாக பூமி''யைப் பற்றி அவருடைய நினைவுகளைக் கூறும்படி கேட்டேன்.

அப்பொழுது இருந்த சினிமா உலகமே வேறு. இப்பொழுது ஒரு நடிகர் குறைந்த பட்சம் இருபது படங்களிலாவது நடித்தால்தான் அவர் பெரிய நடிகராக மதிக்கப்படுகிறார். அப்பொழுது ஒரு நடிகர் ஒரு படத்தில்தான் நடிக்க முடியும். அந்தப் படம் முடிந்த பிறகுதான் இன்னொரு படத்தைப் பற்றி நினைக்கலாம். ஒரு படத்தில் சோகம், இன்னொரு படத்தில் மகிழ்ச்சி, மற்றொரு படத்தில் வீரம் — இப்படிப் பல்வேறு உணர்ச்சிகளையும் ஒரே நாளில் இந்த நாளைய நடிகர்கள் படப்பிடிப்பில்



# திரைப்படங்கள்

காட்ட வேண்டியிருக்கிறது. அதனால் நடிகர்களுக்கும் சிரமம்; படத் தயாரிப்பாளர்களுக்கும் சிரமம். அந்த நாளில் ஆறு மாதங்களுக்கு மேல் எந்தப் படமும் தயாரிக்கப்பட்டதில்லை. எவ்வளவோ வசதிக் குறைவுகளுக்கிடையில் நடிக, நடிகையர், டெக்னீஷியன்கள் ஆகியவர்களின் ஒத்துழைப்பிருந்ததைக் குறிப்பிட்டேயாக வேண்டும். கதாநாயகியிலிருந்து சாதாரணத் தோழி வரையில் திரைக் கதை முழுவதையும் தெரிந்து கொண்டிருப்பார்கள். இப்பொழுது கதாநாயகன், கதாநாயகி ஆகியவர்களுக்கும் கதையே என்னவென்று தெரியாது. ரொம்ப ரொம்பப் பிரபல நடிகர் நடிக்கும் படமாயிருந்து விட்டால் கேட்கவே வேண்டாம். டைரக்டருக்குக் கூடக் கதை தெரியாது!

கதையைக் கருத்துடன் கவனித்து, கதாபாத்திரங்களுடன் ஒன்றி, டைரக்டர்களின் யோசனைகளுக்கு மதிப்புக் கொடுத்து நடிக நடிகையர் நடந்து கொண்ட அந்தப் பொற்காலத்தில், தியாக பூமி படப் பிடிப்பின்போது, தாம் பட்ட இன்னல்களை இன்பமாகப் பாவித்துப் பின்வரும் நிகழ்ச்சிகளைக் கூறினார் ஸ்ரீமதி எஸ். டி. எஸ்.:

''கதாநாயகி கணவனின் ஆதரவை இழந்து, தந்தையிருக்கும் இடம் தெரியாமல் தனித்துக் கையில் குழந்தையுடன் ஊர் ஊராகத் தெருத் தெருவாக அலையும் காட்சி படமாக்கப்பட்டது. சென்னை நகரம் முழுவதும் வாட்டி வதைக்கும் வெய்யிலில், கையில் குழந்தையுடன் ஓடினேன், ஓடினேன், ஓடினேன்! இருபது மைல்களுக்குமேல் ஓடினேன். 'மேக்கப்'புடன் ஒரு பெண்மணி பட்டப் பகலில் ஓடுகிறாள் என்றால் கூட்டத்துக்குக் கேட்கவா வேண்டும்! எனக்குக் களைப்பு ஒருபுறம்! ஜனக் கூட்டத்துக்கு இடையில் ஓட வேண்டியிருக்கிறதே யென்ற அவமானம் ஒருபுறம். குழந்தைக்கோ 103 டிகிரி ஜுரம். அதை யெல்லாம் டைரக்டர் பொருட்படுத்தவே இல்லை. அந்தக் காட்சி தத்ரூபமாக அமைய வேண்டும் என்பதில்தான் அவர் கவனமெல்லாம் இருந்தது. அத்தனை சிரமப்பட்டது வீண் போகவில்லை என்பதையும் என் நடிப்பில் தனிச் சிறப்பை ஏற்படுத்தி விட்டது என்பதையும் பின்னால் பிறர் கூறத் தெரிந்து கொண்டேன்...

''அத்துடன் இன்னொரு முக்கியமான காட்சியின் படப் பிடிப்பும் நினைவுக்கு வருகிறது. இடியும், மழையும், காற்றும் அடிக்கும்போது நான் அதில் அகப்பட்டுத் தவிக்கும் காட்சியில் விமானத்தைக் கொண்டு வந்து நிறுத்தி அதன் விசிறி சுழலும் வேகத்தில் சாம்பல் புழுதியை வாரியிறைத்து, புயலின் சூழ்நிலையைத் தத்ரூபமாகக் காட்ட ஏற்பாடு செய்திருந்தார் டைரக்டர். படப் பிடிப்பு முடிந்து வீட்டுக்குப் போனதும் சாம்பல் புயல் காரணமாக உடம்பெல்லாம் வீங்கிப் போய் விட்டது. ரொம்பவும் அவதிப்பட்டேன்.''

''பேபி சரோஜாவை நடிக்க வைப்பதற்கு ரொம்பவும் சிரமப்பட வேண்டியிருந்ததோ?'' என்று கேட்டேன்.

''அதெல்லாம் இல்லை. அவள் பெரியப்பா டைரக்டர் கே. சுப்பிரமணியம் (இடது பக்கத்தில் மேலே காணப்படும் படம்) எதிரில் இருந்தால் போதும். சொன்னபடி யெல்லாம் கேட்பாள். அதனால் அவர் 'பேபி சரோஜா' விஷயமாக அதிகம் சிரமப்படவில்லை'' என்றார் ஸ்ரீமதி எஸ். டி. எஸ்.

புதுமையான கதையம்சம், இயல்பான வசனங்கள், கதா பாத்திரங்களுக்கு ஏற்ற நடிகர்கள், இவ்வளவையும் உணர்ந்து அயராது படத்தின் வெற்றிக்காக உழைக்கும் சிறந்த டைரக்டர் — இப்படி எல்லாம் ஒருமிக்கச் சேர்ந்து விட்டால் அந்தப் படத்தின் வெற்றிக்குக் கேட்க வேண்டுமா?

டைரக்டர் கே. சுப்பிரமணியம் அவர்களுக்குப் பெரும் புகழைத் தேடித் தந்த படம் ''தியாக பூமி''. படப் பிடிப்பு நடந்த நாட்களின் நினைவுகளைப் பற்றிக் கூறும்போது அவர் ''கல்கி'' அவர்களின் ஒத்துழைப்பைப் பற்றி மனநிறைவோடும் உள்ள நெகிழ்ச்சியோடும் நிறையச் சொன்னார்.

— விஜயம்



# காட்சி தரிசனம்





டி.கே.டி.துரைராசன்

குளித்த புருவம். கொவ்வைச் செவ்வாய். 'யாரும் கேளிர்' என்ற தத்துவத்தை மெய்ப்பிக்கிற வகையில் யாரைப் பார்த்தாலும் குமிழ் சிரிப்பு.

உலகத்தையெல்லாம் அன்பினால் ஆளுகிற மகாராஜனைப் போல் ஞானவியின் மடித்த இடது கையில் வீற்றிருந்தது அந்தக் குழந்தை. ரயில் வண்டியில் உட்கார்ந்திருந்தவர்களின் பார்வையெல்லாம் அந்தச் சிசுவின் மீதுதான்.

'சிரிக்கிறப்போ இடது கன்னத்திலே குழி விழுதில்லே. ரொம்ப அதிர்ஷ்டமான பையன்'' என்றாள் எதிரில் உட்கார்ந்திருந்த கிழவி. அதற்கு 'ஆமாம்' என்று தலையசைத்து விட்டுக் குழந்தையையே கனிவோடு பார்த்தாள் அவள் பேத்தி. நிறைமாத கர்ப்பிணி. தன் வயிற்றிலும் இது மாதிரி ஒரு பிஞ்சு, காய்த்துக் கனிந்திராதா என்ற ஜீவனுள்ள ஏக்கம் அவள் பசிய முகத்தில் படர்ந்தது!

ஞானவி வலது கையை மடித்து, இடது கையில் இருந்த குழந்தையை அதற்கு மாற்றினாள். தீபத்துக்கு அடியில் இருள் கவிழ்ந்திருந்ததைப் போல், பார்ப்பவர்களின் சிந்தை அணு ஒவ்வொன்றையும் சிலிர்க்கச் செய்யும் அந்தப் பால முருகனைப் பெற்றவளுக்கு மட்டும் உள்ளூர ஏதோ ஓர் ஏக்கம்.

''என்னம்மா? பையன் வயசு என்னம்மா?'' என்று கிழவி கேட்டாள்.

'ம்' என்று கேட்டு விட்டு, அதைத் தொடர்ந்து, 'ஒன்று' என்றாள் ஞானவி. அந்த வார்த்தையைத் தொடர்ந்து அவள் மனம் 'மூன்று வருஷங்கள்' என்று முணுமுணுத்தது. கணவனின் கைப்பிடித்து — அவன் காரியம் யாவிலும் பங்கெடுக்க ஞானவி தன் வாழ்க்கையைத் தொடங்கி மூன்றாண்டுகள் முடிந்துவிட்டன. அதற்குள் எத்தனை மாற்றங்கள்? கனன்றெழுந்த மனத் துயரத்தை ஒரு பெருமூச்சாக விட்டாள்.

''எந்த ஊருக்குப் போறீங்க?'' என்று பாசத்தோடு கேட்டாள் கிழவியின் பேத்தி. அப்போதே, அங்கேயே தனக்குக் குழந்தை பிறந்து அதை எடுத்துக் கொஞ்ச வேண்டும் போலிருந்தது அவளுக்கு.

'கும்பகோணம்' என்றாள் ஞானவி ஒரே வார்த்தையில். அவளுக்குப் பேச்சிலேயே நாட்டம் இல்லை. ஒவ்வொரு விநாடியும் அவரைப் பற்றியே நினைத்து நினைத்து நெஞ்சு நெக்குருக வேண்டும் என்று அவள் மனசு ஆசைப்பட்டது. ஆனால் எங்கே முடிகிறது? இப்படி ஏதாவது கேள்வியும் பதிலுமாக வந்து சிந்தனையைச் சிதறடிக்கின்றனவே!—செவிப் பாறையைத் துணுக்காகக் கிழித்தெறிந்து விட்டு அரவம் எதுவும் கேட்காத செவிடாகி விட வேண்டும்.

'நச்சு...நச்சு!' என்று கிழவி மறுபடியும் தன் பொக்கை வாயைத் திறந்தாள். ''பொறந்த வீட்டுக்குப் போறியா?''

''இல்லே; இவங்க அப்பா வீட்டுக்குப் போறேன்'' என்று தன் மகனை நோக்கினுள் ஜானகி. 'அப்பா' என்ற வார்த்தையைக் கேட்டதும் 'எங்கே.... எங்கே?' என்று குழந்தையின் மலர்க் கண்கள் 'மாதிரம்' அனைத்தையும் அளந்தன.

''ம். அப்பான்னு சொன்னதும் உடம்பு என்னமா சிலிர்க்குது பாரு!'' என்று கிழவி சிரித்தாள். பிறகு தன் வலது கைக் கட்டை விரலாலும், ஆள்காட்டி விரலாலும், குழந்தையின் கீழ் உதடு குவிந்திருந்போல் அழுத்திப் பிடித்து, ''போக்கிரிப் பையா, அப்பா வீட்டுக்குப் போறியா — தாத்தாவைப் பார்க்கப் போறியா?'' என்று - கனியக்] [கனியச் சிரித்தாள்.



ஜானகி நினைத்தாள். ஆம், தாத்தாவைப் பார்க்கத்தான் போகிறுன். மண்ணில் ஜனித்தது முதல் மலர் போலவும், மாணிக்கச் சிலை போலவும், கண்ணுக்குள் மணியாய், மணியுடு பாவாய் வளர்த்த அப்பனை இழந்து விட்டு, இன்று தாத்தாவிடம் போகிறுன். வெறுமனே போகவில்லே. அடைக்கலம் தேடிப் போகிறுன்.

அவள் துயரத்தை வெளிக்காட்ட, 'இதோ வந்தேன்' என்பது போல் கண்களில் இரண்டு சொட்டுக் கண்ணீர் மின்னியது. அதைத் தொடர்ந்து 'ஓ' வென்று முகத்தை மூடிக்கொண்டு அழத் தொடங்கி விட்டாள் ஜானகி. அதே சமயத்தில், எழும்பூரை விட்டுப் புறப்பட்ட ரயிலின் 'கூ' என்ற சத்தமும் எழுந்து விட்டதால் நிறையப் பேருக்கு ஜானகியின் ஓலம் கேட்கவில்லே. கேட்டவர்களுக்கு மட்டும் [அந்த ஓலத்தில் ஏதோஓர் உயிரும் கலந்திருப்பதாகப் பட்டது.

கும்பகோணத்தில் இறங்கி ஒரு ஜட்காவில்ஏறிஉட்கார்ந்து கொண்

டாள் ஜானகி. ''எங்கேம்மா போகணும்?'' என்றான் ஜட்கா வண்டிக்காரன்.

''மாமா வீட்டுக்கு!''

''எங்கே?''

ஜானகி சமாளித்துக் கொண்டாள். ''பிள்ளையார் தெரு'' என்றாள்.

''பத்தணும்மா'' என்று வாடகையைத் தீர்மானமாகக் கூறிவிட்டு 'ஹை' என்று முடுக்கினான் வண்டிக்காரன். 'டொக், டொக்' என்று குதிரை நகர்ந்தது.

அப்பன் பிறந்த ஊரின் அழகைப் பையன் ஆவலோடு பார்த்துக் கொண்டு வந்தான். ஆனால் கணவன் பிறந்த ஸ்தலத்தின் புண்ணியாலங்காரத்தை மனைவி முன்பும் பார்த்ததில்லை; இப்போதும் பார்க்கவில்லை. அவளுக்குத் தெரிந்ததெல்லாம் கும்பகோணம் என்று ஊர், அங்கே பிள்ளையார் தெரு என ஒரு வீதி. அதில் பத்தாம் நம்பர் வீடு. அவ்வளவுதான்.

அந்த வீட்டில் இரண்டு மூத்த சகோதரிகளோடும், ஓர் அண்ணனோடும் பெற்றோருக்குக் கடைசிப் பிள்ளையாய்ப் பிறந்து அந்த ஊரிலேயே பள்ளிப் படிப்பை முடித்து, கல்லூரிப் படிப்புக்குச் சென்னை வந்து, டாக்டர் படிப்பில் இறங்கி அதில் முதல் வகுப்பில் பாஸ் செய்தான் நாராயணன். அதற்குப் பிறகு தான் ஒரு ஜீவ காவியம் மலர்ந்தது.

சென்னை ஜெனரல் ஆஸ்பத்திரியில் நாராயணனை 'அவுஸ் சர்ஜ'னாகப் போட்டிருந்தார்கள். பயிற்சி நேரம் போக மீதி நேரத்தை உல்லாசமாகக் கழித்தோம் என்றில்லை. எந்நேரமும் ஸ்டெதாஸ்கோப்பை மாட்டிக் கொண்டு வார்டுக்கு வார்டு அலைவான். அதில் அவனுக்கு ஓர் இனம் தெரியாத நிம்மதி.

நர்சுகள் தமக்குள் சிரித்துக் கொள்வார்கள். ''பைத்தியம்! வேறு வேலை இல்லை. எந்நேரமும் இங்கேயே சுற்றிக் கொண்டு....'' என்று சில சமயங்களில் முணுமுணுத்துக் கொண்டதும் உண்டு. ஆனால் ஜானகி அதற்கு விதிவிலக்கு. சக நர்சுகள் அபிப்பிராயத்தை அவள் ஏற்றுக் கொண்டதே இல்லை.

மடிப்புக் கலையாத வெள்ளை பேண்ட் அணிந்து, வெண்மையான ஷொக் சட்டையை 'இன்' செய்து, இடுப்பில் மெல்லிசான ஒரு பெல்ட்டைப் போட்டுக் கொண்டு வார்டுக்குள் நுழைந்தானானால் ஜானகி அந்த அழகில் ஒரு நிமிஷம் தன் மனத்தை லயிக்க விடுவாள். அப்பொழுது பார்த்து ஒரு நோயாளியின் முனகல் கேட்கும். உடனே அவள் பார்வை நாராயணனிடமிருந்து திரும்பி விடும்.

ஒரு நாள், ஆஸ்பத்திரிக்கு வெளியில் பஸ் ஸ்டாப்பில் நின்றிருந்த ஜானகியின் செவிகளில் 'ஜானகி' என்று மெல்லிசான சத்தம் கேட்டது. சற்றுத் தள்ளி ஸ்கூட்டரில் நாராயணன் உட்கார்ந்திருந்தான். ''எஸ், டாக்டர்'' என்று நெருங்கினாள் ஜானகி.

''எங்கே போகிறீர்கள்?'' நாராயணனின் கனிந்த கேள்வி.

''புரசைவாக்கம் போகிறேன்.''

''பின்னால் உட்கார்ந்து கொள்ளுங்கள். நான் கெல்லீஸ் போகிறேன். வழியில்....''

ஜானகிக்கு மேனி சிலிர்த்தது.

''தாங்ஸ். நான் பஸ்ஸிலேயே....!''

''பரவாயில்லை. ஏறிக் கொள்ளுங்கள். நான் ஜாக்கிரதையாக ஓட்டுவேன்.''

அடுத்த நிமிஷம் ஜானகியைச் சுமந்து கொண்டு ஸ்கூட்டர் தேர் போல் ஊர்ந்தது. சுற்றிலும் ஓராயிரம் கண்கள் தன்னைப் பார்ப்பதாக ஓர் உணர்ச்சி அவள் உள்ளத்தை அழுத்தியது.

''உங்களுக்கு எந்த ஊர்?''

கனவுலகில் இருந்த ஜானகி 'ம்' என்று கேட்டாள். அடுத்த வினாடியே, ''இதே ஊர் தான்!'' என்றாள்.

''எனக்குக் கும்பகோணம். உங்களுக்கு இங்கே யார் இருக்கிறார்கள்?''

''பாட்டி.''

''அப்பா, அம்மா.....?''

''இல்லை! வேகமாக ஓட்டுங்களேன்.''

''ஏன்?''

''நீங்கள் மெதுவாக ஓட்டுவதைப் பார்த்து இப்போதுதான் கற்றுக் கொள்வதாக வழியில் போகிறவர்கள் நினைக்கிறார்கள்.''

''அதெப்படித் தெரியும்?''

''நானே அப்படித்தான் நினைக்கிறேன்.''

'கலகல' வென்று சிரித்தான் நாராயணன். அந்தச் சத்தத்துடன் ஜானகியின் சிரிப்புச் சத்தமும் கலந்தது. அதே சமயத்தில் அவர்களது இரண்டு உள்ளங்களும் ஒன்று சேர்ந்தன. இப்படியே ஸ்கூட்டரில் உலகத்தின் எல்லைக்கே போகக் கூடாதா என்று ஏங்கினாள் ஜானகி. ஆனால் புரசைவாக்கத்தில் ஸ்கூட்டர் நின்றதும் பத்திரமாகப் பதுமை போல் இறங்கிக் கொண்டாள்.

''வரட்டுமா?''

''வீடு பக்கத்தில்தான். வந்து விட்டுப் போங்களேன்!''

''இல்லை, இன்னொரு முறை. வரட்டுமா?''

''ம்ம்ம்.''

ஸ்கூட்டர் பறந்தது.

இரவெல்லாம் ஜானகி தூங்கவே யில்லை. அவள் தூங்காததைக் கண்டு 'உடம்புக்கு என்னம்மா?' என்று கேட்டாள் பாட்டி. அதற்கும் பதில் சொல்லாமல் அவள் அவனைப் பற்றியே நினைத்துக் கொண்டிருந்தாள்.

மறு நாள் ஆஸ்பத்திரியில் சந்தித்துக் கொண்ட போது இருவரது கண்களும் என்ன வெல்லாமோ பேசின. அந்த ஒரு நிமிஷப் பார்வையிலும் இரவெல்லாம் தூங்காமல் நாராயணன் முகம் வெளிறிப் போயிருப்பதைக் கண்டு ஜானகியின் மனம் ஒரு வினாடி மகிழ்ச்சியால் துள்ளியது. ஆனால் மறு வினாடியே லட்சணமான முகம் எப்படிச் சோர்ந்திருக்கிறது என்று வருந்தியது.

அன்று சாயந்திரமும் ஸ்கூட்டர் பிரயாணம் தான். ''இன்றுகூட கெல்லீஸ்தானா?'' என்று குறும்பாகக் கேட்டாள் ஜானகி.

''புரசைவாக்கம் வரை.'' — நமட்டுச் சிரிப்புடன் பதில் சொன்னான் நாராயணன்.

ஜானகிக்கு விளங்க வில்லை. ''அங்கே யார் இருக்கிறார்கள்?''

''நீ!'' — நாராயணன் ஒரே எழுத்தில் பதில் சொன்னான்.

'நீங்கள்' போய், 'நீ' வந்ததை ஜானகி கவனிக்காமல் இல்லை.

''ஏன் வரக் கூடாதா?'' என்றான் நாராயணன். ஜானகியிடமிருந்து பதில் இல்லை. நேராகப் போய்க் கொண்டிருந்த ஸ்கூட்டர் எழும்பூர் அருகே வந்ததும் திடீரென்று இடது


நான் எப்பொழுதும் சிறந்ததையே
உபயோகிக்கிறேன்
நான் தேர்ந்தெடுப்பது எவரெஸ்ட்
• எளிதாக, நம்பகமாக உழைக்கிறது.
• நியாயமான விலை
• பூராவும் உத்திரவாதமுள்ளது
• எடுப்பான தோற்றமுள்ளது
• விற்பனைக்குப் பிறகு உடனுக்குடன் பராமரிப்பு கிடைக்கிறது.
EVEREST
EVEREST
EVEREST
எவரெஸ்ட் தையல் மெஷின்
தயாரிப்பாளர்கள்: சார்தா மெஷினரி கார்ப்பொரேஷன்
தலைமை ஆபீஸ்: 11. பூஸா ரோடு. புதுடில்லி-5.
பாக்டரி: கிராண்ட் டிரங்கு ரோடு. குரோம்பேட், மதராஸ்.

ஏப்ரல் 12உ முதல்

சென்னை:

வெலிங்டன், புவனேஸ்வரி & மஹாராணி

மற்றும்

தென்னாடெங்கும்

மாடர்ன் தியேட்டர்ஸ்

# காட்டு ரோஜா

டைரக்ஷன்
A. சுப்பாராவ்

பாடல்கள் கண்ணதாசன் • சங்கீதம் K.V. மகாதேவன்



கைப்பக்கம் திரும்பிச் சென்று மவுண்ட்ரோட் வழியாக மரீனா கடற்கரையை வந்தடைந்தது.

தலைவன் அழைத்துக் கொண்டு போகிறான் என்ற எண்ணத்தில் தலைவி மறுப்பேதும் சொல்லவில்லை. கடற்கரையிலிருந்து வெகு நேரம் கழித்து அவர்கள் திரும்பியபொழுது வெறும் மனித இனத்தவராகத் தெரியவில்லை. கந்தர்வ மணம் புரிந்து கொண்ட தேவர்களைப் போல் திகழ்ந்தார்கள்.

ஜானகியை அவள் வீட்டில் விட்டு விட்டு அறைக்கு வந்த நாராயணன் தன் தந்தைக்கும் — அண்ணனுக்கும் தனித்தனியே இரண்டு கடிதங்களை எழுதினான். ஒரே விஷயம்தான். எழுத்து நடை மட்டும் வேறுபட்டிருந்தது.

ஆனால் அந்தக் கடிதத்தைப் பார்த்ததும் அந்தத் தந்தையும் அண்ணனும் 'பாவி' என்ற ஒரே வார்த்தையைத்தான் அழுத்தம் திருத்தமாகச் சொன்னார்கள். அப்போதே காரை எடுத்துக் கொண்டு சென்னைக்குக் கிளம்பி வந்து விட்டார்கள்.

தந்தை, வழியில் ஏதேதோ பிரலாபித்துக் கொண்டு வந்தார். அண்ணன் சமாதானம் சொன்னான்: 'கவலைப்படாதீர்கள் அப்பா! அவன் காதைப் பிடித்து இழுத்துக் கொண்டு வந்து விடலாம்' என்று.

ஆனால் நாராயணனோ தந்தையின் கையையும், காலையும் பிடித்தான். அண்ணனிடம் கெஞ்சினான். ஆனால் அவர்கள் கோபம்தான் வளர்ந்ததே தவிர மனம் மட்டும் கொஞ்சமும் மாறவே இல்லை.

''அப்பா! ஜானகியைத்தான் நான் மணந்து கொள்வேன்'' என்று நாராயணன் ஒரே பிடிவாதத்தில் நின்றான். 'பளீர்' என்று ஓர் அறை கொடுத்துவிட்டு அண்ணன் வெளியேற, அவனைப் பின்தொடர்ந்த தந்தை அறையின் வாசற்படியில் நின்று சற்றே திரும்பி நாராயணனின் முகத்தையும் பாராமல், ''பரம்பரை பரம்பரையா சீரோடு வாழ்ந்த ஒரு குடும்பத்தின் கௌரவம் உன்னாலே கெடப் போகுது. இதுக்கெல்லாம் நீ பட்டு அலையப் போறே!'' என்று சபித்தார்.

அதோடு அந்த உறவு முறிந்தது.

ஜட்கா வண்டியில் நெடுந் தூரம் பயணம் செய்வது போல் பட்டது, ஜானகிக்கு. ''இன்னும் எவ்வளவு தூரம்?'' என்று ஆற்றாமல் கேட்டாள்.

''ரெண்டு பர்லாங்கும்மா!''

அதுவரையில்லாமல் அவள் மனத்தில் புதிதாக ஒரு நடுக்கம் தோன்றியது. மாமனாரை அவள் தன் கணவன் வைத்திருந்த புகைப் படத்தில் பார்த்ததுதான். ஆனால் இவளையோ அவர் புகைப்படத்திலும் பார்த்ததில்லை. அத்தையைப் பற்றிய பிரச்னையே இல்லை. அவள்தான் நாராயணன் சிறுவனாக இருக்கும் போதே சுமங்கலியாகக் காலமாகிவிட்டாளே!

நாராயணனுக்கும் ஜானகிக்கும் கலியாணம் நடந்து இரண்டு வருஷங்கள் கழிந்து அப்பனை உரித்து வைத்தாற் போல் ஒரு பையன் பிறந்தான். ஜானகியின் நச்சரிப்புத் தாங்க மாட்டாமல் நாராயணன் தன் தந்தைக்கு ஒரு தந்தி கொடுத்தான், 'உங்களுக்குப் பேரன் பிறந்திருக்கிறான்' என்று. ஆனால் அவரோ அந்தத் தந்தியை ஒரு சாதாரண



''நெருக்கடி நிலைமையை உத்தேசித்துப் பணம் விரயம் செய்ய மனமின்றி நம்ப ராமசேஷு ஹாட்டு வாங்காமல் தலை மயிரையே ஹாட்டு மாதிரி வெட்டிண்டிருக்கான் பார்த்தீரா!''

மான கடிதம் போல் பாவித்து மூன்று நாட்களுக்குப் பிறகு ஒரு கடிதம் போட்டு விட்டார். ''நீயே எனக்கு மகனாக இல்லாத போது — உன் மகன் எனக்கு எப்படிப் பேரனாவான்?'' என்று அந்தக் கடிதத்தில் ஆணித்தரமாக வாதித்திருந்தார்.

அந்தக் கடிதத்தைச் சுக்கல் சுக்கலாகக் கிழித்தான் நாராயணன். ஏதோ ஒரு கோபத்தில் 'இனி செத்தாலும் இவர்கள் முகத்தில் விழிப்பதில்லை' என்று கறுவினான். எந்த நேரத்தில் அவ்வாறு சொன்னானோ — அப்பன் முகத்தைப் பார்க்காமலேயே நாராயணன் போய் விட்டான்.

ஜானகிக்குத் துக்கம் நெஞ்சை அடைத்தது. சற்றே விம்மினாள். ஜட்கா வண்டிக்காரன் எமப் பயல். விம்மல் சத்தத்தைக் கேட்டுத் திரும்பிப் பார்க்காமல் இரண்டு புருவங்களை மேலே உயர்த்தி, முகத்தைக் கோணலாக்கிக் கொண்டு, 'ஹை...ஹை' என்றான். சோதாக் குதிரை மிதித்த இடத்திலேயே மிதித்தது.

முடிவில்லாததாய்த் தோன்றிய அந்தப் பிரயாணமும் முடிந்தது. ''எந்த வீடும்மா?'' என்றான் ஜட்காக்காரன்.

இங்கேயே இறங்கிக் கொள்ளலாமே! ஜானகி தெரு முனையிலேயே இறங்கிக் கொண்டாள். ஒரு ரூபாய் நோட்டை எடுத்துக் கொடுத்து விட்டு, சில்லறைக்காகக் காத்திராமல் தன் மெலிந்த நடையைத் தொடங்கினாள்.

ஒவ்வொரு வீட்டு நம்பரும் பத்து போலத் தெரிந்தது. உண்மையான பத்தாம் நம்பர் வீட்டை நெருங்கும் போது சர்வாங்கமும் நடுங்கின. ஜாக்கிரதையாக வலது காலை எடுத்து வாசற்படியில் வைத்து நுழைந்தாள். ஆலயத்தில் நுழைவது போன்ற ஒரு பயபக்தி.

''யாரது?'' — நடுக் கூடத்தின் ஓர் ஓரத்திலிருந்து தடித்த குரல் வந்தது. செயலற்றுச் சிலையாக நின்றாள் ஜானகி.

''யாரம்மா நீ?'' — பெரியவர் எழுந்து வந்தார். அவர் பார்வை பொம்மை மாதிரி இருந்த குழந்தை மீதே பதிந்திருந்தது.

பொங்கி வந்த அழுகையை அடக்கிக் கொண்டு ''மாமா'' என்றாள் ஜானகி. பெரியவர் ஓரடி பின்வாங்கினார். ''நீயா?''—அவர் குரல் நெருப்பைக் கக்கியது.

இதற்குள் சமையற்கட்டிலிருந்து அண்ணாவின் மனைவி பங்கஜம் ''யாரு மாமா அது?'' என்று கேட்டுக் கொண்டு வந்தவள், ஜானகியின் கையில் இருந்த குழந்தையைப் பார்த்ததும், வெண்ணெய் திருடிய கண்ணனை நினைத்துக் கொண்டு, உதட்டோரத்தில் ஒரு புன்னகையை நெளிய விட்டாள். பதிலுக்குக் குழந்தையின் முகத்தில் சிரிப்பு மலர்ந்தது.

''நாசகாரி'' என்ற பெரியவரின் குரல் வீட்டுச் சுவர்களில் மோதி எதிரொலித்தது. அதைத் தொடர்ந்து, ''அந்த அநாதைப் பயல் எங்கே?'' என்று சீறினார்.

''அவரைப் பறிகொடுத்து விட்டேன், மாமா!'' என்று முகத்தைப் புடவைத் தலைப்பால் மூடிக் கொண்டாள் ஜானகி.

மலர்ந்து சிரித்த குழந்தையின் முகம் சட்டென வாடியது. சிணுங்கத் தொடங்கினான்.

பெரியவர் அருகில் இருந்த தூணில் சாய்ந்து விட்டார். ''நாராயணன் இறந்து விட்டானா? என் மகன் இறந்து விட்டானா?'' என்று உடைந்துவிட இருந்த நெஞ்சில் கை வைத்து அழுத்திக் கொண்டார்.

''ஐயோ!'' என்றாள் பங்கஜம். குளித்து மஞ்சள் பூசியிருந்த அவள் முகத்தில் விஷம் படர்வதுபோல் கருமை படர்ந்தது.

''நீதான் ஜானகியா?'' என்றாள் பேய்க் குரலில்.

''ஆமாம், அக்கா!''

''சீ, போடி வெளியே! எங்கள் ராஜகுமாரனைக் கொன்னுட்டியே'' என்று அருகில் இருந்த தூணில், உத்தரம் இடிந்து விடுமாறு ஓங்கித் தலையை முட்டிக் கொண்டாள்.

''என் மகனே! உன்னால் என் கௌரவம் கெட்டது வாஸ்தவம்தான். அதற்காகக் கடவுள் இந்தத் தண்டனையையா கொடுத்தான்?'' என்று பெரியவர் வாய்விட்டுக் கதறினார். ஆஜானுபாகுவாய் இருந்த அவர் மேனி சிறுத்து விட்டது போல் இருந்தது.

அழுகைக் குரல் ஓங்கி வந்த சமயத்தில் ஜானகி ஆணையிடுவது போல் ''அழுவதை நிறுத்துங்கள்'' என்றாள் உரத்த குரலில்.

''ஏன் இப்படி அழுகிறீர்கள்? அவர் வீர மரணம் அடைந்திருக்கிறார். நாற்பத்துநாலு கோடி மக்களின் மானத்தைக் காப்பாற்றுவதற்காக மார்பில் எதிரியின் துப்பாக்கிக்குண்டு பட்டு இறந்திருக்கிறார். அதற்காக நீங்கள் ஏன் அழ வேண்டும்?''

கணீர் கணீர் என்று மணியோசை போல் ஒலித்தது ஜானகியின் குரல். சற்று நேரத்துக்கு முன்பு வரை மருகி, வெதும்பி, பேதையாய்க் காட்சி அளித்தவள் வீராங்கனை போல் தென்பட்டாள். அழுவதை நிறுத்தி விட்டுப் பெரியவர் ஏதோ அதிசயத்தைப் பார்ப்பது போல் பார்த்தார்.

''ஆமாம், மாமா! உங்கள் பிள்ளை போர்க்களத்தில் உயிர் நீத்திருக்கிறார். நான்தான் அவரைப் போர்க்களத்துக்கு அனுப்பினேன். அங்கே ஒரு காவல் நிலையத்தில் நம் வீரர்களில் சிலருக்குக் காயம்பட்டிருப்பதாகவும், அவர்களுக்கு உடனே சிகிச்சை தர வேண்டுமென்றும் ஆஸ்பத்திரிக்குச் செய்தி வந்ததாம். 'வீரர்களைக் கொண்டு வர நேரமாகும். நானே காவல் நிலையத்துக்குப் போகிறேன்' என்று துணிந்து அவர் கிளம்பி விட்டாராம்.

''வீரர்களுக்குச் சிகிச்சை செய்து கொண்டிருக்கும் போதே எதிரிகள் அக்காவல் நிலையத்தைத் தாக்கினார்களாம். உடனே இவரும் துப்பாக்கியை எடுத்துக் கொண்டு போர்க்களத்தில் குதித்து, வீர மரணத்தைத் தழுவிக் கொண்டாராம். நேற்றுக் காலைதான் எனக்குத் தந்தி வந்தது. அதைப் பார்த்து நான் அழவா செய்தேன்? இல்லை. நானே அழாத போது நீங்கள் ஏன் அழுகிறீர்கள்?''

பெரியவரின் மனம் உடனே காடு மலை வனாந்திரங்களைக் கடந்து, இந்தியாவின் வட எல்லைக்குத் தாவியது. நெடிதோங்கிய கைலையங்கிரியில் அவர் மகன் சிங்கத்தைப் போல் பாய்ந்து செல்வது தெரிந்தது. எதிரில் நூறு சீனர்கள் வருகிறார்கள். அவர்கள் மத்தியில் புகுந்து கதிகலங்கச் சாடுகிறான் நாராயணன். அப்போது ஒரு குண்டு பரந்த அவன் மார்பைத் துளைக்கிறது. திட்டுத் திட்டாகப் பனி மூடிய சிகரங்களில் சொட்டுச் சொட்டாக அவன் மார்பு ரத்தம் கசிகிறது. அதற்குமேல்! அதற்கு மேல்!...

பெரியவருக்கு ஆவேசம் வந்தது போல் கைகால்கள் நடுங்கின. அவ்வாறு நடுங்குகிற கரங்களைக் கூப்பிய வண்ணம், ''அப்பா, என் மகனே!'' என்று நா நடுங்கத் தொழுதார்.

பங்கஜமோ தூணோரத்தில் மற்றுமொரு தூண் போல் நின்றாள். அவளது பார்வை நாராயணன் கல்லூரியில் படித்த போது தேசிய மாணவர் படையில் சேர்ந்து எடுத்துக் கொண்ட படங்களில் லயித்திருந்தது!

ஜானகி தொடர்ந்து பேசினாள்:

''இதைச் சொல்வதற்காக மட்டும் நான் இங்கே வரவில்லை. இந்தக் குழந்தையை இங்கேயே விட்டு விட்டு நானும் அங்கே போகப் போகிறேன். சிகிச்சை செய்வதற்கு நர்சுகள் வேண்டுமாம். அதற்காகப் போகிறேன். அவர் விட்டுச் சென்ற காரியத்தைத் தொட்டு முடிக்கப் போகிறேன்!'' என்று சொல்லி விட்டுக் குழந்தையின் இரண்டு கன்னங்களிலும் தீராத ஆசை தீருமாறு முத்தமிட்டாள்.

பிறகு அவனைக் கீழே இறக்கி விட்டு விட்டு, மாமனாரின் பாதங்களை நமஸ்கரித்தாள். பெரியவரின் சிந்தனை கைலாச மலையிலிருந்து இன்னும் திரும்பவில்லை.

ஜானகி எழுந்தாள். ''வருகிறேன் அக்கா'' என்று பங்கஜத்திடம் சொல்லி விட்டு லட்சிய வெறியோடு வெளியேறி நடந்தாள்!

அதையும் பெரியவர் கவனிக்க வில்லை. அவர் கண்களில் முழுக்க முழுக்கத் தெரிந்தது, நாராயணன் உருவம்தான்.

ஆனால் இந்த முறை தென்பட்டது அவர் மகன் நாராயணன் அல்ல. கோடி சூரியப் பிரகாசமுள்ள கிரீடம் சூடி, மார்பில் கனத்ததொரு மலர் மாலை புரள, ஒரு கையில் சங்கும் மறு கையில் சக்கரமும் தாங்கி, தலைக்குப் பின்புறம் ஜோதி வட்டம் சுழல, துஷ்ட நிக்ரஹ சிஷ்ட பரிபாலனாகிய சாட்சாத் நாராயணனே அவருக்குக் காட்சி தந்து கொண்டிருந்தான்.

# அருணாகிரி விலாஸ்




சீயக்காய் பவுடர்

BS

**ARUNAGIRI VILAS SOAP NUT POWDER, KARAIKUDI.**

---

புதிய பெரிய டப்பாவில்

# கால்கேட் பேபி பவுடர்

அதிகப் பவுடர்...
அதிகச் சிக்கனம்...

புதிய சுலபமாக
அழுந்தும் மூடி!

குழந்தையின் நளினமான
சருமத்திற்கு இதமளிக்கிறது!





# உலகத்தின் கதை



நாம் வசிக்கும் இந்த உலகத்தைப் பற்றித் தெரிந்து கொள்ள வேண்டாமா? புராதன மக்கள் இந்த உலகத்தைப் பற்றி விநோதமான அபிப்பிராயங்களைக் கொண்டிருந்தனர். நீ கூடக் கேட்டிருப்பாய், உன் பாட்டியிடம் — இந்தப் பூவுலகத்தை ஆயிரம் நாவு படைத்த ஆதிசேஷன் தன் தலையில் தாங்கிக் கொண்டிருப்பதாக. பூமி தட்டையானது என்று நம்பிய காலமும் உண்டு. ஆனால் அது உருண்டை என்பதை இப்போது நீ ஆதாரபூர்வமாக விளக்குவாய். அதேபோல ஒரு காலத்தில் வான வீதியிலே நாம் வசிக்கும் பூமியே நடுநாயகமாக விளங்கிச் சந்திரன் சூரியன் நட்சத்திரம் ஆகியவைகளே பூமியைச் சுற்றி வருகின்றன என்று நம்பி வந்தார்கள். ஆனால் இன்றைக்கு இப்படிச் சொல்பவர்களைப் பார்த்து நீ சிரிப்பாய். சூரியனைச் சுற்றித்தான் பூமியும் மற்றக் கிரகங்களும் சுழலுகின்றன என்றுதான் உனக்குத் தெரியுமே!

ஆனால்.....?

இந்தப் பூமியையும் இதன் தோற்றத்தையும் பற்றி நீ இன்னும் தெரிந்து கொள்ள வேண்டியது இன்னும் எத்தனையோ இருக்கின்றன. இந்த உலகம் தோன்றி எத்தனை வருஷங்கள் ஆயின? பூமி எப்படித் தோன்றியது? தோன்றும்போதே, நீ இப்போது உலகப் படத்திலும் உன்னைச் சுற்றிலும் பார்க்கிறாயே, அப்படியேதான் தோன்றியதா? இல்லவே இல்லை. அப்படியானால்?

பூமி எப்படி எப்போது தோன்றியது என்பதைச் சொல்லுவதற்கு முன்னால் சூரியனைப் பற்றி ஒரு சில விஷயங்களை உனக்குச் சொல்லியாக வேண்டும். சூரியனைப் பற்றி உனக்குச் சொல்ல எத்தனையோ விஷயங்கள் இருந்தாலும் இங்கே முக்கியமான சில விஷயங்களை மட்டுமே சொல்லப் போகிறேன்.

சூரியனைச் சுற்றிப் பூமியும் மற்றக் கிரகங்களும் சுற்றி வந்தாலும் கூட வான வீதியின் நடுநாயகன் சூரியனல்ல. 'ஸோலார் ஸிஸ்டம்' என்ற சூரியப் பாதையில் மட்டும்தான் நமது சூரியன் நடுநாயகன். வான வீதியில் நீ பார்க்கும் பல்லாயிரக்கணக்கான நட்சத்திரங்களைப் போலச் சூரியனும் ஒரு நட்சத்திரம்! அதுவும் ரொம்பச் சாதாரணமான ஒரு நட்சத்திரம்! ஏன், வியப்பாக இருக்கிறதா? 'சூரியன் இவ்வளவு பெரியதாக இவ்வளவு பிரகாசமாக இருக்கிறதே; அதை எப்படி நட்சத்திரம் என்று சொல்வது? என்று நினைக்கிறாயல்லவா? சூரியனாகிய நட்சத்திரம் பூமிக்கு மிக அருகில் அதாவது சுமார் 93,000,000 மைல்கள் தூரத்தில் இருப்பதால் தான் அது இத்தனை பெரிதாகவும் பிரகாசமாகவும் தெரிகிறது. வானத்தில் நீ காணும் மற்ற நட்சத்திரங்கள் ஒளிப் புள்ளியாக மினுக்குவதிலிருந்து அது எத்தனை கோடி கோடி மைல்களுக்கப்பால் இருக்க வேண்டும் என்பதை நீயே ஊகித்துக் கொள்ளலாம்!

சூரியன் மிக மிகச் சூடான ஒரு நட்சத்திரம். இதன் நடு மையத்தின் உஷ்ணம் 2,00,00,000 பாரன் ஹீட்டாகும். இதன் மேல் பரப்பின் உஷ்ணம் 11,000 டிகிரி பாரன்ஹீட். இத்தனை சூடான சூரியனின் மேல் பரப்பில் பூமியில் கிடைக்கும் பல பொருள்கள் இருப்பதாக விஞ்ஞானிகள் கண்டு பிடித்திருக்கிறார்கள். அவைகளில் இரும்பு, வெள்ளி, தாமிரம், அலுமினியம், ஈயம் ஆகியவை முக்கியமானவை. பூமியில் இவை திடப் பொருள்களாகக் கிடைக்கின்றன. ஆனால் சூரியனிலோ எந்தப் பொருளும் திடமாகவோ, திரவமாகவோ இருக்க முடியாது.





எத்தனை உஷ்ணம் அங்கு? அங்குள்ள எந்தப் பொருளும் வாயு உருவத்தில்தான் இருக்க முடியும். சூரியனை நெருப்புக் கோளம் என்றுகூட வர்ணிப்பது உண்டு. ஆனால் இது முற்றிலும் உண்மையல்ல. மின்சார விளக்கினுள் 'பிலமெண்ட்' என்னும் 'டங்ஸ்டன்' கம்பி எப்படி வெள்ளைச் சூடாகி வெளிச்சத்தை உமிழ்ந்தாலும், தான் எரிந்து போகாமல் அப்படியே இருக்கிறதோ, அதே போலத்தான் சூரியனிலுள்ள வாயுக்களும் அந்த உஷ்ண நிலையில் ஒளியை உமிழ்ந்து அழியாமல் இருக்கின்றன. 'ஸ்டவ்' அடுப்பில் எரியும் வாயுவைப் போல சூரியனிலுள்ள வாயு எரிந்து விடுவதில்லை. இப்படி எரியாமல் ஒளியைக் கொடுக்கும் நிலையின் சூட்டை 'இன்காண்டஸெண்ட்' என்று கூறுகிறார்கள் விஞ்ஞானிகள். ஆகவே சூரியனைப் பிரகாசமான வாயுக்களால் ஆன ஒரு பெரிய கோளம்—பந்து என்று கூறுவதே பொருத்தமானது இல்லையா?

பூமி பிறந்ததற்கும், சூரியனின் இந்த வர்ணனைக்கும் என்ன சம்பந்தம் என்று நீ யோசிக்க ஆரம்பித்து விட்டாய். இதோ உலகம் பிறக்கப் போகிறது;

சூரியனை ஒரு நட்சத்திரம் என்றுதானே கூறினேன். சுமார் 300,00,00,000 வருஷங்களுக்கு முன்னால் வான வீதியிலே இன்று நம் சூரியனுக்கிருக்கும் நட்சத்திரத்தை நோக்கி இன்னொரு நட்சத்திரம் நெருங்கி வர ஆரம்பித்தது. (படம் 1) நம் சூரியன் அன்றைக்கு இப்போதுள்ளதையும்விடப் பெரியதாகப் பிரகாசமுடையதாக இருந்தது. இந்த இரண்டு நட்சத்திரங்களும் ஒன்றை ஒன்று நெருங்கும் போது சூரியனைச் சூழ்ந்து குமைந்து கொண்டிருக்கும் வாயுக்கள், அந்த நட்சத்திரத்தின் ஆகர்ஷண சக்தியினால் ஒரு பக்கமாக இழுக்கப்பட்டு ஒன்று திரண்டன (படம் 2)

அந்தப் பெரிய நட்சத்திரத்தின் அலை அலையான ஆகர்ஷண சக்தி சூரிய வாயுக்களைத் தன் பக்கமாக இழுத்தது. வான வீதியிலே இந்த வாயு சூரியனோடு ஒட்டிக் கொண்ட குழல் உருவில் நீண்டது (படம் 3) இந்த நிலையில் நம் சூரியனோடு உறவு கொண்டாட வந்த நட்சத்திரம் விலகிப் போயிற்று. இப்போது அந்த வாயுக் குழல் உடைந்து சிதறியது. வேகமாகச் சுற்றும் பம்பரத்தின் அருகே ஒரு நூலைக் கொண்டு போனால் அதுவும் அந்த வேகத்தில் அதன் கதியில் சுழலுவது போல; வாயுக் குழல் உடைந்து சிதறிய துண்டுகள் சூரியனின் சுழற்சி வேகத்தில் அதன் பாதையில் சுற்றலாயின (படம் 4) இப்படிப் பிரிந்து சுழலும் வாயு உருண்டைகள் காலப் போக்கில் பல்லாயிரம் வருஷங்களில்—குளிர்ந்து கருங்கிக் கடினமான மேற்பரப்பை உடைய தனித் தனி கிரகங்களாயின. (படம் 5) சூரிய உருண்டையிலிருந்து — நட்சத்திரத்திலிருந்து — பிரிந்து சிதறிய துண்டுகளில் மூன்றாவதாக நமது பூமியும் முதல் இரண்டாவதாக மெர்க்குரியும் (புதன்) வீனஸும் (சுக்கிரன்) அதன் பின் முறையே மார்ஸ் (செவ்வாய்) ஜுபிடர், (வியாழன்) சாடர்ன், (சனி) யுரானஸ், நெப்டியூன், புளுடோவும் ஆகிய இந்த நவக்கிரகங்களையும் அதன் வரிசைக் கிரமப்படி மேலேயுள்ள படம் 5 ல் பார்க்கலாம்.

இனி சந்திரன் எப்படித் தோன்றினான் என்பதைப் பார்ப்போம். நமது பூமியாகிய கிரகம் குளிர்ந்து கெட்டிப்படுவதற்கு முன் சூரியனுக்கு மிக அருகே நெருங்கிச் சுழன்று கொண்டிருந்தது. அப்போது அந்த வேகத்தில் சூரியனிலிருந்து எப்படிக் கிரகங்கள் பிறந்தனவோ அதேபோல் அதே முறையில் குளிர்ந்து கெட்டிப்படாத இளகிய நிலையிலிருந்த பூமியிலிருந்து ஒரு பகுதி தனியாக விண்டு பிரிந்து போய்ச் சந்திரனாகியது. (படம் 6) பூமியின் ஆகர்ஷண சக்தியிலிருந்து விடுபட்டுத் தனித்து வான வீதியில் சுழலுமளவுக்கு இது பெரியதாக இல்லாததால், தான் பிறப்பதற்குக் காரணமான பூமியையே இது வலம் வந்து கொண்டிருக்கிறது. இதுவேதான் சந்தாமாமா தோன்றிய சரிதம்.

சூரியன் என்ற எரியும் வாயு உருண்டையின் ஒரு துகள்தான் பூமி. அந்தப் பூமி இன்றைய நிலையை அடைவதற்கு எத்தனை காலமாயிற்று; என்னென்ன மாற்றங்களுக்குப் பிறகு அது இந்த உருவத்தை அடைந்திருக்கிறது. இதைப்பற்றி யெல்லாம் படிப் படியாகத் தொடர்ந்து படிக்கப் போகிறோம்.








**உங்கள் ஆல்பத்துக்கு:**

நமது அண்டை நாடுகளில் ஒன்று தாய்லாந்து. தேசப் படத்தில் பர்மாவை அடுத்து யானைத் தலையைப் போன்று ஒரு நாடு இருக்கிறதே, அது தான் தாய்லாந்து. கலாசாரத்துக்குப் பெயர் பெற்ற நாடு தாய்லாந்து. தாய்லாந்து தேசத்துக் குடியானவப் பெண் ஒருத்தி வயலில் நடுவதற்கான நாற்றுக்களைக் கையிலேந்தி மகிழ்ச்சியுடன் நிற்பதையே, மேலே காண்கிறீர்கள். அவள் அணிந்துள்ள கூடைத் தொப்பியின் அமைப்பைப் பாருங்கள்.





# மானேர்ஸ் கிரைப் மிக்ஸர்

***குழந்தையைச் சிரித்த முகத்துடன் வைத்திருக்கிறது.***

இக்காலத் தாய்மார்கள், தங்கள் குழந்தைகளுக்கு இனிமையான சுவைதரும் மானேர்ஸ் கிரைப் மிக்ஸர் தருகிறார்கள். ஒழுங்காக மானேர்ஸ் கிரைப் மிக்ஸர் கொடுத்து வந்தால் குழந்தைகள் உடல் நலத்துடனும் உற்சாகத்துடனும் இருக்கும்.








மானேர்ஸ் அதிர்ஷ்டக் குழந்தை விழா

1963 மார்ச் — ஏப்ரல் மாதங்களில் பிறந்த குழந்தைகளுக்கு பரிசுகளாக ரூ. 2000/- வழங்கப்படும்.

முடிவு தேதி: 5-5-1963

விவரங்களுக்கும் அனுமதி பாரங்களுக்கும் உங்கள் அருகிலுள்ள டீலரை அணுகவும்.

GEOFFREY MANNERS & CO. LTD.

ASP/GM-21 TAMIL



டாம்பீகத்தைத் தவிர்த்து
நாட்டு வளங்களை
வளர்க்க

வீணாக்கும் மனப்
பான்மையை
விட்டொழியுங்கள்

அவசர காலத்தில்
விலைவாசி யேறாமல்
தடுங்கள்

திண்ணைப் பேச்சு
தேவையில்லை
கடும் உழைப்பே தேவை

உங்கள் கவனமற்ற
செய்கையினால்
நாட்டு விரோதி
களுக்கே நன்மை.

ஏன் சார்? இதெல்லாம் தினம் பேப்பரிலே யாருக்காகப் போடுகிறார்கள்

சர்க்காருக்காகத் தான் இருக்கும்!

பால்

மருளஸ் கன்றுக் குட்டி!

ஏ! டிரைவர்: என்னய்யா நீ!...என்ஜின் சும்மா இருக்கு நீ பாட்டுக்கே...!

தேனீ:— அடி அசடே! அது அவர் தாடி! நம்ம தேன் கூடு இங்கே இருக்கு வா!



Simplons'

சாலை

அமைக்கவும்





கட்டிடம்

கட்டவும்

உதவும் சாதனங்கள்



Simplon & Co Ltd

தலைமைக் காரியாலயம் : சென்னை - 2 — தொழிற்சாலை : சென்னை - 11

கிளைகள் : பெங்களூர் — உதகமண்டலம் — திருச்சிராப்பள்ளி — செகந்திராபாத்

SLE 331



# கொம்புத்தேன்

சிறுகதை



சின்னபுரம் காய்கறி மார்க்கெட்டுக்குக் காலை வேளையில் போய்ப் பார்த்தால், அங்கே நல்லம்மாளின் கடைக்கு முன்பு பரபரப்பு நிறைந்த சிறு கூட்டத்தைத் தினமும் காணலாம். பக்கத்து டவுனிலுள்ள அலுவலகங்களில் வேலை பார்க்கும் ஆண்கள், அடுக்களை அரசிகள், குழந்தைகள், பெரிய வீட்டு வேலையாட்கள் — இப்படிப் பலர் இடித்துப் புடைத்து நின்று கொண்டு அவளிடம் காய்கறி வாங்கிக் கொண்டிருப்பார்கள்.

'அஷ்டாவதானம்' என்று சொல்வார்களே, அதில் கைதேர்ந்தவள் போல் பல பேருக்குப் பதில் சொல்லிக் கொண்டு, பல வேலைகளை ஒரே சமயத்தில் கவனித்துக் கொண்டு விற்பனையைக் கவனிப்பாள் நல்லம்மாள். வாய் விலை சொல்லும்; ஒரு கை தராசு பிடிக்கும்; மறு கை காசைக் கணக்குப்படி வாங்கிப் போடும்; கண்கள் காவல் காக்கும்.

தினந்தோறும் எங்கிருந்துதான் புத்தம் புதிய காய்களும், கீரைகளும், பழங்களும் அவளுடைய கடைக்கென்றே தனியாக வந்து சேருகின்றனவோ, தெரியாது. ஒரு முறை அவளிடம் காய்கறி வாங்கிப் பழகியவர்கள் மறு முறை வேறு பக்கம் திரும்பிப் பார்க்க மாட்டார்கள். ஒரே விலையைத் தவிர மறு பேச்சு அவளிடம் கிடையாது. குறைத்துக் கேட்டால் பதில் வராது; இருந்தாலும் அவள் கடையில்தான் கூட்டம் அதிகம்.



வாடிக்கைக்காரர்கள் தாங்களே காய்கறிகளை எடுத்து நிறுத்துக் கொண்டு, பணத்தை அவளிடம் கொடுத்துச் செல்வதுண்டு. அழுகல், வற்றல், வாடல் முதலியவைகளையெல்லாம் முன்கூட்டியே ஒருபுறம் ஒதுக்கி வைத்து விடுவாள் நல்லம்மாள்.



வயது நாற்பதுக்கு மேல் இருக்கும். உழைத்து உழைத்து இரும்பான உடற்கட்டு. நெற்றி நிறையத் திருநீற்றுப் பூச்சு. அள்ளிச் செருகிய கூந்தல். காதுகளில் பழங் காலத்துக் கம்மல்.

எட்டரை மணிக்குக் கூட்டம் குறைய ஆரம்பித்தது. நல்லம்மாளுக்கு மூச்சு விடச் சிறிது நேரம் கிடைத்தது. கோணிச் சாக்குக்கு அடியில் தரையில் போட்டிருந்த காசுகளை எடுத்துத் தகரப் பெட்டிக்குள் போட்டுக் கொண்டிருந்தாள்.

''அவரைக்காய் என்ன விலை?''

குனிந்த தலையை நிமிர்ந்து பார்க்காமலே, ''பவுன் அவரைக்காய் பத்தணா!'' என்று சொல்லி வைத்தாள். பசும் பொன்னைப்போல் பளபளப்பான இளம் அவரைப் பிஞ்சு என்று அதற்குப் பொருள்! கூடவே பானையில் பத்திரப்படுத்தி வீட்டின் ஒரு மூலையில் அரிசி மூட்டைக்கு அடியில் புதைத்து வைத்திருக்கும் பவுன்களும் அவள் நினைவுக்கு வந்தன. பவுன் அவரைக்காய்களையும் பாக்கு வெற்றிலையையும் விற்றுச் சேர்த்த பவுன்கள் அவை. பாடுபட்டுச் சம்பாதித்த பணத்தைக் கொண்டு வாங்கிய பளபளக்கும் பவுன்கள்! இன்னும் ஒரே ஒரு பவுன்தான் தேவை காசு மாலைக்கு. ஏற்கெனவே இருக்கிற நாலைந்து



அகிலன்

நகைகளோடு பத்துப் பவுனிலே இந்தக் காசு மாலையும் செய்து அணிவித்துப் பார்த்தால் சிவகாமியின் அழகுக்கு அள்ளிக் கொண்டு போகாதா? நல்லம்மாளின் கண்கள் இந்த நினைப்பிலே ஜொலித்தன.

''பவுன் அவரைக்காயா?'' என்று கேட்டு விட்டுச் சிரித்தான் எதிரே இருந்தவன். ''சரி, ஒரு விசை கொடுக்கிறீங்களா அத்தை?''

சிந்தனையிலிருந்து விடுபட்டுத் தன்னைமுறை வைத்துக் கூப்பிட்ட பிள்ளையாண்டானை ஒரு கணம் முறைத்துப் பார்த்தாள் நல்லம்மாள்.

அவளுக்குப் புல்லரித்தது. எதிரில் அவளுடைய அண்ணன் மகன் குப்புசாமி கையில் ஒரு பளபளப்பான பிளாஸ்டிக் பையுடன் நின்று கொண்டிருந்தான்.

தரையைக் கூட்டுமளவுக்குத் தாழ்ந்த வேஷ்டிக்கட்டு; சில்க் சட்டை; கையில் தங்கச் சங்கிலிபோட்ட கடிகாரம்; சென்டின் மணம்.

ஒரு கணம் என்ன பேசுவதென்று தெரியாமல் திகைத்தாள் நல்லம்மாள்: ''குப்புசாமியேதான்!''

''ஆமாம், அத்தை!''

''ஏன், வழக்கமா உங்க வீட்டு வேலையாள் வந்து அடுத்த கடையிலே சொத்தைக் கத்திரிக்காயும், முத்தல் முருங்கைக்காயும் வாங்கிகிட்டுப் 'போவானே, அவன் இன்னிக்கு வரலையா?''

''அத்தை....!''

''உங்க வீட்டுப் பருப்புத் தண்ணியிலே நான் கொடுக்கிற காய்கறி வேகாதுன்னு சொல்வாங்களே!''

''யார் என்ன சொன்னாலும் சொல்லாவிட்டாலும் அத்தையோட உறவு எனக்கு வேணும். நீங்க கொடுக்கப் போறீங்களா, இல்லையா ?''

புது உறவு கொண்டாடி எதைக் கேட்கிறான் இவன்? தன் மகள் சிவகாமியையா? நல்லம்மாளின் உச்சி குளிர்ந்து விட்டது. குப்புசாமி அவள் எதிரே தராசைத் தூக்கிப் பிடித்ததும்தான் அவள் திடுக்கிட்டு விழித்துக் கொண்டு அவன் கேட்டவற்றைத் தாராளமாகவே எடுத்து வைத்தாள். வேலையோடு வேலையாகத் 'திருச்சியிலே அவன் படிப்பு முடிந்து விட்டதா?' என்று கேட்டாள்.

''படிப்புக்கு முடிவு ஏது அத்தை? கல்லாதது உலகளவு என்பார்களே, கேட்டதில்லையா?'' என்றவாறே சில்லறையைக் கொடுத்தான் குப்புசாமி.

''எதுக்குத் தம்பி? அங்கேதான் இருக்கட்டுமே?'' என்று வார்த்தைகளால் கொஞ்சம் பிகு செய்த அவள் அதே நேரத்தில் காசைப் பறி கொடுக்க மனமின்றிக் கைநீட்டி நாணயங்களைப் பெற்றுக் கொண்டு அலட்சிய பாவத்தைப் பிரதிபலிப்பவளாய் எண்ணிப் பாராமலேயே விரித்திருந்த சாக்குக்கு அடியில் அவற்றைப் போட்டாள்.

போகிற போக்கில் குப்புசாமி, ''பெரியவங்க சண்டையெல்லாம் பெரியவங்களோட இருக்கட்டும், அத்தை! நான் சின்னப் பிள்ளை தானே, உங்களைப் போன்றவங்களுக்கு? என்னை நீங்க மறந்திடாதீங்க!'' என்று சொல்லி விட்டுச் சென்றான்.

திரும்பிச் சென்ற குப்புசாமியையே சிறிது நேரம் கண்ணிமைக்காமல் பார்த்துக் கொண்டிருந்தாள் நல்லம்மாள். நீண்டதொரு பெருமூச்சு அவள் நெஞ்சைப் பிளந்து கொண்டு வெளிப்பட்டது. 'ஹூம்! குழைந்து குழைந்து தான் பேசுகிறான் குப்புசாமி. ஆனால் அண்ணனும் அண்ணியும் சம்மதிக்க வேண்டுமே? நாம் நினைக்கிறபடி நடக்குமா?'

ஆள் வாட்டசாட்டமாக செவ்வாழைக் கன்று போல் வளர்ந்திருப்பதைக் கவனித்தாள் நல்லம்மாள். வயதின் பசுமையோடு பணத்தின் செழுமையும் அவனிடம் தென்பட்டது. கோட்டையில் போய்ப் பெரிய படிப்பு படித்து விட்டு வந்திருக்கிறான் — சிவகாமிக்கு மட்டும் அதிர்ஷ்டம் இருந்தால்?...

வழக்கமாக நல்லம்மாள் வியாபாரத்தில் காண்பிக்கும் சுறுசுறுப்பு அன்றைக்குக் குப்புசாமி வந்து போன பிறகு ஏற்படவில்லை. ஒன்பதரை மணிக்கெல்லாம் கடையைக் கட்டி விட்டு வீட்டுக்கு வந்து சேர்ந்தாள்.

வீட்டை ஒட்டினாற் போல் இருந்த அவளுடைய பெட்டிக் கடையை மகன் சுப்பையா விடிந்தது முதல் அந்நேரம் வரை கவனித்துக் கொள்வான். பிறகு வீட்டுக்குப் போய் அக்காளைச் சாப்பாடு போடச் சொல்லிச் சாப்பிட்டு விட்டுப் பள்ளிக்கு ஓடுவான். மாலை மணி அடித்து அவன் திரும்பும்வரை நல்லம்மாள் கடையில் இருப்பாள். பிறகு மறுபடியும் மார்க்கெட்டில் காய்கறிக்கடை விரிக்கப்போய் விடுவாள். வீட்டு நிர்வாகமும் வரவு செலவுக் கணக்குகளும் சிவகாமியினுடைய பொறுப்பில் இருந்தன. மத்தியான நேரத்தில் நல்லம்மாள், வீட்டில் சற்றுக் கண்ணயர வசதியாகச் சிவகாமியும் கடைப் பக்கம் போய்ப் பார்த்துக் கொண்டு உதவுவாள்.

மார்க்கெட் வியாபாரம், பெட்டிக் கடை இவற்றைத் தவிர கறவை மாடுகள் நான்கும் வீட்டின் பின்புறத்தில் கட்டிப் போட்டிருந்தாள் நல்லம்மாள். அதோடு அந்த வட்டாரத்தில் உள்ளோருக்கு அவள்தான் சமயத்தில் கடன் கொடுத்து உதவுபவள். வட்டிக்கு நெல்லோ பணமோ தவறாமல் அவளுக்கு வந்து விடும்.

மகனைச் சாப்பாட்டுக்கு அனுப்பி விட்டுக் கடையில் உட்கார்ந்திருந்த நல்லம்மாளுக்குப் பல ஆண்டுகளுக்கு முன் நடந்த நிகழ்ச்சிகள் அடுக்கடுக்காக நினைவுக்கு வந்தன. மார்க்கட்டுக்கு வந்து அவளிடம் காய்கறி வாங்கிச் சென்ற குப்புசாமி அவளைப் பழைய காலத்துக்கு அழைத்துச் சென்று விட்டான்.

காசில்லாக் கொடுமையால் அவளுடைய கணவனுக்கு வைத்தியம் பார்க்க முடியாமல் அவன் கண்களை மூடியபோது அவளுக்கு வயது இருபத்தைந்து. கையில் இரண்டு குழந்தைகள். உடன் பிறந்த அண்ணனோ ஊரில் பெரிய மனிதர்தாம். கண்ணபுரத்தில் அண்ணாமலையைத் தெரியாதவர்கள் யாரும் இருக்க முடியாது. மிராசு, வியாபாரம், கொடுக்கல் வாங்கல், வீடுகள் கட்டி வாடகைக்கு விடுதல்— இப்படிப் பல தொழில்கள் அவருக்கு.

தங்கையின் மீது அநுதாபம் கொண்டு வீட்டோடு நல்லம்மாளை அழைத்து வைத்துக் கொண்டார் அண்ணாமலை. பாதுகாப்பில்லாமல் தனியாக வாழ விரும்பாத நல்லம்மாளும் வேறு வழியின்றி அவர் வீட்டுக்குச் சென்றாள். தொடக்கத்தில் சில மாதங்கள்



எல்லாம் சரிவரத்தான் நடந்தன. நல்லம்மாள் உழைப்பதை மறக்காதவள். அண்ணன் வீட்டைத் தன் வீடாக நினைத்து அல்லும் பகலும் அயராது உழைத்தாள். தன் குழந்தைகளைவிட, தன் அண்ணன் மகன் குப்புசாமியிடம் அதிகமாகப் பாசம் வைத்தாள்.

உழைக்க உழைக்கப் பெண்களுக்கு வீட்டில் மதிப்பு உயரும் என்பார்கள். அந்த வீட்டில் நல்லம்மாளின் மதிப்புக் குறைந்து கொண்டே வந்தது. அவள் ஒரு வேலைக்காரி; அவளுடைய குழந்தைகள் வேலைக்காரியின் குழந்தைகள்.

அண்ணி முதலில் அவளை அதிகாரம் செய்யத் தொடங்கினாள். பிறகு அந்த வீட்டில் உள்ள வேலைக்காரர்களே அவளை ஏவல் செய்யத் தலைப்பட்டார்கள். ஆனால் குழந்தையாக இருந்த குப்புசாமியிடம் மட்டும் நல்லம்மாளின் அன்பு குன்றவில்லை. அழகாகக் கொழு கொழுவென்று வளர்ந்திருந்த அவனையும் தன் மகள் சிவகாமியையும் ஒன்று சேரப் பார்த்துப் பார்த்துப் பூரித்தாள் நல்லம்மாள்.

ஆனால் காசுக்கு முன்னால் பாசம் எம்மாத்திரம்? ஒரு நாள் அவளுக்கும் அண்ணிக்கும் இடையில் வாய்ச் சண்டை முற்றியது. அண்ணனும் அண்ணியின் பக்கம் சாய்ந்தார். ''இருந்தாலும் முடவன் கொம்புத் தேனுக்கு ஆசைப் படலாமா?'' என்று விட்டார், நல்லம்மாளின்



ஏழைமையைக் குத்திக் காட்டும் விதத்தில். நடந்தது இதுதான்:

குழந்தைகள் இருவரும் விளையாடிக் கொண்டிருப்பதை அவர்கள் அறியாமல் ஒளிந்திருந்து பார்த்து மகிழ்வது நல்லம்மாளுக்கு வழக்கம். எதிரே போய் நின்றால் அவளைக் கண்டதும் வெட்கப்பட்டு விளையாடுவதை நிறுத்திவிடப் போகிறார்களே என்று அவளுக்குக் கவலை.

''இன்றைக்கு எந்த விளையாட்டுமே எனக்குப் பிடிக்கவில்லை!'' என்று அலுத்துக் கொண்டாள் சிவகாமி.

''நேத்திக்குச் சுப்பு மாமா வீட்டிலே கலியாணத்துக்குப் போயிருந்தோமே? மேளம் எப்படி ஜோராக வாசித்தான் 'டும் டும்' என்று!'' குப்புசாமி தலையைப் பலமாக ஆட்டிக் கைகளை வீசுவதைப் பார்க்க நல்லம்மாளுக்குச் சிரிப்பாயிருந்தது. வாயைப் பொத்திக் கொண்டு மகளின் பதிலை ஆவலுடன் எதிர்பார்த்தாள்.

''கலியாண விளையாட்டு விளையாடலாம் என்கிறாயா?''

''நான்தான் மாப்பிள்ளையாம்; நீதான் கலியாணப் பெண்ணாம்!''

''ஐய, தா! வெட்கமாயில்லே?''

குப்புசாமியின் முகம் கோணுவதைக் காண நல்லம்மாளினால் சகிக்க முடியவில்லை. அவர்கள் குழந்தைகள் என்பதையே மறந்து அவர்கள் எதிரே தோன்றினாள். ''வெட்கமென்னடி வெட்கம்? நாளைக்கு நிஜமாகவே அவனைத்தானே கட்டிக்கப் போறே? முறைப் பெண்ணுதானே நீ?'' என்று கேட்டாள்.



இதைச் செவிமடுத்துக் கொண்டே வந்து சேர்ந்த நல்லம்மாளின் அண்ணி, "போட்டியே ஒரு போடு! ஒண்ட வந்த பிடாரியின் கதையால்ல இருக்கு? பெரிய இட்டமாத்தான் போட்டு வைச்சிருக்கே! உனக்கு இங்கே இடம் கொடுத்ததே தப்பு! நூறு தரம் சொன்னேன், அவர் கேட்கலே!" என்று பலமாக ஒரு போடு போட்டாள்.

நல்லம்மாளுக்கும் கோபம் வந்து விட்டது. எப்படியும் அண்ணன் தன் பக்கம் இருப்பார் என்ற தைரியத்தில் அவளும் துணிந்து நாலு வார்த்தை பேசி விட்டாள். அவ்வளவுதான், ஒன்று மில்லாத விஷயம் பெரிய ரகளையாகி விட்டது. கடைசியில் அண்ணனும் தன் மனைவியின் கட்சியை ஆமோதிப்பதைக் கேட்டதும் அவளுக்குத் துக்கம் பீறிட்டுக் கொண்டு வந்தது. 'முடவன் கொம்புத் தேனுக்கு ஆசைப்பட்டது போல்' என்று அண்ணன் கூறியதும் அவளால் அந்த அவமானத்தைத் தாங்கவே முடியவில்லை.

'சீ! இவர்களுடைய அன்பைப் பெற வேண்டும் என்ற நோக்கத்தில் வேலைக்காரியின் நிலைக்குத் தன்னைத்தானே



தாழ்த்திக் கொண்டதால்தானே இப்படி மூக்குடைபட நேர்ந்தது? வாழ்ந்தால் நாலு பேர் நம்மை மதிக்கிறாற்போல் வாழ வேண்டும். ஊராரின் மதிப்பைப் பெறப் பணம் வேண்டும். இவர்கள் பணக்காரர்கள், நான் ஏழை. காசு, காசு! காசு ஒன்றுதான் கடவுள். காசு ஒன்று தான் பாசம்! காசு ஒன்றுதான் வாழ்வு!'



இதுபோன்ற எண்ணங்களை அவள் மனத்தில் ஆழமாக வேரூன்றச் செய்து விட்டார்கள் அவனுடைய அன்னையும் அண்ணியும்.

குழந்தைகள் இருவரையும் அழைத்துக் கொண்டு கட்டிய துணியோடு அண்ணன் வீட்டை விட்டுப் புறப்பட்டாள் நல்லம்மாள்.

இதெல்லாம் பழங் கதை. தன்னுடைய அண்ணனுக்கு முன்னால் அதே ஊரில் கையில் நாலு காசோடு வாழ வேண்டும் என்று ஆசைப்பட்ட நல்லம்மாளின் கனவு நனவாகி வந்தது. குழந்தைகளும் நன்கு வளர்ந்து பெரியவர்களாகி விட்டார்கள்.

ஒரு சிறு வீடு, கை அகலம் நிலம், மகளுக்குக் கல்யாணத்துக்கு நகை நட்டுக்கள் இவ்வளவும் சேர்த்துவிட்டாள். இவ்வளவுக்குப் பிறகும் அவளுக்கு உழைப்பாசை விடவில்லை; பணத்தாசையும் போகவில்லை.

அவள் நெஞ்சுக்குள்ளே புதைந்து கிடந்த பிடிவாதம் ஒன்றே ஒன்றுதான்; எந்த அண்ணன் வீட்டிலிருந்து அவள் வெளியேற்றப் பட்டாளோ அங்கேயே அவளுடைய பெண் சிவகாமி சென்று குடித்தனம் நடத்த வேண்டும்! சீர் வரிசைகள் எவ்வளவு ஆனாலும் சரி; செலவுகள் எவ்வளவு ஆனாலும் சரி....




**கா**லப் போக்குக்கு ஏற்பக் கண்ணபுரத்தில் ஏற்பட்டிருந்த மாறுதல்கள் அப்படி ஒன்றும் அதிகமில்லை. கோவிலின் சுற்றுச் சுவரில் இடிந்து கிடந்த கிழக்குப் பகுதி அப்படியேதான் இருந்தது. நீண்டும் குறுகியுமான கப்பி ரோடும் முன் எப்போதும் போலவேதான் காட்சியளித்தது. அதில் உள்ள பள்ளங்களுள் ஒன்றில் சுகமாகச் சுருண்டு படுத்திருக்கும் சோம்பேறி நாய் இன்றும் அங்கேயேதான் இருந்தது.

ஆனால் நாளும் வாரமும், மாதமும் வருஷமும் கண்ணபுரம் ஊரைப் பொறுத்த வரையில் தங்கள் திறமையைக் காட்டத் தவறிய போதிலும் சிவகாமியிடம் தங்கள் கைவரிசையைப் பரிபூரணமாகக் காட்டியிருந்தன. சிற்றாடை எடுத்து வைத்துச் சிரித்துக் கொண்டிருந்த சிறுமி சிவகாமி இன்று உயிர் பெற்றுச் சிலிர்க்கும் சிங்காரப் பாவையாக உருமாறியிருந்தாள். பருவத்தின் கட்டளைகளுக்குக் கட்டுப்பட்டதாலேயே கட்டுக்கடங்காமல் தன் அவயவங்கள் பூரித்து நிற்பதை உணர்ந்தும் உணராமலும் வேதனையுற்றாள், நாணமடைந்தாள். வண்ணத் தாமரை, தண்டுடன் இடம் பெயர்ந்து வருவது போல் அவள் அழகு குலுங்க ஒயிலாக நடந்து வருவதை இப்போது கண்டதும் நல்லம்மாளுக்கு நறுக்கென்று நெஞ்சிலே ஏதோ தைத்தது.

"சிவகாமி! நீ வீட்டுக்குப் போ! இதோ நானும் கடையைப் பூட்டிக்கிட்டு வந்துடறேன் சாப்பாட்டுக்கு!"

"வித்துவான், 'ஞானப் பழத்தைப் பிழிந்து' என்று பாடலைப் பாடி முடித்துச் சக்கைப் போடு போட்டு விட்டார், பார்த்தீரா!"



"பின்னே பழத்தைப் பிழிந்தால் சக்கையைப் போடாமல் என்ன பண்ணுவார்?"

சிவகாமிக்கு இது வியப்பைத் தந்தது. நாணேற்றிய வில்லை வளைத்தாற்போல் அவள் கரிய புருவங்கள் தெரிந்தன. தொடுத்த பாணமாக அவள் கண் வீச்சுப் பாய்ந்தது. இடுக்கிட்டு முகத்தை நிமிர்த்தியபோது மென்மையான அந்தக் கழுத்து முன்னிலும் அதிகமாக நீண்டு தெரிந்தது. வழு வழுப்பான அந்தக் கண்டத்தைப் பார்த்தவண்ணம், "அன்னப் பறவைதான்" என்று முணு முணுத்தாள் நல்லம்மாள்.

"என்ன சொல்றே?"

"ஒன்றுமில்லே!" என்று அவள் தாயார் தன் நெற்றிப் பொட்டில் விரல்களை மடித்துச் சொடுக்கித் திருஷ்டி கழித்தாள். "அதோ அந்தக் கதவுப் பலகைகளை ஒவ்வொன்றாக எடுத்துக் கொடு; நான் மாட்டித் தாழ்ப்பாள் போட்டு விடுகிறேன்!"

"ஏனம்மா கடையை மூடுகிறாய்? வியாபாரம் வீணாய்ப் போகுமே?"

"கெட்டால் கெட்டும். நீ இனிமேல் இந்தக் கடையில் உட்காரக் கூடாது!"

"ஏனும்?"

"கோவில்லே நிற்கிற மோகினி விக்கிரகம் மாதிரி நீ இங்கே நின்னுக்கிட்டுக் கிடக்கிறதா? நாலுபேர் வருவாங்க, போவாங்க..."

**வீ**ட்டினுள் புகுந்த நல்லம்மாள் பசியை அடியோடு மறந்து உக்கிரான அறைக்குள் சென்றாள். ஒரு மூலையில் இருந்த அரிசி மூட்டையை இழுத்து இப்பால் தள்ளினாள். வாசல் கதவைத் தாளிட்டு விட்டு வருமாறு சிவகாமிக்கு உத்தரவு போட்டு விட்டுத் தரையில் அமர்ந்து எதிரே இருந்த ஒரு பலகையை அப்புறப்படுத்தினாள். ஒரு பெரிய துவாரம் இப்போது தென்பட்டது. அதனுள் கையை விட்டுத் துழாவிப் பானை ஒன்றைச் சர்வ ஜாக்கிரதையாக வெளியே எடுத்தாள், கவிழ்த்தாள். தரையில் கத்தை கத்தையாக நோட்டுக்கள் விழுந்தன; பொன்னாபரணங்கள் சில ஜொலித்தன; சவரன்கள் பல உருண்டன.

தாயார் பணப் பானையைக் கையில் எடுத்து விட்டாளென்றால் எண்ணி முடிக்கிற வேலைக்குச் சரியாக ஒரு மணி நேரம் பிடிக்கும் என்பது சிவகாமிக்குத் தெரியும். ஒவ்வொரு நோட்டுக் கட்டாகப் பிரித்துப் பத்து முறைகள்

என்னை மீண்டும் நூல் சுற்றிக் கட்டி வைக்க வேண்டுமே?

"ஆரம்பித்து விட்டாயா, மறுபடியும்?" என்று சிரிப்புடன் அப்பால் சென்று மகளை அழைத்துப் பக்கத்தில் அமரச் செய்தாள் நல்லம்மாள். "பெரிய வீட்டுப் பிள்ளையாண்டான் இன்னைக்கு என்னிடம் வந்து வாய் நிறைய அத்தைன்னு கூப்பிட்டது. தெரிஞ்சுக்க!" என்றாள் மகிழ்ச்சியுடன்.

"அப்படியானால் மாமன் மகன் டில்லியிலிருந்து வந்து விட்டாரென்று சொல்லு!"

மகளுடைய உற்சாகத்தைக் கண்டதும் நல்லம்மாளின் புன்னகையில் மலர்ந்தெழுந்த வெட்கத்துடன் கண்களில் பிரதிபலித்த குறும்புத்தனம் போட்டியிட்டது. "அடேயப்பா! சந்தோஷத்தைப் பாரு!"

"ஐயோ, போதுமே!" என்று தலையில் தட்டிக் கொண்டாள் சிவகாமி. "அவர் வந்திருந்தால்தானே உனக்கு என்னைப் பெட்டிக் கடையிலே உட்கார வைக்கக் கூடாதென்கிற புத்தி வந்தது? என்னுடைய அவலத்தைப் புரிஞ்சுக்காமல் பணம் ஒண்ணுதான் பிரதானம் என்று என்னைக் கொலு வைச்சிருந்தியே இத்தனை நாளா! இப்பவாவது அந்த அசட்டுத்தனத்துக்கு முடிவு காலம் வந்ததென்று எனக்குச் சந்தோஷம்தான். மற்றபடி எவன் இந்த ஊருக்கு வந்தாலென்ன? போனால்தான் எனக்கென்ன?"

"அப்படிச் சொல்லாதே, சிவகாமு! பழைய விஷயங்களையெல்லாம் நாம் மறந்துடணும். அவங்களே வம்பு பண்ணுமே வழிக்கு வரச்சே நாம் பிடிவாதமா யிருக்கலாமா? நம்ப இந்த ஊரிலே இருக்கிறது இப்போத்தான் அவங்க கண்ணிலே பட்டிருக்கு. இன்னைக்குக் குப்புசாமி வந்த மாதிரி, கூடிய சீக்கிரம் என் அண்ணனே வந்து, 'தங்கச்சி!' என்று கூப்பிட்டாலும் கூப்பிடுவார்" என்ற போது நல்லம்மாளின் குரலில் ஏக்கம் எட்டிப் பார்ப்பதை உணர்ந்த சிவகாமிக்குப் பரிதாபமாக இருந்தது. என்றாலும் தாயாரின் எண்ணம் நிறைவேறலாம் என்று ஆசை காட்டுவதற்குப் பதிலாக, "நடக்காத காரியம்" என்று அழுத்தமாகக் கூறினாள் சிவகாமி. நடக்காத காரியமாகவே போய் விட வேண்டும் என்று மனப்பூர்வமாக விரும்பவும் செய்தாள்.

"காசு சேர்த்துக்கிட்டால் பாசம் தன்னாலே நம்மைத் தேடிக்கிட்டு வந்துடும் சிவகாமி. முன்னைப் போல் பரதேசிப் பெண்ணில்லே, இந்த நல்லம்மாள். நோட்டுக்களாக இதிலே எவ்வளவு இருக்கு தெரியுமா?" நல்லம்மாள் தன் முகத்தின் எதிரே இரண்டு கரங்களையும் விரித்து ஆட்டியவாறு ரகசியக் குரலில் "பத்தாயிரம்!" என்றாள்.

சிவகாமிக்குப் பகீரென்றிருந்தது. தன் தாயார் எப்படியோ வயிற்றைக் கட்டி வாயைக் கட்டிப் பத்தாயிரம் சேர்த்து விட்டாள் என்கிற திகைப்பு ஒருபுறமிருக்க, ஒரு வேளை அன்னை கூறியது சரியாகி விடுமோ என்ற நினைப்பே அவளைத் திகில் கொள்ளச் செய்தது. செல்வம் சேர்ந்து விட்டால் கூடவே சொல்லாக்கும் மிகுந்து விடும். பணம் வந்து விட்டால் உடனே பந்தங்களும் உண்டாகி விடும் என்றால், மாமா பெண் கேட்க வந்து விட்டால்? அன்று வரை குப்புசாமியினால் தனக்குத் தொந்தரவு எதும் நேராது என்று அலட்சியமாக இருந்த சிவகாமி இப்போது பயந்து நடுங்கினாள். பத்தாயிரம் என்பது பெரிய பண்ணையாரைப் பொறுத்த வரையில் அற்பத் தொகை என்பது பாவம் அவளுக்குத் தெரியவில்லை.




'எவன் இந்த ஊருக்கு வந்தால் என்ன? போனால்தான் எனக்கென்ன?' என்பதாகச் சிவகாமி தன் தாயாரிடம் கூறியது வாஸ்தவம். ஆனால் அவ்வாறு சொல்லி வருகையிலேயே அவள் உள்ளம் பொய் பேசுவதாக அவளை இடித்துக் காட்டியது. ஒருவன் அந்த ஊருக்கு வரவேண்டும் என்று அவள் மனப் பூர்வமாய் விரும்பினாள். அந்த ஒருவன் திரும்பிப் போகாமல் நிரந்தரமாய் அங்கேயே தங்கிவிட வேண்டும் என்பதிலும் அவளுக்கு மிகுந்த ஆர்வம் இருந்தது. சோதனை போல் அவன் போய் மூன்று வருஷங்களுக்கு மேல் அல்லவா ஆகி விட்டது?

குடத்தைத் தூக்கிக் கொண்டு குளத்தங்கரைக்கு வந்து சேர்ந்த சிவகாமிக்கு நெஞ்சு வெடித்து விடும் போல் இருந்தது. இதே குளத்தங்கரையில் கரை காண முடியாத தங்கள் காதலை அவர்கள் எத்தனை தடவைகளில் கண் பார்வையினாலேயே பரிமாறிக் கொண்டிருக்கிறார்கள்? சொல்லி வைத்தாற் போல் குறிப்பிட்ட நேரத்தில் அவளும் வருவாள், அவனும் வருவான். முழங்கால் அளவுக்குச் சேலையை உயர்த்தி இடுக்கிக் கொண்டு நீரில் இறங்குவாள் அவள். குளித்து மேலாக அலத்தை ஒதுக்கி விட்டு நீர் மொண்டு கொண்டு தளும்புகின்ற குடத்தைத் தூக்கிப் படி ஏறும்போது பளுவைத் தாங்க மாட்டாமல் விரைப்பாய்த் தொய்கின்ற செவ்வாழைத் தண்டு போன்ற அவள் நீண்ட கைகளுக்கிடையில் அகப்பட்ட அவன் நெஞ்சு விம்மும். 'ஹூம்!' என்று ஒரு முனகலுடன் கரங்களில் ஒரு வீச்சிலே குடத்தை இடுப்பிலே வைத்துக் கொண்டு திரும்புவாள். அவளையே கண் கொட்டாமல் பார்த்துக் கொண்டு குமரன் நின்றிருப்பான். அவன் விழிகளில் அவளை விழுங்கி விடுகிற ஆசை ததும்பும்.

"சிவகாமி! மத்தியானம் — மாந்தோப்பு — நினைவிருக்கட்டும்" என்று அவளைத் தாண்டிச் செல்கையில் அவன் செவிகளில் விழும் சொற்கள் அவள் இதயத்துள் ஊடுருவிச் சென்று தித்திக்கும் தேன் துளிகளைக் கலைத்தது போன்ற நிறைவை உண்டாக்கும்.

வழக்கமாக அவர்களுடைய கலகலப்பான பேச்சையும், மனம் விட்டுச் சிரிக்கிற ஒலியையும் கேட்டு மகிழ்ந்து வந்த அந்த மாமரத்துப் பச்சைக் கிளி அன்று அவர்களிடையே வாக்குவாதம் நடப்பதைக் கண்டு அதிசயித்துத் தலையை ஒடித்து அவர்களைப் பார்த்தது.

# தாய், சேய் இருவரும் மிக நலமாயுள்ளனர்...

கல்ஸானா-டி யின் நற்பயனே. கருவுற்றிருக்கையில் தாயிடம் கால்சியம் மிகையாகச் செலவாகி விடுகிறது. தாயிடமிருந்துதான் குழந்தையின் எலும்புகள், நகங்கள் இவற்றின் வளர்ச்சிக்கான கால்சியம் போய்ச் சேருகிறது...அதனால் அவளிடத்தில் கால்சியம் பற்றாக்குறை ஏற்படுகிறது. அவளுக்கும் அவள் குழந்தைக்கும் வேண்டிய கால்சியத்தைச் சரிக்கட்டி வைக்க, இந்தப் புத்திசாலியான அன்னை வைட்டமின் நிறைவுறச் சேர்ந்த கால்சியம் கொண்ட கல்ஸானா-டியை உட்கொண்டு வந்தாள். கால்சியம் பற்றாக்குறையை நிவர்த்திக்க கல்ஸானா-டி முற்றிலும் சரியான மருந்தென வருடக்கணக்கான சோதனைகளினால் நிரூபணமாகி ஒப்புக் கொள்ளப்பட்டுள்ளது. கல்ஸானா-டியினால் தாய், சேய் இருவரும் மிக நலமாயுள்ளனர்.



# கல்ஸானா-டி

## வைட்டமின் தீவிரச் சேர்க்கையுடைய கால்சியம்

கர்ப்பிணிகள், குழந்தைக்குப் பாலூட்டும் அன்னைகள் மற்றும் வளரும் குழந்தைகள் இவர்களுக்கு ஏற்றது

இந்தக் கோரக் காட்சியைக் காணப் பிடிக்காமல் அருவருப்புடன் இரண்டு கரங்களாலும் கண்களைப் பொத்திக் கொண்டு வீறிட்டு அலறினாள் சிவகாமி. கூச்சல் கேட்டு அக்கம் பக்கத்திலிருந்த சிலர் ஓடி வந்தார்கள். பண்ணையாரின் மகன் வாயிலிருந்து ரத்தம் கொட்டக் கட்டுக் குலைந்து விழுந்திருப்பதையும் பக்கத்தில் வீராவேசத்துடன் குமாரனும் கண்ணீரும் கம்பலையுமாகச் சிவகாமியும் நிற்பதையும் பார்த்தார்கள். விஷயத்தை ஒருவாறு ஊகித்துக் கொண்டு குப்புசாமியைக் கைகொடுத்துத் தூக்கி அழைத்துப் போனார்கள். அவர்களில் திரும்பிப் பார்க்கத் துணிந்த ஒரு காத்திரனை அருவியைக் குமாரனின் தொடை தட்டுதலுடன் கூடிய உறுமலும் கனைப்புடன் கோபவெறி கூடி கொண்ட முரட்டுப் பார்வையும் பயந்து பதுங்கி ஓடச் செய்தன. ஆக நடப்பது போல் கரங்களை ஒன்றுசேரத் தட்டி விட்டுத் திரும்பினான்.

சிவகாமியின் முகத்திலிருந்து வருத்தத்தின் அறிகுறிகள் மறைந்து விட்டன. கட்டுடைப்பது போல் அவளைப் பார்த்தான் அவன். "காதலுக்காக ஒருவருக்கொருவர் எவ்வளவோ தியாகங்களைப் புரிவதாகப் படிக்கிறோம், கேள்விப்படுகிறோம். உங்களால் கேவலம் முன்கோபத்தைக் கூடத் துறக்க முடியவில்லை. காதல் ஈடேற வேண்டும் என்பதற்காக, அது கலியாணத்தில் முடிகிற வரையிலேனும் ஒருவரால் தன் முரட்டுத் தனத்தைக் கட்டுப்படுத்த முடியவில்லையானால் பிறகு அது என்ன காதல்? அத்தகைய காதல் எனக்கு வேண்டாம் அத்தான்!"

நடுங்குகிற இரண்டு கரங்கள் சிவகாமியின் முகத்தை ஏந்தி உயர்த்தின. அவள் காதருகே குனிந்து, "நிஜமாகத்தான் சொல்கிறாயா, சிவகாமி? என்னை நீ மறந்து விடப் போகிறாயா?" என்று கேட்டபோது குமாரனின் நாத் தழுதழுத்தது.

சிவகாமியின் கோபமெல்லாம் இருந்த இடம் தெரியவில்லை. நெகிழ்ந்த நெஞ்சத்துடனும் தளர்ந்த தேகத்துடனும் அவன் மீது சாய்ந்தாள் அவள். "இல்லை, அத்தான்! உங்களை மறக்கப் போவதில்லை நான். உங்களிடம் நான் வைத்த காதலையும் மறக்கப் போவதில்லை. அதெல்லாம் முடியாத காரியம். உங்களைக் கலியாணம் செய்து கொள்ள வேண்டும் என்கிற எண்ணத்தைத்தான் நான் மறந்துவிட முயலப் போகிறேன். இங்கே நடந்ததெல்லாம் தெரிந்த பிறகு உங்களுக்கு என்னைக் கொடுக்க அம்மா எப்படிச் சம்மதிப்பாள்? பண்ணையார் குடும்பத்துக்கும் எங்கள் குடும்பத்துக்கும் இடையில் பாசம் அதிகமாக வேண்டும் என்று அம்மா நினைத்து வருகிற சமயத்தில் பூசல் அதிகரிக்க வழி செய்துவிட்டீர்கள்!" துக்கத்தை அடக்கமாட்டாமல் விம்மினாள் சிவகாமி. "என்னதான் இருந்தாலும் அண்ணி தன்னை மதிக்க வேண்டும் என்று அம்மாவுக்கு ஆசை இராதா?"

"நீ ஏன் கவலைப்படுகிறாய்?" என்றான் குமாரன். "உன்னோடு இப்போதே வந்து நல்லம்மாளைச் சந்தித்துக் கேட்டு விடுகிறேன். 'உங்கள் மகளை யாருக்குக் கலியாணம் கட்டிக் கொடுக்கப் போகிறீர்கள்' என்று." சிவகாமி எவ்வளவோ தடுத்தும் கேளாமல் குமாரன் பிடிவாதமாக அவளைப் பின் தொடர்ந்து போனான்.

பெட்டிக் கடை எதிரே வில்வண்டி வந்து நிற்பதைப் பார்த்ததும் வியப்புற்றாள் நல்லம்மாள். எதிர்பாராத விருந்தாளியாக அண்ணன் அதிலிருந்து இறங்கித் தன்னை நோக்கி வருவதைக் கண்டதும் அவள் பிரமித்தே விட்டாள். பெருமிதம் தலையெடுக்க ஆரம்பித்தது அவள் உள்ளத்தில். 'இத்தனை வருஷங்களாகப் பாடுபட்டு உழைத்ததற்குப் பயனில்லாமல் போகவில்லை. பணக்கார அண்ணனே என்னைத் தேடி வருமாறு செய்து விட்டேன். வீட்டிலே பானைக்குள் நான் பதுக்கி வைத்திருக்கும் பணம் பேசத் தொடங்கி விட்டது! அண்ணனை என் வீட்டுக்கு அழைத்து வந்து விட்டது!'

அவசரமாகவே எழுந்து கொடுத்துத் தன்னைக் காண வந்திருக்கையில் தான் ஒன்றும் பிகு பண்ணிக் கொள்ளக் கூடாதென்றும், அதனால் சிவகாமியின் கலியாணக் காரியம் கெட்டு விடலாம் என்றும் நல்லம்மாளுக்குத் தோன்றியது. பண்புடன் அவரை வரவேற்க வேண்டும் என்று தீர்மானித்ததும் ரத்தபாசம் முட்டிமோதிக்கொண்டு வெளிவர, 'அண்ணா!' என்று கூவி அழைத்தபடி அவள் இளைய பெண் போலக் கடையை விட்டுத் தரையில் குதித்து ஓடோடியும் வந்தாள். "வாங்க! வாங்க!" என்று அன்புடன் அவர் கையைப் பிடித்து வீட்டுக்கு அழைத்துப் போனாள். கடை திறந்திருப்பதை அவள் சட்டை செய்யவில்லை. "இத்தனை வருஷங்களுக்குப் பிறகேனும் தங்கச்சியைப் பார்க்கணுமென்கிற நினைப்பு வந்ததே, ரொம்ப சந்தோஷம், அண்ணா! இதோ மூனே நிமிஷத்துலே நம் வீடுதான். இருந்து நிதானமா பலகாரம், சாப்பாடு எல்லாம் முடிச்சிக்கிட்டுத்தான் கிளம்பணும்" என்று உபசார வார்த்தைகளைக் கூறிக் கொண்டே வந்தவள், வீட்டின் வாசல் கதவு பூட்டப்பட்டிருப்பதைப் பார்த்ததும் திகைப்புற்று நின்று விட்டாள்.

பண்ணையார் சிரித்தார். அண்டசராசரங்களும் தன் தலையில் இடிந்து விழுவது போல் அது நல்லம்மாளின் செவிகளுக்கு ஒலித்தது. "என்ன நல்லம்மா அசந்து போய் நின்னுட்டே?" என்றார் அண்ணன். "மகளைக் காணோமேன்னு மலைக்காதே! நாடகத்துக்குப் போயிருக்கா; வர நேரம்தான்!"

"நாடகமா?" — பொடி வைத்துப் பண்ணையார் பேசுவது புரிந்தது நல்லம்மாளுக்கு. புதிரை விடுவிக்க அவள் இந்தக் கேள்வியைப் போட்டாள்.

"ஆமாம், நாடகம்தான்! காதல் நாடகம்! அதிலே அவளும் நடிக்கிறா, நல்லம்மா! தினம் நீ கடையைக் கவனிக்கப் போனதும் அவள் காதலனைக் காணக் கிளம்பிடுறாள்!" அண்ணனுக்குச் சிரிப்பாய் இருந்தது; தங்கைக்கு நெருப்பாய்த் தகித்தது.

அவ்வாறு அவர் சிரிக்குமாறு நடந்து கொண்ட தன் பெண்ணிடம் பொங்கி எழுந்த ஆத்திரம் வெகு சீக்கிரத்தில் அவர் மீதே வெறுப்பும் கோபமுமாய்ப் பெருகியது.

"அண்ணா!" என்று அடித் தொண்டையில் கத்தினாள் நல்லம்மாள். "நாக்கிலே நரம்பில்லாமல் என் மகளைப் பற்றி எதுவும்

சொல்லாதீங்க. ரொம்ப நாளைக்கப்புறம் நீங்க என்னைத் தேடி வந்திருப்பதைப் பார்த்ததுமே ஏதாவது சதியா இருக்குமோன்னு சந்தேகப்பட்டேன். அந்த எண்ணத்தை மாற்றிவிட்டு சங்கீத வரவேற்றதுக்கு வெகுமதி கிடைக்கப் போகுது. இனிமேல் நீங்க போய் வரலாம்.''

''நான் போகிறேன் நல்லம்மா. ஆனால் உன் பெண்ணை வீட்டை விட்டு எங்கேயும் போக வேண்டாம்னு சொல்லி வை. ஊர் வாய் பொல்லாதது!''

''நீர் மொண்டு வரக் குளத்துக்குப் போகாமல் இருக்க முடியுமா?''

அண்ணாந்து நோக்கியவாறு சிரிப்பைக் கொப்பளிக்க விட்ட அண்ணாமலை, மீசையை இடக் கரத்தால் தடவி விட்டுக் கொண்டார்; வெள்ளிப் பூண் போட்ட கைத்தடியைப் பற்றியிருந்த வலக் கரத்தில் வைர மோதிரங்கள் ஒளியைச் சிதற வைத்தன. ''நல்லம்மா! தண்ணீர் மொண்டு வரக் குளத்துக்குப் போகிறாளா? சறுக்கி விழுந்து விட்டுப் போகிறாள். ஜாக்கிரதை!''

மேனியெல்லாம் பதறியது நல்லம்மாளுக்கு. அவருக்கு பீறிய ஆத்திரத்தில் இன்னது செய்கிறோம் என்பது புரியாமல் பண்ணையார் மீது பாய்ந்தாள். அவரது இரும்புப் பிடியில் சிக்கியது அவளது கரம். ''ஊருக்குப் பெரிய மனுஷன் என்கிற முறையிலே இங்கே நடக்கிற நல்லது கெட்டதைக் கவனிக்க நான் கடமைப்பட்டிருக்கிறேன். உன் மகள் குமரனோடே காதல் நாடகம் நடத்துறா. அது நல்லா இல்லே என்பதால் என் மகன் கண்டித்தான். தட்டிக் கேட்ட அவனை அடித்துப் போட்டு விட்டான் குமரன். நல்லம்மா! நான் சொல்றதைக் கேட்டு நல்லா மனசிலே படிய வைச்சிக்கிடு. உன் மகள் நடத்துகிற விதத்தாலே உனக்கு மட்டுமில்லே, உன் அண்ணனுகிய எனக்கும் அவமானம்; இந்த ஊருக்கே கெட்ட பெயர். அதனாலே இதை இப்போ பெரிசுபடுத்தாமல் விட்டு விடுகிறேன். ஆனால் மறுபடியும் அந்தக் கோதைப் பயல் உன் மகளைக் கண்ணெடுத்துப் பார்த்தான்னு தெரிஞ்சதோ, நான் யோசிக்கவே மாட்டேன். என் மானம் கப்பலேறினாலும் பரவாயில்லே என்று பஞ்சாயத்தைக் கூட்டி நீங்க மூணு பேருமே இந்த ஊரிலே வாழ முடியாமல் செய்து விடுவேன்; பத்திரம்!''

பாதக் குறடுகள் 'சரக், சரக்' என்று ஒலி எழுப்ப நடந்து போய்ச் சற்றுத் தொலைவில் நின்ற வண்டியில் ஏறிக் கொண்டார் அண்ணாமலை. 'ஜல், ஜல், ஜல் ஜல்' என்று சதங்கை ஒலி எழுப்பிப் பாய்ந்தன பளிங்குக் காளைகள். திண்ணையில் கையை வைத்துக் கொண்டு விட்டு வாசற்படியில் சிலையாக உட்கார்ந்து விட்டாள் நல்லம்மாள்.

''அம்மா!'' என்று தன்னை மகள் அழைத்த குரல் கேட்டதும் திடுக்கென நிமிர்ந்தாள் அவள். சிவகாமியையும் குமரனையும் சேர்த்துப் பார்த்ததும் ரௌத்திராகாரமடைந்தாள். ''உன் வாயாலே என்னை இனிமேல் அப்படி அழைக்காதே! நாக்கைத் துண்டித்து விடுவேன்!'' என்று கத்தினாள்.

'அம்மா' என்ற சொல்லைத் தவிர வேறு எதையும் அறியாதவள் போல் அதையே திரும்பத் திரும்பக் கூறிக் கொண்டு தன் காலடிகளில் விழுந்த சிவகாமியை ஒதுக்கித் தள்ளினாள் நல்லம்மாள். ''பெற்ற வயிறு பற்றி எரியுதடி, பாதகி!''

''ஏதுக்கு அவளை ஏசறீங்க?'' என்றுமுன் குமரன் அவர்களுக்கு இடையில் புகுந்தான். ''நாங்கள் ஒருவரை ஒருவர் காதலிப்பது வாஸ்தவம்தான். அதிலே ஒளிவு மறைவு இல்லே. ஏமாற்று வித்தை இல்லே. சிவகாமியைக் கலியாணம் பண்ணிக்கிட நான் தயார்; உங்க சம்மதம் வேணும். அவ்வளவுதான்; நாளைக்கே முடிச்சு விடுவோம்.''

''தூ!'' எனத் தெருவில் உமிழ்ந்தாள் நல்லம்மாள். ''முடவன் கொம்புத் தேனுக்கு ஆசைப்பட்ட கதையாவில்லே இருக்கு!''

''அம்மா!'' என்று அலறித் துடித்துத் தன் வாயைப் பொத்திய மகளின் கரத்தைப் பிடுங்கி எறிந்து விட்டுத் தொடர்ந்தாள் நல்லம்மாள்: ''சல்லிக் காசுக்கு வழியில்லாதவன் பெண் கேட்க வந்து விட்டான், வெட்கமாக இல்லே?''

பொங்கி எழுந்த கோபத்தைப் பெண் பிள்ளையிடம் காட்டத் துணிவின்றிக் குமரன் திரும்பி நடந்தான்.

தங்கம் தொண்டையை அடைக்க, ''அத்தான்!'' என்று அழைத்தாள் சிவகாமி.

முதல் பிரசங்கி: நான் பிரசங்கம் பண்ணும்போது நீங்கள் மணியைப் பார்த்தால் எனக்குக் கஷ்டமாயிருக்கும்.



இரண்டாவது பிரசங்கி: மணியைப் பார்த்தால் எனக்கு அவ்வளவு கஷ்டமாயிராது. ஆனால் கைக் கடிகாரம் நின்று விட்டதோ என்ற சந்தேகத்துடன் காதில் வைத்துப் பார்ப்பதுதான் எனக்கு ரொம்பக் கஷ்டமாயிருக்கும்.

நின்று திரும்பி, "பணம்தான் உங்களுக்குப் பிரதானம்" என்று சொற்களால் சீறிப் பாய்ந்தான் குமரன். "முதலுக்கு வட்டி, வட்டிக்கு வட்டி என்று வாங்கி நீங்கள் உங்கள் தேகத்தைக் காப்பாற்றிக் கொள்ளுங்கள். நான் ராணுவத்தில் சேர்ந்து உங்கள் தேசத்தைக் காப்பாற்றப் போகிறேன்."

"ஆமாம்! கடவுள் இந்தத் தறுதலையை நம்பித்தான் தேசத்தைப் படைத்திருக்கிறார். 'முட்டாளும் முரடனும் பட்டாளத்திலே' என்ற பழமொழி தெரியாதா என்ன?" என்று நல்லம்மாள் ஏளனக் குரலில் கூறியது அவன் செவிகளுக்கு எட்டியது.




சிவகாமியின் சிந்தனையில் பழையநினைவுகள் நீண்டு படர்ந்தன. அன்று தன் தாயாரைக் கட்டி அணைத்துக் கொண்டு எத்தனை நேரம் கதறி அழுதிருக்கிறாள்? "அம்மா! அவரை முரடன் என்று குத்திக் காட்டவும், என்னைக் கொம்புத் தேனுடன் ஒப்பிட்டுப் பேசவும் உனக்கு எப்படி அம்மா மனம் வந்தது? இதே வார்த்தைகளைச்சொல்லி உன்னை ஏழை என்று மாமா பரிகசித்ததால்தானே நீ ரோசத்துடன் அவர் வீட்டை விட்டு வெளியேறினாய்? ஞாபகமில்லையா அம்மா? சொல்லு! உனக்கு அது மறந்து போய் விட்டதா?"

மகளின் அரவணைப்பிலிருந்து தன்னை விடுவித்துக் கொண்டாள் நல்லம்மாள். "அத்தனை கடுமையாக நான் பேசியிருக்க வேண்டாம்தான். ஆனால் வறுமைக் கணக்கில் நான் கட்டி வந்த கோட்டையெல்லாம் நொடிப் பொழுதில் தரை மட்டமாகிற மாதிரியாக நீ மட்டும் நடந்து கொள்ளலாமா? ஓடாக உழைத்து நான் பணம் சேர்ப்பது எதற்காக? மட்டு மரியாதையுடன் நம்மிடம் எல்லாரும் நடந்து கொள்ள வேண்டும் என்றுதானே? சிவகாமி! ஏழையாக இருந்தால்கூட, பரவாயில்லை; மக்கள் நம்மை மதிப்பாங்க. ஆனால் நடத்தையில் பிசகு நேர்ந்து விட்டதாகச் சந்தேகம் ஏற்பட்டு விட்டால் போதும். காறித் துப்புவாங்க!"

"அம்மா! உன் இஷ்டத்துக்கு மாறாக நான் இனிமேல் எதையும் செய்ய மாட்டேன்" என்று அவளைத் திருப்திப்படுத்துவதற்காகவும் சமாதானமாய்ப் போவதற்காகவும் செய்யாத குற்றத்துக்கு மன்னிப்புக் கோரினாள் சிவகாமி.

இப்படி உறுதி அளிப்பதில் சிரமம் ஒன்றும் இருக்கவில்லை. ஏனெனில் தாயாரின் விருப்பத்துக்கு விரோதமாய்க் குமரனைச் சந்திப்பதென அவள் முடிவு செய்தாலும் அது சாத்தியமானதல்ல. அவன்தான் உடனுக்குடன் டிரங்குப் பெட்டியைத் தூக்கிக் கொண்டு ரயிலேறக் கால்நடையாகக் கிளம்பி விட்டானே டவுனுக்கு. மூன்று வருஷங்களாகி விட்டன. சென்னை என்றும் பங்களூர் என்றும் டேராடூனென்றும் எங்கெங்கோ சுற்றியலைந்து கொண்டிருந்தான். முதல் தேதி பிறந்தால் அவன் அக்காள் பங்கஜத்துக்கு ஒரு மணி யார்டர் வரும். அதிலே அக்காளுக்கும் அத்தானுக்கும் நமஸ்காரங்களைச் சொல்லித் தான் சுகமாய் இருப்பதையும் குறிப்பிட்டிருப்பான். அவ்வளவுதான்; சிவகாமியைப் பற்றி ஒரு வார்த்தை விசாரிக்க வேண்டுமோ? கிடையாது!

குளத்தில் நீர் எடுக்க வந்த சிவகாமி தன்னை மறந்து ஏதேதோ ஞாபகங்களில் தான் ஈடுபட்டு விட்டதை உணர்ந்தாள். நெடுநேரக் கடன் குடத்தை நீரில் அமிழ்த்தக் குனிந்தவள் தெளிந்த நீர்ப்பரப்பிலே அத்தானின் அழகு முகம் தெரிந்ததைக் கண்டு அசையாது நின்று விட்டாள். 'கனிவு சொட்டும் அந்த வதனத்தை மறுபடியும் தரிசிக்கும் பாக்கியம் தனக்குக் கிட்டுமா? அகன்ற மார்பில் அடைக்கலம் புகுமின்ப அதிர்ஷ்டம் எனக்கு உண்டா? நீண்ட தோள்களும், உறுதியான கரங்களும் தன்னைப் பற்றி இறுக்கிச் சுற்றி வளைக்கும் காலம் மீண்டும் வருமா? இத்தனை வசீகரம் மிக்கவராய் இருக்கும் அவருக்கு அந்த முன் கோபம் மட்டும் இல்லாமலிருந்தால்....?

'ஆ! இதென்ன! நீர்ப்பரப்பில் தெரியும் அத்தானின் சுந்தர வடிவம் மாறுகிறதே! ஐயோ! அந்த மைனர்ப் பேர்வழி குப்புசாமியின் முகம் அல்லவா இது?' பகீரென்று இருந்தது சிவகாமிக்கு. பதறித் திரும்பினாள் அவள்.

"பயந்து விட்டாயா?" என்று கேட்டான் குப்புசாமி புன்னகையுடன்.

"எனக்கென்ன பயம்? யாரிடம், எதற்காக நான் பயப்பட வேண்டும்?" நீர் தளும்பும் நிறை குடத்தை இடுப்பில் தாங்கிக் கரையேறினாள் சிவகாமி.

"வாஸ்தவம்தான் சிவகாமி! ஊரிலே எல்லாரும் 'குப்பு மைனர்' என்றுமே பயப்படறாங்க. ஆனால் எனக்கு உன்னை நினைச்சாலே ரொம்ப நடுக்கமாயிருக்கு. எங்கே நீ என்னைக்

கல்யாணம் பண்ணிக் கொள்ள மாட்டேன் என்று விடுவாயோ என்று. அந்தப் பயத்தி லேயே நான் மூணு வருஷமா எல்லாப் பரீட்சை களையும் கோட்டை விட்டுட்டேன்! ஒருவழியா படிப்புக்கு முழுக்கும் போட்டுட்டேன். சிவகாமி! இன்னைக்குத் தங்கக் கடை முதலாளி மாணிக்கம் செட்டியார் சொல்லிக்கிட்டிருந் தார்: உன் அம்மா பத்து பவுனிலே காசு மாலை வாங்கிக்கிட்டுப் போனாளாம். 'பச்சைத் தண் ணியைக் குடிச்சே பத்தாயிரம் சேர்த்துட்டா' என்று பேச்சாயிருந்தது. இதை யெல்லாம் அப்பா காதிலேயும் விழச் செய்யறது எனக்குப் பிரமாதமில்லே. அதோடே ஊரிலே நல்லம்மா ளுக்கு இருக்கிற செல்வாக்கையும் புரிஞ்சிக் கிட்டா அப்பாவும் மனம் மாறி 'என்னுடைய தங்கச்சியாச்சே' என்று உறவு கொண்டாடி வந்துவிடுவார். நீ மட்டும் சரின்னு ஒரு வார்த்தை சொல்லு, சிவகாமி!''

''கலியாணப் பேச்செடுத்தால் நான் பத்திர காளியாகி விடுவேன்!'' என்று படபடத் தாள் சிவகாமி. ''வழியை விடுங்கள்!''

''மிரட்டுகிறாயா சிவகாமி? பூனைக்கு ஒரு காலம் வந்தால் ஆனைக்கு ஒரு காலம் வராமல் போகாது. உன்னை அடைந்தே தீருவேன், சிவகாமி! அடைந்தே தீருவேன்!''

கறுவிக் கொண்டு செல்கின்ற அவனைப் பீதியுடன் கண்ணுக்கு மறையும் வரை பார்த் திருந்து விட்டு வீடு திரும்பினாள் சிவகாமி.

சொன்ன சொல்லைக் காப்பாற்றினான் குப்புசாமி. சிவகாமியை அடைவதற்கான வழி வகைகளைக் கண்டுபிடித்துத் தீவிரமாகச் செயலாற்றினான். இரண்டொரு நாட்களில் பண்ணையார் தங்கையைக் காண வந்தார். பிறகு ஒரு நல்ல நாள் பார்த்து மனைவியை யும் அழைத்துக் கொண்டு வெற்றிலை பாக்கு பழம் சகிதம் விஜயம் செய்தார். தங்கை யிடம் தாராளமாய்ப் பேசிப் பழகினார். அன்னம் அன்பைச் சொரிந்தாள். குப்புசாமி அத்தையிடம் குழைந்தான்.

அவர்கள் போனபிறகு, ''மாப்பிள்ளைப் பையனுக்குத்தான் என்ன அடக்கம், என்ன மரியாதை, என்ன பதவிசு'' என்றெல்லாம் புகழ்ந்தாள் நல்லம்மாள். சிவகாமியின் உள் ளத்தில் பீதி நிறைந்தது.

''அத்தனையும் வெளி வேஷம், அம்மா!''

அதைக் காதில் போட்டுக் கொள்ளாமல், ''பட்டணத்துப் படிப்பு, நகரத்து நாகரிகம்'' என்று குப்புசாமியின் குணநலங்களை அடுக் கிக் கொண்டே போனாள் நல்லம்மாள்.

''கற்றறிந்தது மைனர் விளையாட்டு; சில்க் சட்டையும் செண்டு மணமும்தான் நாகரிகமா?''

''பத்து தலைமுறைக்கு வேண்டிய பணம் இருக்கிறப்போ படிப்பு எப்படி வரும், சிவ காமி! விஷயம் புரியாமல் பேசறியே!''

சொத்து இருப்பதைச் சிவகாமியால் மறுக்க முடியவில்லை. மனமுருகிக் கண்ணீர் சிந்தி அவள் வேண்டாத தெய்வம் கிடையாது. அத்தனை தூரத்திலிருந்த அந்த ஆண்டவனுக் கும் அவள் கதறியது எட்டியிருக்க வேண் டும். பத்தாவது நாள் பெருவாரியான சீனப் படைகள் பாரத நாட்டின் வடக்கெல்லையைத் தாண்டி உட்புகுந்த செய்திகள் வந்தன. அப் போது உண்டான பரபரப்பில் கலியாணப்

''நேத்திக்கு ஒரு சொப்பனம் கண்டேன். என்ன தெரியுமா? நான் பணக்காரப் பட முதலாளியாகி விட் டேன். பங்களா வாசம் புரியும் நான் சில்க் சட்டை, பட்டு வேஷ்டி, வைர மோதிரங்கள் சகிதம் பியூக் காரில் ஏறிக் கொண்டு ஸ்டுடியோவுக்கு வி



யம் செய்கிறேன். பிரபல நட்சத் திரங்களுடன் அளவளாவும் நான், நடிகை பாலாமணியைக் காதலிக்கவே செய்கிறேன். இதற்குள் படம் ரிலீஸ் ஆகவே மஞ்சள் கடுதாசு கொடுத்து விட்டுத் தலையை மொட்டை அடித் துக் கொண்டு தேசாந்திரம் கிளம்பி விடுகிறேன்....!''

பேச்செல்லாம் மறந்து விட்டதாகவே தோன் றியது. மீண்டும் நம்பிக்கை துளிர் விட்டது சிவகாமியின் உள்ளத்தில். ஏராளமான நமது ராணுவத்தினர் இமயமலைச் சாரலுக்கு அனுப்பப்படுகின்றனர் என்றும் மேல் நாடுகளி லிருந்து ஆயுதங்கள் வந்து குவிகின்றன வென்றும் செய்திகள் வெளியாயின. ''பாது காப்பு நிதிக்கு நன்கொடை தாருங்கள், சேமிப்புப் பத்திரங்களை வாங்குங்கள்'' என்று கோஷங்கள் எழுந்தன. வீடு வீடாய்ச் சென்று உண்டி குலுக்கினார்கள் சில இளைஞர்கள்.

தன் தாயாரிடமிருந்து தம்பிடி பெயா ராது என்பது சிவகாமிக்குத் தெரியும். நாட் டுக்காக ஏதேனும் தர வேண்டும் என்று அவ ளுக்கு ஆசைதான். ஆனால் அவளிடம் என்ன இருக்கிறது, தருவதற்கு? 'ஏன் நான் என் அத்தானையே தேசத்தைப் பாதுகாக்கும் பணி யில் ஈடுபடுமாறு அனுப்பி வைத்திருக்கி றேனே!' என்ற எண்ணம் உண்டானதும் திருப்தியும் பெருமிதமும் அடைந்தாள் சிவ காமி. கூடவே அத்தானுக்கு ஆபத்து ஏதும் நேராதிருக்க வேண்டுமே என்ற கவலையும் அவளை ஆட்கொண்டது. பங்கஜத்திடம் நாளைக்கு இரண்டு தரம் போய் விசாரித்தாள். ஒரு தகவலும் இல்லை. மணியார்டரும் வர வில்லை. மாதங்கள் இரண்டு ஓடி மறைந்தன.

மறுபடியும் ஜாடைமாடையாகத் திரு மணப் பேச்சைக் குப்புசாமி ஆரம்பிக்கிற

சமயத்தில் சிவகாமியை ஆனந்தத்தில் ஆழ்த்திய அந்தக் கடிதம் வந்தது. அக்காள் பங்கஜத்துக்குத்தான் எழுதியிருந்தான் குமரன். கடைசி இரண்டு வரிகளில், 'அக்கா! நான் விரைவில் கண்ணபுரம் வரவிருக்கிறேன்; நான் வெகுவாக மாறி விட்டிருக்கிறேன் என்பதைச் சிவகாமியிடம் தெரிவிக்கவும்' என்று குறிப்பிட்டிருந்தான்.

சிவகாமி களிப்பேருவகை எய்தினாள்.

அது மட்டுமா? இன்னும் ஏதேதோ கேள்விப்பட்டாள் சிவகாமி. வீரன் குமரனுக்கு நாளைக்கு வரவேற்பாம், ஊர்வலமாம்! விரட்டி அடிக்க விருந்தவர்கள் வாழ்த்துக் கூறப்போகிறார்களாம். அலங்கார வளைவுகளும் சிங்கார மேடையும் அமைக்கப்பட்டன. இசைத் தட்டு சங்கீதம் மைக் வழியே புகுந்து பேரிரைச்சலாக வெளி வந்து செவிகளைத் துளைத்தது. 'அடேயப்பா! அத்தானுக்கு இத்தனை பெருமையா?' மேனி சிலிர்த்தது சிவகாமிக்கு.




“சிவகாமி!” அன்பு ததும்ப அழைக்கும் குரல் கேட்டு நிமிர்ந்து நோக்கினாள் அவள்.

“அத்தான்!” திறந்த வாய் மூடாமல் அவனைப் பார்த்தது பார்த்தபடி உட்கார்ந்திருந்தாள் சிவகாமி.

குமரன் வெகுவாக மாறித்தான் போய் விட்டான். தேகத்தில் முன்பு இருந்த மிடுக்கு நீங்கி மிருதுத் தன்மை இடம் பெற்றிருந்தது. முகத்திலே முரட்டுத்தனத்துக்குப் பதிலாகச் சாந்தம் குடிகொண்டிருந்தது... உடையிலே அலங்காரமில்லை; அடக்கம் இருந்தது. கட்டுச் சுற்றாக ஒரு வேஷ்டி; தோளைச் சுற்றிப் போட்டிருந்த ஒரு துண்டு.

“சிவகாமி!” என்று மீண்டும் அவன் அழைத்ததும் இது ஏதோ கனவல்ல, நிஜமாகவே அத்தான்தான் என்று தீர்மானித்துப் பாய்ந்து சென்றாள் சிவகாமி. இசை, ஒலியுடன் இணை சேர்ந்தது போல் உயிர் மூச்சுக்கள் ஒன்று கலந்து பேரின்பம் தரும் இதய கீதமாயிற்று. அந்தச் சுகானுபவத்தில் அப்படியே லயித்து விட்ட சிவகாமி சற்று நேரம் பொறுத்துத்தான் தன்னைச் சுற்றி வளைத்திருப்பது அத்தானுடைய இடக்கரம்தான், இடக்கரம் மட்டும்தான் என்பதனைப் புரிந்துகொண்டாள். “ஐயோ! அத்தான்! இதென்ன பயங்கரம்?”

“யுத்தம் பயங்கரமானதுதான் சிவகாமி!”

“அத்தான்! இந்தக் கோலத்தைக் காணவா நான் இத்தனை நாட்கள் காத்திருந்தேன்?”

“துன்பப்படு, சிவகாமி! அழுது புலம்பு! நாட்டுக்காக ஆயிரக்கணக்கில் சிப்பாய்கள் உயிர்த் தியாகமே செய்திருக்கிறார்கள். அத்தனை பெரிய பெருமை எனக்குக் கிட்டாதவாறு நான் செய்த பாவங்கள் தடுத்துவிட்டன. வலக்கரத்தை மட்டும் பறி கொடுத்துவிட்டு, துப்பாக்கி பிடிக்க லாயக்கற்றவனாகி, என்றும் போல் உதவாக்கரைக் குமரனாகவே ஊருக்கு வந்து சேர்ந்திருக்கிறேன். அதை நினைத்தால் எனக்கும் துக்கமாயிருக்கிறது, சிவகாமி. உறுதி வாய்ந்த புஜம் இருந்த போது நான் உழைப்பை அவமதித்தேன். அதற்குத் தண்டனை கிடைத்து விட்டது. இன்று தேசத்துக்கு முன் எப்போதையும் காட்டிலும் உழைப்பு அதிகமாகத் தேவைப்படுவதை உணர்கின்ற அறிவை அடைந்திருக்கும்போது நான் உழைக்கத் தகுதியற்றவனாய் விளங்குகிறேன்.”

கற்பாறை போல் முன்பு இருந்த தோள் தளர்ந்து தொய்ந்திருப்பதைப் பார்த்து நெஞ்சு வெடித்து விடுகிற மாதிரியாகக் குமுறி அழுதாள் சிவகாமி. அழுதவாறே கூறினாள்: “சுயநலப் பிசாசு என்னைப் பிடித்து ஆட்டுவிக்கிறது அத்தான். கரம் இழந்து நீங்கள் திரும்பியிருப்பது ஒரு பக்கத்தில் எனக்கு சந்தோஷமாகவே இருக்கிறது. இனி என்னை விட்டு நீங்கள் எங்கேயும் போக மாட்டீர்கள் அல்லவா?”

“சிவகாமி! உண்மையைச் சொல்லு, சிவகாமி! வலக்கரம் இழந்து விகாரமாய்த் தோற்றமளிக்கும் என்னை இன்னமும் நீ விரும்புகிறாயா?” என்று கேட்ட அவன் இதழ்களைப் பொத்தின மலர் விரல்கள். “அத்தான்! என்ன பேச்சு இது?” என்று கடிந்து கொண்டாள் அவள்.

“உன்னுடைய சம்மதம் ஒருபுறம் இருக்கட்டும். உன் அம்மா...? ஏழை என்பதோடு முடவன் என்கிற குறைபாடும் என்னிடம் சேர்ந்திருக்கிறதே இப்போது....”

“அத்தான்! எனக்கொரு யோசனை தோன்றுகிறது!” என்றாள் சிவகாமி.

“என்ன அது?”

அத்தானிடமிருந்து கடைசியாகப் பங்கஜத்துக்குக் கடிதம் வந்த தினத்தன்றே தனக்கு உண்டான அந்த எண்ணத்தை, சிவகாமி மேலும் சற்று நேரம் மனத்துக்குள் அசை போட்டுச் சிந்தித்து விட்டுக் கூறினாள்:

“நாளைக்கு இங்கே ஒரு பெரிய பொதுக் கூட்டம் நடக்கப் போகுதாம். தலைவர்கள் வருகிறார்களாம். உங்களுக்கு வரவேற்பு உபசாரம் நடத்தி விட்டுத் தேசியப் பாதுகாப்பு நிதிக்குப் பணம் திரட்டப் போகிறார்களாம். அத்தான்! அம்மாவிடம் இருக்கிற பணத்தைப் பாதுகாப்பு நிதிக்குக் கொடுத்து விட்டால்?”

“நல்ல வேடிக்கை! நல்லம்மாளா கொடுப்பாள்....?”

“அம்மா தரவே மாட்டாள் அத்தான். நானாகவே அவளுக்குத் தெரியாமல் எடுத்துக் கொடுத்து விடுகிறேன்! நாம் இருவரும் இணை சேரத் தடையாயிருப்பது அந்தப் பணம் தானே? மந்திரியிடம் நன்கொடையாகப் போய்ச் சேர்ந்து விட்ட பிறகு பணத்தைத் திருப்பிக் கேட்கத் துணிவு வராது அம்மாவுக்கு. பணம் போன பிறகு பண்ணையார் உறவு கொண்டாட நினைக்க மாட்டார்.”

“சிவகாமி! என்ன அசட்டுத்தனம் இது? உன் வீட்டிலிருந்து, உன் அம்மாவிடமிருந்து நீயே திருடுவதா?”

“அத்தான்! என் நல்வாழ்வுக்காகத்தானே அம்மா பணம் சேர்த்து வைத்திருக்கிறாள்? அதை என்னுடைய நியாயமான நல்வாழ்வுக்

தரத்திற்கும்
உறுதிக்கும்
நிகரற்றது

# ஹத்திபாயின்



## ஸ்டெயின்லெஸ் ஸ்டீல் பாத்திரங்கள்

நீடித்து உழைப்பவை, ஜொலிப்புடன் திகழ்பவை

ஸ்டெயின்லெஸ் ஸ்டீல் பாத்திரங்கள் தயாரிப்பவர்களில் முதன்மையானவர்கள்.

**ஹத்திபாய் துளஸிதாஸ் & சன்ஸ்** 122, கன்ஸராசால், பம்பாய் 2

ளாகச் செலவிடுவது தவறாகுமா, இருட்டாகுமா அத்தான்! நீங்கள் ஏதும் மறுத்துச் சொல்ல வேண்டாம். நான் தீர்மானித்து விட்டேன். சாயங்காலம் பொதுக்கூட்டத்தின் போது சந்திப்போம்.''

அந்த மாந்தோப்பில் அவ்விருவரும் பிணைந்ததையும் பிரிந்ததையும் அருமை நாய்ட்டிய மாடும் கண்கள் இரண்டு கவனித்துக் கொண்டிருந்ததை அறியாமல் சிவகாமி சென்றாள்.



கொடிகள் பறந்தன. கார்கள் விரைந்தன. புழுதிப் படலம் படர்ந்தது. வெள்ளைத் தொப்பிகள் தெரிந்தன. மக்கள் கூட்டமாகச் செறிந்தனர். கோஷங்கள் வானைப் பிளந்தன. மேடையில் தலைவர்கள் நிறைந்தனர்.

'அம்மா இந்தக் கூட்டத்தில் இருந்தாலும் அவளைத் தேடிக் கண்டுபிடிக்க முடியாது; ஆனால் மேடையில் குமரன் அத்தானையும் காணோமே?'

முண்டியடித்துக் கொண்டு முன்னால் போனார்கள் தமக்கையும் தம்பியும். தலைவர்களிடையேயும் அந்தப் பேச்சுத்தான். ''குமரன் எங்கே? குமரன் எங்கே?''

''வந்துவிடுவானுங்க. அப்படியே வராது போனாலும் கூட்டத்தை நாம் நடத்திட வேண்டியதுதான். காத்திருக்கிறதிலே அர்த்தமில்லீங்க. நமக்குத்தான் எத்தனையோ வேலை இருக்குது.'' — பண்ணையார் கூறிக் கொண்டிருந்தார், மந்திரியிடம்.

இந்தச் சமயத்தில் மேடை மீது ஏறினான் குமரன். தலையில் நெற்றி முழுவதையும் மறைத்துக் கட்டுப் போட்டிருந்தது. அந்தத் துணியிலும் வெற்றிக் கொடியாக ரத்தச் சிவப்புத் தெரிந்தது. ''அத்தான்!'' என்று அலறப் போன சிவகாமியின் கூக்குரல் தொண்டையிலேயே நின்று விட்டது. 'குமரனைக் கைத்தாங்கலாகப் பிடித்து மேடைக்கு அழைத்து வருவது யார்? அம்மா தான்! ஆம், நல்லம்மாளே தான்!'

மேடையில் ஒரே பரபரப்பு. ''என்ன? என்ன?'' என்று அனைவரும் விசாரித்தார்கள்.

''அடிபட்டு விட்டது; அவ்வளவுதான்'' என்று ஒரே பதிலைக் கூறினான் குமரன்.

பண்ணையார் மட்டும் பயந்தவர் போல் ஒதுங்கிக் கொண்டது சிவகாமிக்கு விநோதமாக இருந்தது.

குமரனை நாற்காலியில் உட்கார வைத்து விட்டுச் சுற்றுமுற்றும் கண்ணோட்டம் செலுத்தித் தன் மக்களைத் தேடினாள் நல்லம்மாள். ''அம்மாவுக்கு என்ன வேணுமோ கேட்டு வாடா'' என்று தம்பியை அனுப்பி வைத்தாள் சிவகாமி. சிறுவன் தடுத்து நிறுத்தப் பார்க்கும் கூட்டத்தினரை ஒதுக்கித் தள்ளிவிட்டு மேடையில் துள்ளி ஏறினான். தாயார் அவனை ஏதோ கேட்பதையும் கால் சராய் பையிலிருந்து அவன் வீட்டுச் சாவியை எடுத்துக் கொடுப்பதையும் பார்த்தாள் சிவகாமி. அத்தானிடம் ஓடிச் சென்று பட்ட காயத்துக்குக் களிம்பு தடவியும் சோகத்தைப் போக்கி விட்டும் ஆசுவாசப்படுத்த வேண்டும் என்று அவளுக்குத் துடிப்பாயிருந்தது. அத்துடன் அவனிடம் ஏதோ விருப்புடன் கூறிச் சென்று போகிறாள் அம்மாவுக்குத் தெரியாமல் தன்னால் பணத்தை எடுக்க முடியவில்லை; அதைக் கூறத் தனக்குத் தைரியம் வரவில்லை என்பதையும் அத்தானுக்குச் சொல்ல விரும்பினாள். ஆனால் இந்தப் பெருங் கூட்டத்துக்கு முன்னால் தான் மேடை ஏறி அத்தானை அணுகுவது எப்படிச் சாத்தியமாகும்?

இதற்குள் தம்பி அக்காளிடம் திரும்பினான். தலைவர்களுக்கு நல்வரவு கூறிப் பண்ணையார் பேச ஆரம்பித்தார்:

''குமரனுக்கு எப்படியோ பலத்த அடிபட்டிருக்கிறது. ஆனால் இதெல்லாம் அவனுக்குச் சகஜம். சீனப் பகைவர்களை விரட்டியடிக்கையில் எத்தனையோ இடுக்கண்களைச் சமாளித்தவனாயிற்றே! காயம் பட்ட நிலையிலும் கம்பீரமாய் அவன் அமர்ந்திருப்பதைப் பாருங்கள்!......''

பலத்த கரகோஷம்! பண்ணையாரா பேசுகிறார்? பாடுபட்டவனின் புகழில் பங்கு கேட்கும் வஞ்சகமல்லவா பேசுகிறது? அன்றுமலே தொடர்ந்தார்:

''எனக்கு அன்றைக்கே தெரியும். குமரனுக்கு ஏற்றது ராணுவ சேவைதான் என்று. அதனால் அந்தத் துறையில் அவனை ஊக்குவித்து அனுப்பினேன்.'' — மேலே மேலே தற்பெருமையே பேசுகிறார் பண்ணையார். கடைசியில் நாட்டை ஆளும் தலைவர்களிடம் நல்ல பேர் எடுக்க விரும்பும் தற்குறிப் பேர்வழியாகப் பகர்கிறார்: ''இன்றைய தினம் தலைவரிடம் தருவதற்கு ஊரார் சேர்த்திருக்கும் சிறு தொகை ஒருபுறமிருக்க, நமது அமைச்சரிடம் தேசியப் பாதுகாப்பு நிதிக்காகப் பத்தாயிரம் ரூபாயை என் சொந்த முறையில் என் அருமை மகன் குப்புசாமியின் பெயரால் அளிப்பதில் நான் பெருமைப்படுகிறேன்!''

மந்திரி கைதட்டலை ஆரம்பித்து வைக்க, மற்றவர்களும் அவர் காட்டிய பாதையைப் பின்பற்றினர்.

அப்போது, ''நிறுத்துங்கள்! நிறுத்துங்கள்!'' என்று ஓர் அதிகாரக் குரல் கேட்டது. நல்லம்மாளின் குரல் போல் ஒலிக்கவே சிவகாமி கழுத்தை நீட்டிப் பார்த்தாள். தட்டு நிறைய பணத்துடனும், வெற்றிலை பாக்குப் பழத்துடனும் வந்தது அவள் தாயார் தான்!

மேடையில் நட்ட நடுவே வந்து நின்று கொண்டாள் நல்லம்மாள். ''பண்ணையார் கூறினார் பத்தாயிரம் தருவதாக.'' அவள் குரல் கணீரென்று ஒலித்தது. ''அவர் அதைப் போன்று எத்தனையோ பத்தாயிரம் ரூபாய்களுக்கு அதிபதி. அவர் கொடுக்கலாம். அதில் அதிசயமில்லை.

''நாட்டைக் காக்கப் பணம் வேண்டும் என்று நீங்கள் கேட்கிறீர்கள்!'' தலைவர்கள் பக்கமாய்த் திரும்பினாள் நல்லம்மாள். ''தாலியைக் கொடுத்தாலும் கூச்சமின்றி வாங்கிக் கொள்ளத் தயாராக இருக்கிறீர்கள். பணத்தினாலும் நகை நட்டினாலும் உண்மையாகவே நாட்டைப் பாதுகாக்க முடியுமென்றால், இதோ நான் வாழ்நாள் முழுதும் பாடுபட்டுச்

''சார், சார்! நான் ஏதோ கேட்டேன். நீங்க என்னமோ அகராதியைக் கொண்டு வந்து கொடுக்கிறீங்களே!''



''நீ கேட்டது அகராதிதானே!''

''இல்லே, சார்! ஆகாராதி ஏதேனும் கொடுக்க முடியுமான்னு கேட்டேன்!''

சேர்த்த இந்தப் பத்தாயிரத்தையும் தரத் தயாராக இருக்கிறேன். எடுத்துக் கொள்ளுங்கள்.'' — அருகே இருந்த மேஜை மீது வெள்ளித் தட்டை வைத்து விட்டுத் தொடர்ந்தாள் நல்லம்மாள்: ''ஆனால் பணத்தினால் மட்டும் இந்த நாட்டைக் காப்பாற்றிவிட முடியாது. எதிர்த்துப் போராட முடியாத வகையில் வலக்கரத்தை இழந்தவனை, ஒரு மூடனை, அடித்து உதைக்கக் குண்டர்களை ஏவி விட்டுவிட்டு மரத்தின் மறைவிலிருந்து வேடிக்கை பார்க்கும் கோழையிலும் கோழைகளான சில கயவர்களாலும் இந்தத் தேசத்தைக் காக்க முடியாது. அவர்கள் பத்தாயிரமென்ன, கோடி கோடியாகக் கொட்டினாலும் அந்தப் பணத்தைக் கொண்டு எதையும் சாதிக்க முடியாது. நாட்டைக் காக்கக் குமரனைப் போன்ற சுத்தமான வீரர்கள் வேண்டும். ஆபத்துக் காலத்தில் தக்க தருணத்தில் உதவுகிற உண்மையான நண்பர்களின் ஒத்துழைப்பு வேண்டும். இவையெல்லாம் இன்றைக்கு நான் நன்றாக அனுபவித்துக் கற்றுக் கொண்ட பாடம்.'' நல்லம்மாள் நிதானித்துக் குமரன் பக்கமாகத் திரும்பினாள்.

''தம்பி! உன்னை மூடன் என்று இந்தப் பாழும் நாவினால் அழைத்தேன். அது பலித்து விட்டது. ஊரார் அத்தனை பேரும் கூடியிருக்கிற போது நான் உன்னிடம் மன்னிப்புக் கேட்டுக் கொள்கிறேன். தம்பி! என்னை மன்னித்து விடு!'' நாத் தழுதழுக்கக் கூறிவிட்டு மேடையிலிருந்து இறங்கி விடுவிடுவென்று வீடு நோக்கி நடந்தாள் நல்லம்மாள்.

பந்தலில் அமர்ந்திருந்தவர்களுக்கோ இடி இடித்து ஓய்ந்தது போல் இருந்தது. நல்லம்மாள் நின்ற இடத்தையும் சென்ற திக்கையுமே வாயடைத்துப் போய்ப் பார்த்துக் கொண்டிருந்தவர்கள், மீண்டும் சுய உணர்வு பெற்ற போது, அவள் பேசி முடிக்குமுன்னரே பண்ணையார் மேடையை விட்டு இறங்கி, நழுவி விட்டிருப்பதைக் கவனித்தார்கள்.

* * *

''அம்மா, எங்களை ஆசீர்வதியுங்கள்'' என்றான் குமரன். திருமணத்துக்குத் தயாராய் நின்ற இருவரும் நமஸ்கரித்தார்கள்.

''தீர்க்காயுசா இருக்கணும்'' என்றாள் நல்லம்மாள்.

''ஆபத்துக் காலத்தில் சட்டென்று நீங்க உதவிக்கு வரச்சே ஆயுசுக்கு என்ன குறைச்சல்?'' என்றான் குமரன். ''அன்றைக்கு நீங்கள் தடியைச் சுழற்றியதைப் பார்த்ததும் நான் அசந்து போய்விட்டேன். எப்படி அம்மா, சரியான சந்தர்ப்பத்திலே அங்கே வந்து சேர்ந்தீங்க?'' என்று ஆச்சரியத்துடன் கேட்டான்.

''உண்மையை இனிமேல் சொல்றதுக்கு என்ன? வீடு பூட்டியிருக்கவே நான் சிவகாமியைத் தேடிக்கிட்டு வந்தேன். நீ ஊர் திரும்புகிறதா ஊரிலே பேச்சு அடிபட்டுக் கொண்டிருந்தது. அவள் உன்னைப் பார்க்கத்தான் கிளம்பியிருப்பாள்; நல்லா உதை கொடுத்து அழைச்சுக்கிட்டு வரணும் என்கிற நோக்கத்திலே புறப்பட்டேன். மாந்தோப்புக்கு வந்து பார்த்தால் நீ குண்டர்களிடம் அகப்பட்டுக் கிட்டிருந்தாய். அதை ஒளிஞ்சிருந்து பார்த்து ரசிச்சுக்கிட்டிருந்தான், பயந்தாங்கொள்ளிக் குப்புசாமி. என் தலையைக் கண்டதும் தடியைப் போட்டுட்டு ஓட்டம் எடுத்தான். கீழே கிடந்த தடியை எடுத்து நான் சுழற்றினேன்.

''காதும் காதும் வைச்சாப் போல முடிச்சுடலாம்னு நெனைச்சிருந்த தங்களோட அக்கிரம வேலையைப் பத்தி மூணாவது ஆசாமிக்கும் தெரிஞ்சு போச்சுன்னு கண்டதும் அந்தக் குண்டர்களும் அரண்டுட்டாங்க. நாளைக்குத் தம்பி சார்பிலே சாட்சி சொல்லக் கூடியவள் காலிலே எண்சாணுடம்பாக விழுந்தாங்க.''

''குப்புசாமி மனசிலே என் பேரில் விரோதம் உண்டானது நியாயம். ஆனால் இந்தக் காரியத்துக்கு அவன் அப்பாவும் உடந்தையாக இருந்ததை எண்ணினால் அதிசயமாயிருக்கு'' என்றான் குமரன்.

''அப்படியா?'' என்று வியப்புடன் வினவினாள் சிவகாமி. ''பொதுக்கூட்டத்தின் போது மேடையிலே ஒரு மாதிரியாகத்தான் நடந்துக்கிட்டார். காரணம் புரியலே எனக்கு.''

''அன்னைக்கு என் காலிலே விழுந்த காலிப் பசங்க அதையும் உடைச்சு விட்டுட்டாங்க, சிவகாமி. ஊரிலே தன்னைவிடப் பணக்காரன் யாரும் இருக்கக் கூடாதுங்கிறது மட்டும் அண்ணனுடைய நோக்கமில்லே; தன்னைவிட அதிகமா ஒருவன் புகழ் அடைவதும் அவருக்குப் பிடிக்கவில்லே'' என்றபோது அண்ணனின் துர்ப்புத்திக்காக அவள் நைந்து உருகியது நல்லம்மாள் பேசிய தொனியிலிருந்து கண்டு கொள்ள முடிந்தது. ஓர் ஏக்கப் பெருமூச்சுடன், ''இதை அந்தக் குண்டர்கள் சொல்லி விட்டுக் கைகொடுத்துக் கும்பிட்டுக்கிட்டே ஓடிட்டாங்க. நான் தம்பி கிட்டே வந்து அவனை மூர்ச்சை தெளிவித்தேன். அப்போதுதான் தம்பிக்குக் கைபோய் விட்டது தெரிஞ்சுது.'' — நல்லம்மாளுக்குத் தொண்டையை ஏதோ அடைத்தது.

''மூடனானாலும் என்ன குறைஞ்சு போயிட்டுது, தாயே? கொம்புத் தேன் எனக்குக் கிடைச்சுட்டுதே'' என்றான் குமரன். சிவகாமியின் முகம் 'குப்'பென்று சிவந்தது.

''போங்க, போங்க! மாந்தோப்பு நிழலெல்லாம் வீணாய்ப் போகுது'' என்று அவர்களை அனுப்பி வைத்தாள் நல்லம்மாள்.

# ஆஹா...

என்னே ஆரோக்கியமளிக்கும்
புத்துணர்ச்சி, கோலினுஸின்
பாதுகாக்கும் நுரையிலே!

கறுகறுப்பாக வாழ்பவர்கள் கோலினுஸைத் தேர்ந்தெடுக்கிறார்கள்...ஏனெனில் நுரைக்கும் தன்மையுள்ள கோலினுஸ் மட்டுமே பற்சிதைவு மற்றும் வாய் நாற்றத்திலிருந்து இரவும் பகலும் பாதுகாப்பளிக்கிறது. ஆகையால் கோலினுஸ் ஸூப்பர் ஒயிட்டை உங்களுடைய பற்பசையென்று நிச்சயப்படுத்திக்கொள்ளுங்கள்.



**தலைநிமிர்ந்த புன்சிரிப்பு–அது கோலினுஸின் புன்சிரிப்பு**

அல்லது, வீரியமுள்ள குளோரோபில்லின் களிப்பூட்டும் புத்துணர்ச்சியை நீங்கள் விரும்பினுல், புதிய சேர்க்கை கோலினுஸ் குளோரோபில் வேண்டுமென்று கேளுங்கள்.




பற்சிதைவைத் தடுக்கிறது. உங்கள் மூச்சிலே மணம் கமழச் செய்கிறது. உங்கள் பற்களை வெண்மையாக்குகிறது.

Registered User: GEOFFREY MANNERS & CO. LIMITED

# எல்லோராக் கைலாயர்

தொ.மு. பாஸ்கரத் தொண்டைமான்

ஒரு நாள் கைலாயத்தில் கைலாய நாதனை பரமேசுவரவர்மன் பார்வதியோடு உல்லாசமாக இருந்திருக்கிறான். அச்சமயத்தில் இராவணன் அந்தப் பக்கம் வந்திருக்கிறான். எதைக் கண்டாலும் அதைப் பெயர்த்து எடுக்கும் தோள்வலி பெற்றவன் அல்லவா? அதனால் தன் தோளில் ஏற்பட்ட தினவைத் தீர்க்க, அந்தக் கைலை மலையையே பெயர்த்தெடுக்க எண்ணியிருக்கிறான். மலைக்கு அடியிலே கையைக் கொடுத்து மலையையே ஓர் அசைப்பு அசைக்கிறான். மலையும் மரனும் மாணிக்கக்கற்பாறைகளுமே ஆட்டம் கொடுத்திருக்கின்றன. பார்வதியே இந்த நிலைகுலைவினாலே அஞ்சுகிறாள். அந்த அச்சம் காரணமாகத் தன் பக்கலில் இருந்த இறைவனை அப்படியே கட்டிப் பிடித்துக் கொள்கிறாள். மோனத் தவத்திலிருந்த இறைவன் விஷயத்தை அறிகிறான். தனது வலது கால் கட்டை விரலால் மலையை ஓர் அழுத்து அழுத்துகிறான். அவ்வளவுதான். தசகண்ட ராவணன் மலையின் அடியிலேயே அகப்பட்டுக் கொள்கிறான். அவன் தலை நொறுங்குகிறது. விழி பிதுங்குகிறது. இந்த நிலையில் இராவணன் தான் தப்ப ஒரு வழி தேடுகிறான். அவனுக்குத் தெரியும்; இன்னிசையால், இசைப் பயனும் விளங்குபவன் இறைவன் என்று. உடனே தன் தோளில் கிடந்த வீணையை எடுத்து மீட்டி அதில் சாமகானத்தை இசைக்கிறான். அவ்வளவுதான் அந்த இசையில் மயங்குகிறான் இறைவன். ஊன்றிய விரலின் அழுத்தம் குறைகிறது. உடனே 'தப்பினோம், பிழைத்தோம்' என்று ராவணன் எழுந்து மீசையில் ஒட்டிய மண்ணை உதறி விட்டு ஓடி விடுகிறான். இந்த வரலாற்றைக் கவிஞர்கள் பாடுகிறார்கள்; பக்தர்கள் போற்றுகிறார்கள்.

' மருவுற்ற மலர்க்
குழலி மடவாள்
அஞ்ச மலை
துளங்கத்
திசை நடுங்கச்
செறுத்து நோக்கி
செரு உற்றவாள்
அரக்கன் வலிதோள்
மாளத் திரு அடியின்
விரலொன் றால்
அலற ஊன்றி '

யதை நாவுக்கரசர் அழகாகப் பாடி மகிழ்கிறார். இப்படி அப்பர் பாடி மகிழ்ந்ததையே தமிழ் நாட்டுக் கலைஞன் ஒருவன் கண்டு மகிழ்ந்திருக்கிறான். கண்ட காட்சியையே அற்புதச் சிலை வடிவாக அமைத்து அந்தப் பழையாறைக் கோயிலில் நிறுத்தியும் வைத்திருக்கிறான். இப்படிச் சோழமன்னர் கட்டிய பழையாறையில் சிலை வடிவில் உருவான அரியதொரு கற்பனையே வடநாட்டில் விந்தியத்துக்குத் தெற்கே எல்லோராக் குடைவரைக் கயிலாயநாதர் கோயிலாக உருவாகியிருக்கிறது. அக் கயிலாயநாதர் கோயிலையையும் உள்ளடக்கிய பிரும்மாண்டமான கலைக் கோயில்களான குடைவரைகளைக் காண நாம் இன்று எல்லோரா செல்கிறோம்.

எல்லோரா இன்றைய மகாராஷ்டிர ராஜ்யத்தில் அவுரங்காபாத் அருகில் இருக்கிறது. பம்பாயிலிருந்து செல்வோர் மன்மாட் ஸ்டேஷனில் வண்டி மாற்றி அவுரங்காபாத் சென்று சேர வேண்டும். தௌலதாபாத், எல்லோரா ரோட்ஸ்டேஷன்களிலும் இறங்கிச் செல்லலாம். என்றாலும் அங்கிருந்து எல்லோரா செல்ல டாக்ஸியோ, வண்டியோ கிடைக்காது. ஆதலால் அவுரங்காபாத் ஸ்டேஷனிலேயே இறங்கி, அங்குள்ள அரசினர் விடுதியில் தங்கி இளைப்பாறிக் கொண்டு பின்னர் டாக்ஸி ஏற்பாடுபண்ணி மேற்கு நோக்கிப் பதினேழு மைல் செல்ல வேணும். பஸ் வசதியும் உண்டு. அப்படிச் செல்வதற்கு முன்பே அவுரங்காபாத்தில் உள்ள சில கட்டடங்களையும் பார்க்கலாம். இங்கு தாஜ்மஹாலைப் போன்ற ஒரு சிங்காரக் கட்டடம் இருக்கிறது. இதனை பீபிகா மக் பாரர் என்று அழைக்கின்றனர். அது ராபீ துரானியின் சமாதி என்றும் அதைக் கட்டியவன் அவுரங்கசீப் என்ற மொகலாய மன்னன் என்றும் சரித்திர ஏடுகள் பேசுகின்றன. அசப்பில் பார்த்தால் தாஜ்மகாலைப் போலவே இருக்கும் என்றாலும், தாஜ்மகால் அமைந்திருக்கும் இடத்தைப் போல் ரமணீயமான இடத்தில் அமைந்திருக்கவில்லை. அதைப் போல் கவர்ச்சியாகவும் இல்லை. இந்த நகரிலேயே அவுரங்கசீப்பின் சமாதியும் இருக்கிறது. அவுரங்கசீப் முகமதுநபி கூறிய வழி பற்றி நடந்த நல்ல முஸ்லீம். தன்னை அடக்கம் செய்வதற்குச் சர்க்கார் கஜானாவிலிருந்து ஒருபைசா கூடச் செலவு செய்யக் கூடாது என்று இட்டமிட்டு, தன் வாழ்நாள் முழுவதும் குல்லாய்கள் தைத்து அவைகளை விற்றுச் சேர்த்த பணத்தைக் கொண்டே


எல்லோராக் குடைவரை

ஞாபக மறதிப் பேராசிரியர் ஒருவர் தம் நண்பரிடம் பேசிக் கொண்டிருந்தார். ''இன்றைக்கு ஓர் அதிசயம்! என் வகுப்பில் நான் நின்று பாடம் நடத்திக் கொண்டிருப்பதாக ஒரு கனவு கண்டேன்....!''

''இதில் என்ன அதிசயமிருக்கு!'' என்றார் நண்பர்.

''கண் விழித்ததும் நான் வகுப்பில் நிஜமாகவே பாடம் நடத்திக் கொண்டிருப்பதைக் கண்டேன்!''

தனக்குச் சமாதி அமைத்துக் கொண்டவன். சர்க்கார் பொதுப் பணத்தைக் கையாளுவதில் அத்தகைய தூய்மை உடையவன் என்று அறிகிறபோது அவனது சமாதிக்குச் சென்று அவனுக்கு உரிய வணக்கத்தைச் செலுத்திவிட்டே மேலே நடக்கலாம். அவுரங்காபாத்திலிருந்து எட்டு மைல் தொலைவில் ரோஜா என்னும் குல்தா பாத் கோட்டையும் இருக்கும். இன்னும் ஹைதராபாத் நைசாமின் மாளிகையும், மாலிக் அம்பர், அப்துல் ஹாசன் முதலியவர்களின் சமாதிகளும் இருக்கின்றன.

எல்லோராவில் உள்ள குடைவரைகள் முப்பத்தி நாலு. அவைகளை யெல்லாம் சரியாகப் பார்க்க வேண்டும் என்றால் ஒரு நாள் காணாது. ஆதலால்அதிகாலையிலேயேஅவுரங்காபாத்தை விட்டுப் புறப்பட்டு எல்லோரா போய்ச் சேர்ந்துவிட வேண்டும். குடைவரைகளுக்கு இரண்டு பர்லாங்குக்கு முன்பே காரை நிறுத்தி விடுவார்கள். அப்படி நிறுத்திய இடத்துக்குப் பக்கத்திலேயே புதைபொருள் இலாகா அலுவலகம் இருக்கிறது. அங்கே சென்று ரூ. பத்து கட்டணம் செலுத்தி ஒரு வழிகாட்டியையும் அழைத்துச் செல்வது நல்லது.

இங்குள்ள குடைவரைகள் முப்பத்திநாலு என்று முன்னமேயே சொல்லியிருக்கிறேன். அவற்றில் சரி பாதி, ஆம், பதினேழு குடைவரைகள் இந்து சமயச் சார்புடையவை. பன்னிரண்டு பௌத்த மதச் சார்பும், ஐந்து சமண மதச் சார்பும் உடையவை. இக்குடைவரைகளுக்கெல்லாம் நடுநாயகமாக இருப்பதுதான் கைலாச நாதர் கோயில். இதுவும் ஒரு குடைவரையே என்றாலும் இதனைக் காண்பவர்கள் இது மலையைக் குடைந்து அமைத்த ஒன்று என்று எண்ணவே இயலாதவாறு பூரணமான பொலிவோடு ஒரு தனிக் கோயிலாகவே இருக்கிறது. இக்குடைவரை மற்றைய குடைவரைகளைப் போல் மலைச் சரிவில் பக்கத்திலிருந்து குடைந்து எடுக்கப்பட்டதல்ல. இக்குடைவரை உருவாக்கிய விஸ்வகர்மா – சிற்பி வானுலகத்திலிருந்தே இறங்கி இருக்க வேணும். அப்படி இறங்கியவன் ஒரு மலை உச்சியில் இறங்கியிருக்கிறான். உடனேயே தன் சிற்றுளியால் மலையின் உச்சியிலிருந்தே மலையை வெட்டிச் செதுக்க முனைந்திருக்கிறான். அப்படிச் செதுக்கியே பூமியின் தளத்துக்கு வந்திருக்கிறான். இதனாலே சாரம் கட்ட வேண்டிய நிர்ப்பந்தம் ஒன்றும் இல்லாமலேயே அவனால் இக்குடை வரை அமைக்க முடிந்திருக்கிறது. இக்குடைவரையை உருவாக்க நூறு வருஷங்களாவது ஆகியிருக்க வேண்டும் என்றும், இக்குடைவரையைக் குடைந்து கிட்டத்தட்ட மூந்நூறு லட்சம் கன அடியுடைய கற்கள் அப்புறப்படுத்தப்பட்டிருக்க வேண்டும் என்றும் இன்றைய கட்டடக் கலைநிபுணர்கள் கணக்கிடுகின்றனர். இந்த மதிப்பீடு ஒன்றே இக்குடைவரை எவ்வளவு பிரும்மாண்டமானது என விளக்கப் போதியதாகும். இது சிற்பக் கலை உலகில் ஓர் அரிய சாதனைதான். இக்குடைவரையின் அளவைப் பற்றி இவ்வளவு தெரிந்து கொண்டபின் இனி குடைவரைக்குள்ளேயே நுழையலாம்.

நுழை வாயிலிலே பிரும்மாண்டமானதாக இருக்கும் வாயிலின் இரண்டு பக்கங்களிலும் பெரிய பெரிய காத்திரமான சிற்ப வடிவங்கள். வாயிலில் நுழைந்து உள்ளே சென்றால் நமக்கு எதிரே கஜலட்சுமி காட்சி தருகிறாள். ஒரு பெரிய தாமரைக் குளம். அந்தக் குளத்தில் பூத்த ஒரு தாமரை. அத்தாமரையில் கொலுவிருக்கும் லட்சுமி. அந்த லட்சுமியை நீராட்ட நான்கு யானைகள். ஒரு யானை தண்ணீரை மொண்டு அடுத்த யானையிடம் கொடுக்க, அதை அடுத்த யானை வாங்கி அபிஷேகம் பண்ணுகிற பாவனையில் சிற்ப வடிவங்கள் உப்புச உருவில் அர்த்த சித்திரமாக அமைந்திருக்கின்றன. வாயிலுக்கு இரண்டு பெரிய துவார பாலகர்கள். தஞ்சை ராஜ ராஜன் கட்டிய பெரிய கோயிலில் உள்ள பெரிய துவாரபாலகர்களிலும் பெரிய வடிவங்கள். இம்மட்டோடு இன்னும் இங்கேயே கங்கை, யமுனை, சரஸ்வதி என்னும் திரிவேணி சங்கமமும்சிற்பவடிவமாக உருவாக்கப்பட்டிருக்கிறது. இக்குடைவரை மேற்கே பார்த்திருக்கிறது. நாம் நமக்கு வலப்புறமாகத் திரும்பி நடக்கலாம். அப்போதுதான் அக்கோயிலின் விசாலமான வெளிப் பிராகாரம் தெரியும். 280 அடி நீளமும் 160 அடி அகலமும் உள்ளது அப் பிராகாரம். அங்கு அந்த வடக்குப் பிராகாரத்தின் ஆரம்பத்திலும்தெற்குப் பிராகாரத்தின் ஆரம்பத்திலும் ஒவ்வொரு யானையும் ஒவ்வொரு துவஜ ஸ்தம்பமும் நிற்கும். துவஜ ஸ்தம்பத்தின் உயரம் 45 அடி.

யானைகளின் கால்கள் ஒவ்வொன்றும் நமது திருமலை நாயக்கர் மண்டபத்திலுள்ள தூண்களைப் போல என்றால் அந்த யானைகளின் காத்திரம் என்ன வென்று கணக்கிட்டுக் கொள்ளலாம். இந்த விஸ்தாரமான வெளிப் பிராகாரத்துக்கு நடுவிலேதான் கைலாய நாதர் கோயில் இருக்கிறது. இக்கோயில் ஒரு சிறிய கோயில் அல்ல. 150 அடி நீளமும் 100 அடி அகலமும் நூறு அடி உயரமும் உடையதாக இருக்கும். இந்தப் பிரதான கோயில் சோழ நாட்டு மாடக் கோயில்களைப் போல் இருபத்தைந்தடி உயரம் உள்ள மாடத்தின் மேல்தான் செதுக்கப்பட்டிருக்கிறது. அந்த இருபத்தைந்தடி உயரம் உள்ள மலைச் சுவர்களில் எல்லாம் யானைகளும் யாளிகளும் சிங்கங்களும் உருவாகியிருக்கின்றன. இன்னும் சுவர்களில் ராமாயணம் முதலிய இதிகாச வரலாறுகள் எல்லாம் சிற்ப வடிவங்க

ஐடெக்ஸ்
கண் மை
அரவிந்த் பிந்தி
குங்கும சாந்து

அரவிந்த் லாபரட்டரீஸ்
தபால் பெட்டி 1415 - மதுரை - 17



G. P.

# tik-20

# டிக்-20

மூட்டைப்பூச்சிகளைக் கொல்லுகிறது




கெய்கி
டயஸினன்



டாடா-பைஸன் தயாரிப்பு

பண்டிட்
டி. கோபாலாச்சார்லுவின்

# அருணா

ஸ்திரீகள் ஆரோக்ய சௌபாக்யத்திற்கு

ஆயுர்வேதாஸ்ரமம் பிரைவேட் லிட்.,
சென்னை - 17





சருமப்
பராமரிப்புக்குத்
தகுந்த
ஏற்பாடு
அவசியம்...
அதற்குகந்தவை

# 'ஹேஸலின்'
# அழகு
# சாதனங்கள்

**ஸ்னோ * கோல்ட் க்ரீம் * டால்க்**

உங்கள் சருமத்துக்குத் தனிப்பட்ட அழகுப் பராமரிப்பு தரும் மூன்று வகை நறுமண அழகுப் பொருள்கள்.

* "'ஹேஸலின்' ஸ்னோ"—மேனியெழிலுக்கு மெருகூட்டி, சருமத்தைப் பாதுகாக்கிறது.
* 'ஹேஸலின்' கோல்ட் க்ரீம் ஊடுருவிச் சுத்தம் செய்து, சருமத்தை மழமழப்போடும், கட்டுத் தளரா இளமையுடனும் இருக்கச் செய்கிறது.
* 'ஹேஸலின்' டால்க் நறுமணமுள்ள ஸமான பவுடர் — பூசிக்கொண்டால்...ஆகா! என்ன குளுமை! என்ன புதுமை! என்ன புது மணம்!







பர்ரோஸ் வெல்கம் தயாரிப்புக்கள்

ளாகப் பரிணமிக்கின்றனா. கோயிலின் தென்புறச் சுவரிலே அடித்தளத்திலேதான் இராவணன் கைலை மலையை அசைத்த கதை சிற்பமாக அமைந்திருக்கிறது. இக்கைலாச நாதர் கோயிலை உருவாக்க மூலக் கற்பனையையே இந்தக் கதைதானே உதவியிருக்கிறது!

கறுத்தவன் கண்சிவந்து
　　கயிலைநன் மலையைக் கையால்
மறித்தலும் மங்கை அஞ்ச
　　வானவர் இறைவன் நக்கு
நெறித்தொரு விரலால் ஊன்ற
　　நெடு வரை போல வீழ்ந்தான்.

என்று அன்று அப்பர் பாடிய கவிதை இங்கே கல்லிலே வடித்த காவியமாக மலர்ந்திருக்கிறது. இங்குள்ள வடிவங்களில் நவரஸ வடிவினையுமே சிற்பி வடித்திருக்கிறான். சாந்தத்தையும் விஸ்மயத்தையும் சிவனுடைய வடிவிலே காட்டியவன் அச்சிவனையே அணைத்துக் கொள்ளும் பார்வதியின் வடிவிலே சிருங்கார ரஸத்தைப் பிழிந்திருக்கிறான். ராவணன் விழி பிதுங்கும் நிலையிலே பயங்கரம் பரிணமிக்கிறது. இன்னும் கைலையில் உள்ள கணங்கள் ஒவ்வொன்றும் ஒவ்வொரு உணர்ச்சியைக் காட்டுவதாக இருக்கும். இன்னும் மரங்களிலே ஓடி ஒளியும் குரங்குகள் அஞ்சி ஒதுங்கும் சேடிப் பெண்கள் எல்லாம் அங்கு நடக்கும் அந்த நாடகத்துக்கு உயிர் ஊட்டுகின்றனர். இச்சிற்ப வடிவில் பல பகுதிகள் சிதைந்திருந்தாலும், அச்சிற்பச் செல்வம் காண்பவர் உள்ளத்தில் ஓர் அற்புதமான உள்ள எழுச்சியையே உருவாக்குகிறது. இச்சிற்ப வடிவின் அழகிலேயே மெய்ம்மறந்து நின்று விடாமல் பக்கங்களில் [உள்ள] படிகளில் ஏறி மேலே சென்று அங்கு லிங்க உருவில் உருவாகியிருக்கும் கைலாயநாதனை வணங்கலாம். மேலே சென்றதும் நாம் வந்து சேருவது மணி மண்டபம்தான். அம்மண்டபத்தைப் பதினாறு தூண்கள் தாங்குகின்றன. அதனை அடுத்த மேற்புறத்திலேதான் கைலாயநாதர் இருக்கும் கருவறை இருக்கிறது. அங்குதான் லிங்க உருவில் கைலாயநாதர் இருக்கிறார். அவர் தஞ்சைப் பெருவுடையாரைப் போல் பெரிய ஆகிருதி படைத்தவர் அல்ல. ஏழு எட்டடி உயரமே உள்ளவர். இங்கு ஓர் அதிசயம் என்னவென்றால் நம் நாட்டுக் கோயில்களில் இருப்பதைப் போல் ஆவுடையார் வட்டவடிவமாக இல்லை. நல்ல சதுர வடிவிலே ஆவுடையார் அமைந்திருக்கிறது. பொங்குழல் உருவமாக இருப்பவனையே லிங்கோத்பவன் என்று குறிப்பிடத் தெரிந்தவர் தமிழர். அவர்கள் வடித்த அருவ உருவ வழிபாடே லிங்கத் திருஉருவம் என்னும் சித்தாந்தம், இந்த எல்லோராக் கைலாயரைக் கண்டால் உறுதிப்படும். கர்ப்பக்கிருகத்துக்கு மேலே விமானம். அது பூமி மட்டத்திலிருந்து 96 அடி உயரம் இருக்கிறது. அதையும் அங்குள்ள சிற்ப வடிவங்களையும் காண வகை செய்து ஒரு சிறிய பிராகாரமே அமைத்திருக்கிறார்கள். இக்கைலாய நாதருக்கு எதிரில் மணிமண்டபத்துக்கு மேல்புறம் நந்தி மண்டபம். அங்கு நல்ல காத்திரமான நந்தி. அங்கு சென்றும் அந்த மண்டபத்தின் தென்புற வாயில் வழியாக, ஒரு மண்டபத்தின் விதானத்துக்கு வந்தால், அங்கிருந்து கைலாய நாதர் கோயிலின் முழுத் தோற்றத்தையும் காணலாம். புகைப்படம் எடுக்க வசதியான இடமும் அதுதான். அதன் பின் மணிமண்டபத்துக்குத் திரும்பி வந்து அங்கிருந்து வடபுறமாக இறங்கும் படிக்கட்டு வழியாக இறங்கி வெளிப் பிராகாரத்துக்கும் வெளியே அமைந்திருக்கும் மண்டப வாயிலில் நுழைந்து நடந்தால் எண்ணற்ற சிற்ப வடிவங்களைக் காணலாம். இங்கு நிற்கும் போது தான், நம் தலைக்கு மேலே கவிந்திருக்கும் கற்பாறையைப் பார்க்கும் போதுதான், இது குடைவரை என்று ஸ்பஷ்டமாகத் தெரியும். மற்றப்படி கைலாச நாதர் கோயில் ஏதோ கல்லாலான கட்டடம் போலவேதான் இருக்கும்.



குடைவரைச் சிற்பங்கள்

இந்த மண்டபங்களில்தான் அர்த்தநாரி, கங்காதரர், திருபுராந்தகர், முதலிய சிவமூர்த்தங்களும், மகாவிஷ்ணுவின் பல கோலங்களும், ஹரியும், ஹரனும் இணைந்து நிற்கும் கோலத்தையும் காணலாம். இவர்களைக் கண்டு விட்டுத் தென்புறமாக வந்தால் ஓர் அந்தப்புரத்துக்குள்ளேயே வந்ததுபோலாகும். அங்குதான் ராஷ்டிரகூட மன்னனை கிருஷ்ணனது பட்டத்தரசியும் அவளது சேடிகளும் நிற்கிறார்கள்.

இந்தக் கோயிலை, குடைவரையை உருவாக்கிய மன்னன் இவன்தான் ராஷ்டிரகூட மன்னர்களில் முதலாம் கிருஷ்ணன் என்பவன் என்கிறது சரித்திரம். பட்டடக்கல் விருபாக்ஷர் கோயிலைப்போலவே இக்குடைவரைக் கோயிலும் அமைக்கப்பட்டது என்றும் கூறுகிறார்கள். இவன் கி.பி. 757 முதல் 783 வரை ஆண்டிருக்கிறான். இவை யெல்லாம் சரியான தகவல்கள் தானா என்று திட்டமாக உரைக்கக் கல்வெட்டுகள் ஒன்றும் இல்லை. இருக்கிற கல்லை எல்லாம் வெட்டி எடுக்கத்தான் நேரம் இருந்ததே ஒழிய, அவன் வரலாற்றைக் கல்லிலே எழுதி வைக்க நேரம் இருக்கவில்லை போலும்!



இருளைக் கிழித்துக் கொண்டு ஓடுகிறது ரயில். வெளியே மார்கழி மாதத்துப் பனி மழையாகக் கொட்டிக் கொண்டிருக்கிறது. என்னதான் ஜன்னல் கதவுகளெல்லாம் மூடப்பட்டிருந்தாலும், அவற்றின் இடைவெளி வழியே சீறி வரும் ஊதக் காற்று ஊசியாக உடலைக் குத்துகிறது.

அந்தப் பெட்டியில் கூட்டம் அதிகந்தான். மூன்றாவது வகுப்புப் பெட்டிகளில் என்றைக்குத்தான் கூட்டம் இல்லை? அதிலும் அது 'அன்ரிசர்வ்டு' பெட்டி. கூட்ஸ் வாகன்களில் பொதி மூட்டைகளைத் திணித்தாற்போல், அங்கே ஜனங்கள் திணிக்கப்பட்டிருக்கின்றனர். கூட்ஸ் வாகன்களிலாவது மூட்டைகள் ஓர் ஒழுங்காக அடுக்கப்பட்டிருக்கும். இங்கே அதுகூட இல்லை. ஆணும், பெண்ணும், குஞ்சும் குளுவானும் கால்மாடு தலைமாடாகக் கிடக்கின்றனர். அந்த நெருக்கம் சிலருக்குக் குளிருக்கு அடக்கமாக இருக்கிறது போலும்; உட்கார்ந்தவாறும், நின்றவாறும் சாய்ந்தவாறும், குனிந்தவாறும் அவர்கள் தூங்கிக் கொண்டிருக்கின்றனர்.

வண்டி அநேகமாக அமைதியாகத்தான் இருக்கிறது. சக்கரங்கள் தண்டவாள இடைவெளிகளைத் தாண்டும்போது எழுகிற 'கடக்-கடக்' என்ற ஒலி, சங்கீதக் கச்சேரி ஒன்றில் வெறும் சுருதியும் தாளமும் மட்டும் ஒலி எழுப்புவது போன்ற பிரமையை ஏற்படுத்துகிறது.

சிதம்பரம் அந்த ஜன மூட்டைகளில் ஒருவனாகப் பிரயாணம் செய்து கொண்டிருக்-

கிறான். மற்றவர்களைவிட அவனுக்குச் சிறிது சௌகரியமாகவே இடம் கிடைத்திருக்கிறது. ஜன்னலோரத்து இடம். தலையைப் பின்னால் சாய்த்துக் கொள்ளப் பலகை. காலை வசதியாக நீட்டிக் கொள்ளக் கீழே ஒரு பெட்டி. தூங்குவதென்றால் அவன் மற்றவர்களை விட வசதியாகத் தூங்கியிருக்கலாம். ஆனால் சிதம்பரத்துக்குத் தூக்கம் வரவில்லை. அவனுடைய மனம் ஏதேதோ பழைய நினைவுகளில் மிதந்து கொண்டிருக்கிறது.

''அத்தான்!'' யாரோ அவன் காதருகில் இரகசியமாகக் கூப்பிடுவதுபோல் இருக்கிறது. சிதம்பரம் திடுக்கிட்டுக் குரல் வந்த திசையைத் திரும்பிப் பார்க்கிறான். அவனுக்குப் பின்புறமாக இருக்கும் 'ஸீட்'டிலிருந்து வந்த அந்த இளம் பெண் குரல் மீண்டும் நளினமாகக் கேட்கிறது. ''தூங்கிட்டீங்களா?'' அவன் மெதுவாக 'ஸீட்' பலகையைத் தட்டுகிறான்.

அவர்கள் பேச்சைக் கேட்டுக் கொண்டிருந்த சிதம்பரமோ, பலகையால் மறைக்கப்பட்ட அடுத்த பகுதியில் இருக்கிறான். ஆதலால், அவள் தைரியமாக, ஆனால் இன்னும் ரகசியமான குரலிலே பேசத் தொடங்குகிறாள்.

''பொழுது விடியப் பட்டணத்துக்குப் போயிடுமா ரயிலு?''

''ஆமாம்.''

''பிறகு?''

''பட்டணத்தில் முதலில் ஒரு வீடு வாசல் பார்த்து இருந்துக்கிடுவோம். பிறகு நான் ஒரு வேலையைத் தேடிக்கிட்டேன்னு கவலையில்லாமல் ராசா ராணிக் கணக்கில் சந்தோஷமாக இருந்துக்கிட்டிருக்கலாம்.''




# பச்சோந்தி

## மாயாவி

தன் நினைவின் எதிரொலி போல் வந்த அந்தக் குரல் தன்னைத்தான் அழைக்கிறதோ என்று சிதம்பரத்தை ஒரு கணம் மயங்கச் செய்கிறது. ஆனால் அந்த மயக்கம் நீடிக்கவில்லை. அது நிச்சயம் மல்லியின் குரல் அல்ல; அல்லவே அல்ல.

இருந்தாலும் இரண்டு வரிசை பெஞ்சுகளையும் தடுத்துக் கொண்டு, நடுவே அமைந்திருந்த பலகைகளின் இடைவெளி வழியாக அவன் தலையைத் திருப்பிப் பார்க்கிறான். கிராமத்துச் சிம்னி விளக்கின் ஒளிக்குப் பழகியிருந்ததால், அவனுடைய கண்கள் அந்தப் பெட்டியின் மங்கிய மின்சார ஒளியில் குரல் எழுப்பிய இளம் பெண்ணைக் காண்கின்றன. இப்போது அவள் தன் அருகே சாய்ந்தவாறு தூங்கிக் கொண்டிருக்கும் இளைஞனைத் தொட்டு எழுப்புகிறாள்.

அந்த இளைஞன் திடுக்கிட்டு விழிக்கிறான். ''என்ன ரஞ்சி?'' என்று பதறுகிறான்.

''ஸ்.... மெதுவாகப் பேசுங்க'' என்று கெகிகத்த அந்தப் பெண், தங்கள் பேச்சை யாராவது கவனிக்கிறார்களா என்று சுற்று முற்றும் பார்க்கிறாள். அந்தப் பகுதியில் எல்லாருமே உறங்கிக் கொண்டிருக்கின்றனர்.



''அது சரிதான் அத்தான். ஆனால் ஒங்க வீட்டுக்காரங்க உங்களைத் தேடிக்கிட்டுப் பட்டணத்துக்கு வந்துட்டாங்கன்னு....?

''அட! என்ன இப்படிப் பயப்படறே ரஞ்சி? எங்க வீட்டிலே யாரு இம்மாந் தொலைவு தேடிக்கிட்டு வரப் போகிறாங்க?''

''அப்படி நினைச்சிடாதீங்க, அத்தான்! கொஞ்சமா, நஞ்சமா? பத்துக் காணி நிலம்; தோப்பு — துரவு. அத்தனையும் கொண்டிட்டு வர இருந்தாள் அந்தப் பட்டாமணியம் மகள் பார்வதி. அவளைக் கட்டிக்கிட மாட்டேன்னு இந்தப் பரதேசி மாமன் மகள் பின்னால் ஓடி வந்திருக்கிறீங்க....''

அவர்கள் பேச்சைச் சிதம்பரத்தால் தொடர்ந்து கேட்க முடியவில்லை. நினைவு அவனைப் பின்னோக்கி இழுத்துச் சென்று விடுகிறது. ஆம், இரண்டு வருஷங்களுக்குமுன்

னால் ஒரு நாள் அவனும் இப்படித்தான் செய்ய நினைத்தான்.

இரண்டு வருஷங்களுக்கு முந்தைய நாள். சிதம்பரம் கழனியில் வேலை செய்து கொண்டிருக்கிறான். ஆனால் கைகள் யந்திர கதியில் மண்வெட்டியைப் பிடித்து நிலத்தை வெட்டிக் கொண்டிருக்கின்றனவேயன்றி, மனம் வேலையில் லயிக்கவில்லை. கண்ணுக்கு எட்டிய தூரம் வரையில் பரந்திருந்த வயல்வெளியில் குறிப்பிட்ட ஒரு திசையை அடிக்கடி அவன் பார்வை நாடுகிறது.

அப்போது உச்சி நேரம். கழனிகளில் வேலை செய்யும் ஆண்களுக்கு வீட்டுப் பெண்டிர் கஞ்சி கொண்டு வரும் சமயம். பச்சை, ஊதா, நீலம் ஆகிய நிறங்களில் சேலைகள் அணிந்து பெண்கள் தலையில் கஞ்சிக் கலயத்துடன் கைவீசி நடந்து வருகின்றனர். ஆனால் சிதம்பரம் யாரை எதிர்பார்த்திருந்தானோ அந்த மல்லியைக் காணவில்லை.

அவனுக்குக் கஞ்சி கொண்டு வந்து கொடுக்கக் கூடியவர்கள் யாரும் கிடையாது. பெற்றோரோ, உடன்பிறந்தவர்களோ இல்லாத தனிக்கட்டை அவன். தன் மாமன் மகள் மல்லி விரைவில் தன் மனையை அலங்கரிக்க வந்து விடுவாள் என்று அவன் நாட்களை எண்ணிக் காத்திருக்கும்போதுதான் அன்று அந்தத் திடுக்கிடும் செய்தி காதில் விழுந்தது.

நான்கு நாட்களுக்கு முன் வழக்கம் போல் காலை எட்டு மணிக்குத் தோளில் மண்வெட்டியும், தலையில் கஞ்சிக் கலயமுமாக அவன் கழனிக்கு வந்து கொண்டிருக்கிறான். நாட்டாண்மைக்காரரின் நாலு ஏக்கர் நிலத்தைக் குத்தகைக்கு எடுத்திருக்கிறான் சிதம்பரம். போன வருஷம் வரையில் அவன் மூன்று ஏக்கர் நிலமே குத்தகைப் பயிர் செய்து வந்தான். இந்த வருஷம்கூட ஓர் ஏக்கர் குத்தகைக்குக் கேட்ட போது நாட்டாண்மைக் கிழவர் நல்லமுத்து, "என்னலே! ஆசை பெரிசாகுதோ? ஒண்டிக் கட்டை. இந்த மூணு ஏக்கராவை ஒழுங்காகப் பயிர் செய்யறதே நீ பட்டபாடு, நான் பட்டபாடா இருக்குது. கூட ஒரு ஏக்கர் குத்தகைக்கு எடுத்து என்னலே புரட்டிப் போடப் போறே?" என்றார்!

"ஒண்டி ஆளுன்னு போதுமுங்க. ஆனால் இந்த வருஷம் என் மாமன் மகளுக்குப் பரிசம் போட்டிடலாம்னு இருக்கேன்!" அவன் வெட்கச் சிரிப்புடன் சொன்னான்.

"அடி சக்கை! கலியாணம் கட்டிக்கிடப் போறியாலே! அதைச் சொல்லாமல் நாலு ஏக்கரா கொடுங்க அஞ்சு ஏக்கரா கொடுங்கன்னா யாரு யாருக்கு விளங்குது? செய்யுலே. நல்லா செய். ஆனா அந்தப் பொண்ணு பட்டணத்துக் கரைப் பொண்ணுச்சேலே; வயக்கரையிலே வசங்கி வேலை செய்யுமா?"

"என்னங்க இப்படிப் பேசறீங்க? பட்டணத்துக் கரைப்பொண்ணுன்னா என்ன? அதன் அப்பன், என் மாமனும் அங்கே குத்தகை நிலத்தைத்தானே பயிரிட்டுக்கிட்டிருக்காரு?"

இப்படியாக அவன் மல்லியின் வருகைக்காக, அவன் வயிற்றுப்பாட்டுக்காக முன்கூட்டி வகைகூடச் செய்து விடுகிறான். இப்போது என்னடாவென்றால்....?

சிதம்பரம் ஊர் எல்லையில் இருந்த தோப்பின் வழியே கழனிக்கு நடந்து கொண்டிருந்த போது எதிரே வருகிறார் நாட்டாண்மை நல்லமுத்து. "வணக்கமுங்க" என்கிறான் சிதம்பரம்.

"சிதம்பரமாடா? ஏண்டாலே, எங்கிட்டே சண்டை போட்டு மூணு ஏக்கராவுக்கு நாலு ஏக்கரா நிலத்தை வாங்கிக்கிட்டே. ஆனா ஒன் மாமன் அவன் மகளுக்கு வேற இடத்தில் மருமகன் பார்த்துக்கிட்டிருக்கானுவளாலே!"

"யாரைச் சொல்றீங்க பாட்டையா?" என்று குழப்பத்துடன் வினவுகிறான் சிதம்பரம்.

"ஒன் மாமன் விரிஞ்சிபுரம் அருணாசலத்தைத்தான்லே சொல்லுறேன்."

"சும்மா கேலிபண்ணுறீங்க பாட்டையா."

"கேலி இல்லேடா. நேத்து விரிஞ்சிபுரம் கச்சேரியில் ஒரு வாய்தா. அதுக்காகப் போயிருந்தேன். அங்கே பேசிக்கிட்டாங்க. சிங்கப்பூரிலேயிருந்து யாரோ சிங்காரம்னு ஒரு பய வந்திருக்கிறானாம். அவனைத் தன் மகளுக்குக் கட்டி வைச்சிடலாம்னு பார்க்கிறானாம் உன் மாமன்."

"அவரு பார்க் கட்டுமே. ஆனா மல்லி ஒரு போதும் ஒத்துக்கிடாதுங்க. அதுக்கு என் மேலேதான் பிரியம்."

"என்னமோலே, காதில் விழுந்திச்சு, சொல்லிட்டேன். காரியம் கையிஞ்சிப் போகிறதுக்கு முன்னாடி, சட்டுனு போயி பரிசத்தைப் போட்டுடு" என்று கூறி விட்டுச் செல்கிறார் கிழவர்.

அன்று பிற்பகலிலே சிதம்பரம் பரிசப் பணத்தை இடுப்பில் வரிந்து கட்டிக் கொண்டு விரிஞ்சிபுரத்துக்கு நடையைக் கட்டுகிறான். மாமன் அருணாசலம் அன்று கழனிக்குப் போகவில்லை. வீட்டில்தான் இருக்கிறார்.

"யாரு? சிதம்பரமா? சுகமா இருக்கியா? எங்கே வந்தே இந்த வெயிலோட?"

"மல்லிக்குப் பரிசம் போட வந்தேன் மாமா. ஒங்க வசதி போல் இந்த மாசமோ, அடுத்த மாசமோ கலியாணத்தை வைச்சுக் கிடலாம்."

"என்னடா இது திடுதிப்பின்னு? அது பெரிய மனுசியாகி வருஷம் மூணாகுது. மூச்சுப் பேச்சுக்காட்டாமல் இருந்துட்டு, இன்னிக்குத் திடும்னு வந்து பிடியுங்க பரிசத்தைன்னு நீயே?"

"போடற பரிசம் கனிசமா இருக்கணும் என்கிற நினைப்பு மாமா. மூணு வருசமா வயித்தை வாயைக் கட்டி முந்நூறு ரூபா சேர்த்துக் கொண்டாந்திருக்கிறேன்."

"எத்தினி? முந்நூறு?"

"ஏன்? நீங்க இத்தினி எதிர்பார்க்கலியோ?"

"ஆமாம், ஆமாம்; முந்நூறு எதிர்பார்க்கலேதான். என் மகளை அத்தினி சல்லிசா கட்டிக் கொடுக்க நான் என்ன மடையனா?"

அவர் பேச்சில் எகத்தாளம் கொந்தளித்தது.

"பின்னே எத்தினி எதிர்பார்க்கிறீங்க மாமா?" என்று அவன் பேரம் பண்ணத்தான் எண்ணுகிறான். அதற்குள் அருணாசலமே முந்திக் கொண்டு விடுகிறார். "ஆறு நூறாம ஆயிரத்தோட சிங்கப்பூரான் காத்துக் கிட்டிருக்கிறான். ஒன்னை ஒரு வார்த்தை கேட்டுக்கிட்டு முடிவு சொல்றேன்னு சொல்லி யிருக்கிறேன்."

# ஆரோக்கியத்தை வளருங்கள்





WCRY-10-TAM

ஆண்டு முழுவதும்
ஆரோக்கியத்துடனிருக்க,

## குடும்பத்தினர் அனைவரும் அருந்துவது

## வாட்டர்பரீஸ் காம்பவுண்ட் | சிவப்பு லேபில்




வெறும் மருந்துமட்டுமல்ல, நம்பிக்கைக்குப பாத்திரமான டானிக்குமாகும்!

- வருடம் முழுவதும் முதியோர், சிறுவர் யாவரும் சுவைத்துப் பருகுவதற்கு உகந்த இனிய டானிக் வாட்டர்பரீஸ்.
- ரத்தத்தைச் செழிக்கச் செய்து, நரம்புகளுக்கு வலுவூட்டுகிறது.
- பசியின்மைக் கோளாறுகளையும், உணவுக் குறைகளையும் சரிசெய்கிறது வாட்டர்பரீஸ். பிணியாறும் பருவத்திற்குப் பிரத்தியேகமாக உரித்தானது.
- பொது பலவீனம், ஊட்டக் குறைவு, சோர்வு, உணவிலே உலோகப் பொருள் குறைபாடு, மிதமிஞ்சிய உடல், உள்ளத் தளர்ச்சிகள் யாவிற்கும் உகந்ததெனச் சிபாரிசு செய்யப்படுகிறது வாட்டர்பரீஸ்.



வார்னர்-லாம்பர்ட் பார்மஸூடிகல் கம்பெனி (வரையறுக்கப்பட்டபொறுப்புடன யு.எஸ் ஏவில் இணைக்கப்பெற்றது)

"ஆயிரமா? இது என்ன மாமா, இப்படி வாய் கூசாமல் கேக்கிறீங்க? நம்ம சீமையிலே, நம்ம குடியானவங்களிலே எவன் முறைப் பெண்ணுக்குப் பரிசம் போட்டிருக்கிறான்...?"

"போட ஆளில்லே. வந்தது போதும்னு கட்டிக் கொடுத்தாங்க. ஆனால் எங்க மல்லிக்கு ஆளு காத்திருக்குதே."

"அதுக்காக என் முறைப் பொண்ணை அவனுக்குக் கட்டிக் கொடுக்கப் போறீங்களா?"

"ஏய்! காலம் தெரியாமல் பேசாதேடா. முறை பார்த்த காலத்தில் ரூபாய்க்கு மூணு கலம் நெல்லு வித்தது. இன்னைக்கு நான் ரூபாயைக் கொடுத்து மூணு கலம் நெல்லு விதம் அளந்து போடுன்னு போடுவியாடா?"

"அதெப்படி?"

"பாத்துக்கிட்டியா? இதுவேதான் என் மகள் விசயமும். இத பாரு. சிங்கப்பூரான் துடிச்சிக்கிட்டு நிக்கிறான். ஆனா ஒன் முறை உரிமையை நான் இல்லேன்னு ஆக்கப் பிரியப்படலே. போயி, எங்கேயாச்சும் பாக்கிப் பணத்தைப் புரட்டிக்கிட்டு வா. மல்லியைக் கட்டிட்டுப் போயி தாலியைப் போடு. இல்லேன்னு அவளை மறந்திட்டு ஒன் நிலைமைக்கு ஏத்த இடத்தைப் பார்த்துக்கிடு."

பாக்கி எழுநூறைப் புரட்டுவது ஒன்றும் சிதம்பரத்துக்குப் பெரிய காரியமில்லே. அவன் இந்த மூன்று ஆண்டுகளில் சேகரித்தது இந்த முந்நூறு மட்டும் இல்லே. இன்னொரு முந்நூறும் உண்டு. மாமனின் பண ஆசை அவனுக்குத் தெரியும். அதனால்தான் குறைத்தே சொன்னான். குறைத்தே கொண்டு வந்திருக்கிறான். கையிலிருக்கும் அறுநூறு போக நானூறை நோட்டு எழுதிக் கொடுத்து நாட்டாண்மைப் பாட்டையாவிடம் சுலபமாக வாங்கி விடலாம். ஆனால் அவனுக்குத் தன் மாமனின் பணப் பேராசையில் மண்ணடிக்க வேண்டுமென்ற வெறி ஏற்பட்டு விடுகிறது. மல்லி தன் மீது கொண்டிருந்த காதலை அவன் நன்கு அறிவான்.

இந்த மூன்று வருஷ காலமாக அவர்கள் அயல் ஊர்களில் இருந்தாலும் வாரத்துக்கு ஓரிரு நாட்களாவது சந்தித்து அளவளாமல் இருந்ததில்லே.

'இதெல்லாம் இந்த மாமனுக்கு எப்படித் தெரியும்? இவர் என்னவோ இவருடைய முடிவுதான் முடிவுன்னு நினைச்சிக்கிட்டிருக்கிறாரு. மல்லிகிட்ட பேச்சை எடுக்கிற போதில்ல பல்லே உடைச்சிக்கிட்டு நிக்கப் போறாரு?' என்று அவன் தெம்புடன் நினைத்துக் கொள்கிறான். ஆனாலும், உடனே மல்லியைக் கண்டு இவருடைய மன நிலையைக் கூறி எச்சரித்துவிட வேண்டுமென்று அவனுக்குத் தோன்றுகிறது. அதே சமயம் வீரியம் பேசிக் காரியத்தைக் கெடுத்துக் கொள்ளவும் அவனுக்குத் துணிவு வரவில்லே.

"சரி, மாமா! எப்படியாச்சும் பார்த்து ஆயிரத்தையும் சேர்த்துக் கொண்டிட்டு வரப் பார்க்கிறேன்" என்று சொல்லிவிட்டு வெளியே வருகிறான். மல்லியைச் சந்திக்கக் கழனிக்குச் செல்கிறான்.

இதற்குள் பொழுது சாய்ந்து விடுகிறது. நடு வழியிலே மல்லி எதிர்ப்பட்டுவிடுகிறாள். ஆனால் அவள்கூட நிறைய குடியானவப்

> "நீ சினிமா பார்க்க ஒரு ரூபாய் என்னைக் கடன் கொடுக்கச் சொல்லறே. ஆனால் நானே தனியா சினிமா போகிற பழக்கமில்லே! அதனால் இரண்டு ரூபாய் கடன் தருகிறேன்! என்னையும் உன்னோடு அழைச்சுண்டு போய்விடு!"



பெண்கள் இருக்கின்றனர். எனவே அவனால் அவளைத் தனிமைப்படுத்தி விஷயத்தை விண்டுரைக்க முடியவில்லே. மறு நாள் பகலில் தன் ஊருக்கு வருமாறு சாடைமாடையாகத் தெரிவித்துவிட்டுத் திரும்புகிறான். இப்போது அவளை எதிர்பார்த்துத்தான் விரிஞ்சிபுரம் பாதையில் பார்வையை ஓட்டிக் கொண்டு காத்திருக்கிறான்.

உச்சியிலிருந்த சூரியன் கொஞ்சம்கொஞ்சமாக மேற்கே சாயத் தொடங்கினான். அவன் சாயச் சாய இங்கே சிதம்பரத்தின் மனமும் சாயத் தொடங்குகிறது. "ஏன் மல்லியை இன்னும் காணோம்? ஏன் காணோம்?"

கேள்வி சுழன்று சுழன்று குழப்பமாக மாறி, கலக்கமாக உருவெடுக்கும்போது பொழுது இருட்டி விடுகிறது. மனத்தின் நிம்மதியையும் மகிழ்ச்சியையும் கழனியிலே புதைத்துவிட்டு வீடு திரும்புகிறான் சிதம்பரம்.

மூன்று நாட்களுக்கு மேல் சிதம்பரத்தால் பொறுக்க முடியவில்லே. அன்று பகலில் விரிஞ்சிபுரத்துக்குக் கால்கள் அவனை இழுத்துச் செல்கின்றன.

கழனியில் பிற பெண்களுடன் கொத்து வேலை செய்து கொண்டிருந்த மல்லி அவன் தலையைக் கண்டதும் தனிப்பட்டு நடக்கிறாள். வழக்கமாகச் சந்திக்கும் தோப்புக்கு வரப் போகிறாளென்று சிதம்பரம் அங்கே செல்கிறான். பாதி வழியில் திரும்பி நின்று சிதம்பரம் கண்ணோட்டம் விட்டபோது அவள் வீட்டுக்குச் செல்லும் வழியில் நடப்பது தெரிகிறது: திரும்பி ஓடுகிறான்.

வழியில் விரிஞ்சிபுரம் ஆறு. அதன் படுகையில் அவளை எட்டிப் பிடித்து விடுகிறான்.

"என்ன மல்லி இது?"

"ஒங்க முகத்தைப் பார்க்கவே எனக்கு வெக்கமா இருக்குதுங்க."

"ஏன்? எதுக்காக மல்லி?"

"அப்பாரு நீங்க வந்திட்டுப் போன அன்னைக்கு ராவே சிங்கப்பூராருகிட்டே பரிசப் பணத்தை வாங்கிட்டாருங்க."

"ஆ! என்ன?"

"ஆமாமுங்க. இனிமே ஒங்களைப் பார்த்துப் பேசினால் வெட்டிப் போட்டிடுவேன்னு என்னைக் கூப்பிட்டுச் சொல்லிட்டாருங்க."

"ஐயோ!... அப்படின்னு....?"

"நான் என்ன செய்யட்டும் சொல்லுங்க. அப்பாரு மனசுக்கு எதிரா நடந்து ஒங்களைக் கட்டிக்கிட்டா நம்பளைச் சும்மா விடுவாரா அவரு? விரிஞ்சிபுரத்து கேடிப் பயலுக அவரு விரலசைப்புக்கு ஆடறவங்களாச்சே!"

''அப்படியானும் ஒரு வேலை செய்யலாம் மல்லி. இப்படியே எங்கேயாச்சும் ஓடிப் போயிடுவோம்.''

''ஓடிப்போயி...?''

''கலியாணம் கட்டிக்கிட்டுச் சுகமாக இருப்போம்....''

''பிழைப்புக்கு வழி?''

''நான் என்ன கையாலாகாத பயல்னு நினைச்சிட்டியா மல்லி? இல்லே நீதான் வயல் வெட்டியிலே பாடுபடத் தெரியாதவளா? இங்கே உழைக்கிற உழைப்பைப் போகிற இடத்திலே உழைப்போம்.''

''அது சரிதாங்க; ஆனா....ம்?'' அவள் 'சஸ்பென்ஸ்' போடுகிறாள்.

''ஆனா என்ன மல்லி?''

''நீ கழனியிலே பாடுபட்டுக் கருகவேண்டாம். இப்படிப் பட்டிக்காட்டுப் பொண்ணா இருக்கவும் வேண்டாம். ஒன்னைப் பட்டணத்துக்குக் கட்டிக்கிட்டுப் போயி ராசாத்தி ஒக்காத்தி வச்சுச் சோறு போடறேன்னு, அவரு, சிங்கப்பூராரு சொல்லுறாருங்களே.''

''உனக்கு அப்படி வாழணும்னு ஆசையா இருக்குதா மல்லி?''

''எந்தப் பொண்ணுதான் பட்டணக்கரையிலே ஒக்காந்து தின்னுக்கிட்டிருக்கிறதை வேண்டாம்னு சொல்லுவா?''

''ஐயோ மல்லி!'' என்று சிதம்பரம் அலறுகிறான். ''ஒங்கப்பாரு கேட்ட ஆயிரத்தையும் வேணும்னா நானேயே கொண்டு வந்து கொடுத்திடறேன் மல்லி. சிங்கப்பூரான் பணத்தை அவன் முகத்திலே எறிஞ்சுவிடச் சொல்லு. என் ஆசைகளில் மண்ணைப் போட்டுடாதே மல்லி!''

''அப்பாருக்கு என்ன? அவருக்கு யாரு கிட்டே இருந்து பணம் வந்தாலும் திருப்தி தான். ஆனா எனக்கு? ஒங்களைக் கட்டிக் கிட்டா பட்டணக் கரையில் வாழ முடியுமா? ஒக்காந்து தின்ன முடியுமா?''

''அப்படின்னா?'' அவன் ஏங்குகிறான்.

''என்னை மறந்திடுங்க. நான் வரேன்.'' அவள் அவனைத் திரும்பிப் பார்க்காமலே நடக்கிறாள்.

சிதம்பரம் சிலையாகி நிற்கிறான். சில நாட்களுக்கு முன் நாட்டாண்மை நல்லமுத்து கூறிய அனுபவ மொழிகள் அவன் காதுகளில் ரீங்காரம் செய்கின்றன — ''அந்தப் பொண்ணு பட்டணத்துக்கரைப் பொண்ணுச்சேலே, வயக்கரையிலே வசங்கி வேலை செய்யுமா?''

நாட்கள் தேய்கின்றன; மாதங்கள் மறைகின்றன. வாழ்வில் ஏற்பட்ட இந்த எதிர்பாராத ஏமாற்றத்தால் நடைப்பிணமாக உலவுகிறான் சிதம்பரம். இவ்வளவுக்கும் பிறகும் மல்லியை அவனால் மறந்துவிட முடியவில்லை. அவள் சிங்கப்பூரானை மணந்து திருச்சிக்குப் போய்விட்டாள் என்ற செதிகூட வந்து விடுகிறது. ஆனால் அவன் உள்ளத்திலிருந்து அவள் அகலவில்லை.

''கழுதை போனாப் போகுதுடா, கலைக்குதவாத பொண்ணு. குடும்பப் பாங்கா ஒண்ணைப் பார்த்துக் கட்டிக்கிடு. நாலு ஏக்கரா நிலத்தில் நீயே ஒண்டியாய்ப் பாடுபடறதைக் காணக் கண்ணீர் வருகிறது'' என்கிறார் நாட்டாண்மைப் பாட்டையா.

''வேண்டாமுங்க'' என்று முனகுகிறான் அவன்.

''ஏன்லே?''

''நான் பச்சோந்தி இல்லீங்க, இடத்துக்குத் தக்கன நிறத்தை மாத்திக்கிட. அவ பச்சோந்தியா மாறிட்டாலும் நான் மாற மாட்டேனுங்க. என் மனசில் அவ இருக்கிறா. அதுவே போதும் எனக்கு'' என்று அவன் முடிவாகச் சொல்லி விடுகிறான்.

கல்லினுள் தேரையாக மல்லியின் நினைவை மனத்தினுள்ளே சமாதி செய்துவிட்டுச் சிதம்பரம் உழைப்பில் தன்னை ஈடுபடுத்திக் கொள்கிறான். இரவும் பகலும் கழனியே கதி என்று காத்துக் கிடக்கிறான்.

அந்த வருஷம் சிதம்பரம் திடீரென்று நோய்வாய்ப் படுகிறான். ஓயாத உழைப்பு அவனுடைய உடல் நிலையைப் பாதித்துவிடுகிறது. அதோடு கவனிக்க ஆளில்லாமல் மிகவும் திண்டாடுகிறான். அண்டை அயலார் இயன்ற அளவு உதவுகின்றனர். கிராமத்து வைத்தியம்தான். ஆனால் நோய் அதற்குச் சுலபத்தில் மசியவில்லை. ஒருநாள் அவன் நிலை மிகவும் மோசமாகி விடுகிறது.

நாட்டாண்மைக் கிழவருக்கு ஆள் அனுப்புகிறார்கள் பக்கத்து வீட்டுக்காரர்கள். அவர் வந்து பார்க்கிறார். ''கவனிப்புப் போதாது. சொன்னால் கேட்டாத்தானே? ஒன்னை மதிக்காமல் போனவளை நினைச்சுக்கிட்டு, இந்த மாதிரி ஆபத்துச் சமயத்திலே ஒரு சூடு வச்சுக் கொடுக்க ஆளில்லாமல், ஆக்கிக்கிட்டிருக்கிறயே!'' என்று கடிந்துகொள்கிறார். அதோடு ''நோய் நொடி மருந்துக்கும் போகலேன்னு சாமிக்கு நேர்ச்சை பண்ணிக்கிடணும்'' என்று சொல்லிச் சிதம்பரத்திடமிருந்து ஒரு ரூபாயை வாங்கி மஞ்சள் துணியில் முடிந்து அவன் கையில் கொடுக்கிறார். ''சொல்லுலே! 'ஏழுமலையானே! என் நோய் தீரட்டும். உனக்கு முடி எறக்குறே'ன்னு வேண்டிக்கிடுலே'' என்கிறார். இயந்திரம் போல் அந்த வேண்டுதலைச் செய்கிறான் சிதம்பரம்.

உலகில் இன்னும் தெய்வ நம்பிக்கை இருப்பதால் அவனுடைய நோய் குணமாகிவிடுகிறது. தனக்கு உயிர் கொடுத்த ஏழுமலையானுக்கு உடனடியாகக் காணிக்கை செலுத்திவிட விரும்புகிறான் அவன். நாட்டாண்மைக் கிழவரிடம் வழி கேட்டுக்கொண்டு ரயிலேறுகிறான். கல்லினுள் தேரையாக அடக்கி வைத்திருந்த மல்லியின் நினைவுகள், கல் வெடித்ததும் உயிருடன் குதித்து வெளிவரும் அத்தேரையைப் போல் இப்போது குதித்துக் கொண்டு வருகின்றன.

இரவு பதினொரு மணி. அப்போது. ரயில் திருச்சி சந்திப்பில் வந்து நிற்கிறது. உறங்கிக்கொண்டிருந்த பிரயாணிகள் விழித்தெழுகின்றனர். சிலர் மூட்டை முடிச்சுக்களுடன் அங்கே இறங்குகின்றனர். அவனுடைய நினைவு அலைகளிலே இப்போது ஒரு புதிய கோஷம் கிளம்புகிறது.

'திருச்சி! இங்கேதானே மல்லி சிங்கப்பூரானுடன் வாழ்ந்து வருகிறாள். இறங்கி ஒரு தடவை அவளைக் கண் குளிரப் பார்த்துவிட்டாவது வருவோமா?'

"ஆனால் திருச்சி பெரிய நகரமாயிற்றே! அவர்கள் வீட்டை எப்படிக் கண்டுபிடிப்பது?"

""போகம். நகண்டு ஒக்காருங்கையா. அந்தப் பொம்புள்ளே நிக்குது; பாவம்! ஒக்காந்துக்கிடட்டும்.""

யாரோ, அவன் அமர்ந்திருக்கிற பெஞ்சின் மறு கோடியிலிருந்து கூவுகிறார்கள்.

""போங்! ஒங்களைத்தான். சன்னலோரம் குந்தியிருக்கிறவுகளே!""

""என்னையா?"" சிதம்பரம் நிமிர்ந்து பார்க்கிறான். மறு கணம், ""மல்லி!"" என்று அவன் வாய் அலறுகிறது. தான் காண்பது கனவா நனவா என்று கண்ணைக் கசக்கிப் பார்க்கிறான்.

""அத்தான்!"" அவளுடைய எதிர்க் குரல் அது கனவல்ல என்று உணர்த்துகிறது.

""இப்படி வா மல்லி! இப்படி வந்து குந்து."" அவன் எழுந்து நின்று அவளுக்குத் தன் இடத்தை அளிக்கிறான். அவன் உருவகப் படுத்திக் கொண்டிருந்த செல்வச் செழிப்பில் மிதக்கும் மல்லியாக அவள் தென்படவில்லையே! ஏன்? ""எந்த ஊருக்கு மல்லி?"" தன் இடத்தில் வந்து அமர்ந்த அவளை எடை போட்டுக் கொண்டே கேட்கிறான்.

""பட்டணத்துக்கு!"" அவள் மென்று விழுங்கிவிட்டு, ""நீங்க?"" என்று கேட்கிறாள்.

""ஏழுமலையானுக்குக் காணிக்கை செலுத்தப் போகிறேன்.""

""தனியாகவா?"" வீட்டுல....?""

""அப்படி ஒருத்தி இனிமேல்தான் வரணும். ஆமாம் நீ பட்டணத்துக்கு எதுக்காகப் போறே?""

அவள் தன்னைச் சுற்றி ஒரு முறை நோக்குகிறாள். பிரயாணிகள் தங்கள் பேச்சைக் கவனிப்பதைக் கண்டு, ""சொல்கிறேன் பிறகு"" என்கிறாள்.

ரயில் திருச்சியிலிருந்து புறப்படுகிறது. திறந்திருந்த ஜன்னல் கதவுகளெல்லாம் மறுபடி மூடப்படுகின்றன. பிரயாணிகள் ஒவ்வொருவராகக் கண்ணயரத் தொடங்குகின்றனர். சாமான்கள் வைக்கும்பலகையின் சங்கிலியைப் பிடித்திருந்த கைகளில் முகத்தைச் சாய்த்து அவளைப் பார்க்கிறான் அவன். மனம் என்னவெல்லாமோ நினைத்து ஏங்குகிறது.

""மல்லி!"" அவன் மெதுவாகக் குரல் கொடுக்கிறான்.

அவள் தூங்கவில்லை போலும்; உடனே ""என்ன அத்தான்?"" என்று கேட்கிறாள்.

""எல்லாரும் உறங்கிட்டாங்க. சங்கதியைச் சொல்லு.""

""சொல்ல என்னங்க இருக்குது? அவரு எல்லாத்தையும் குடியிலும் வேறு கெட்ட சகவாசங்களிலும் கண்டபடி தொலைச்சிட்டாரு. நான் பாடுபட்டு அவரைக் காப்பாத்தணும்னு. அதுக்காகவா அவரைக் கட்டிக்கிட்டேன்? முடியாதுன்னுட்டேன். வீட்டை விட்டு வெளியே போன்னாரு. சரின்னு புறப்பட்டுட்டேன்.""

""அட பாவமே! பிறகு?""

""ரயிலிலிருந்து விழுந்து செத்துடலாம்னுதான் வந்தேன். ஆனா ஒங்களைக் கண்டுட்ட பிறகு மனசு தடுமாறுது.""

""நீ சாக வேண்டாம் மல்லி. அவன் காப்பாத்தாட்டி நான் காப்பாத்தறேன் ஒன்னை. ஆனா என் வீட்டுக்கு வந்தால் கழனியிலே பாடுபடணுமே!""

ராணுவ அதிகாரி (பயிற்சி அளிக்கையில்): இதை ஏதோ வேடிக்கையாக எடுத்துக் கொள்ளாதீர். அதோ மூந்நூறு கஜத்துக்கு அப்பால் ஒரு வீடு தெரிகிறதே அதிலே உன் ஜன்ம விரோதி இருக்கிறார்....



சிப்பாய் (நடுக்கத்துடன்): ஆ! அது எப்படி உங்களுக்குத் தெரிந்தது?

அதிகாரி (வியப்புடன்): அடடே, ஏன் இப்படி பயப்படுகிறாய்?

சிப்பாய்: அங்கே என் மாமியார் குடியிருக்கிறார். அவருக்குப் பயந்து தான் ராணுவத்திலே நான்சேர்ந்தேன்!

""கழனியிலே பாடுபடறது என்ன அத்தான். கழுத்தில் கல்லைக் கட்டிக்கிட்டுக் கசத்திலே குதிக்கச் சொன்னீங்கன்னாலும் குதிக்கிறேன். எனக்குப் புத்தி வந்திடுச்சு.""

""சரி, அப்ப பேசாம என்கூட வா. ஏழுமலையான் காணிக்கையைச் செலுத்திட்டு ஊருக்குத் திரும்பிப் போவோம்.""

அவள் மௌனமாகத் தலையசைக்கிறாள்.

சிறிது நேரம் இருவரும் அமைதியாக இருக்கின்றனர். பிறகு அவள், ""அத்தான்!"" என்று அழைக்கிறாள்.

""என்ன மல்லி?""

""ஆனா அவரு நான் போட்ட பரிசத்தைத் திருப்பிக் கொடுன்னு கேட்டா....?""

""பரிசத்தை ஏன் திருப்பிக்கொடுக்கணும்?""

""மறு தாலி போட்டுக்கிறவ முதல் பரிசப் பணத்தைத் திருப்பிக் கொடுக்கிறது நம் இனத்தில் வழமையாச்சே அத்தான்!""

""மறு தாலியா?"" சிதம்பரம் திகைத்தான்.

""ஆமாம்.""

""யாரு போடப் போறாங்க ஒனக்கு?""

""நீங்க போடப் போறதில்லே?""

""இல்லே"" என்கிறான் சிதம்பரம். அவன் உட் செவியில் அவளே அன்றொரு நாள் கூறிய வார்த்தைகள் எதிரொலிக்கின்றன. 'நான் பச்சோந்தி இல்லேங்க, இடத்துக்குத் தக்கன நிறத்தை மாத்திக்கிட.'

""அப்படியானா....?"" அவள் அவனை வியப்புடன் நோக்குகிறாள்.

""என் தங்கச்சியா கூட வரதானால் வா.""

""தங்கச்சியா? அத்தான்! நான் ஒங்க மல்லி இல்லையா?""

""இல்லே. என் மல்லி மனம் மாறாத, நிறம் மாறாத மல்லி. அவ என் நெஞ்சில் எப்போதும் இருக்கிறா. நீ பச்சோந்தி. என்னை விட வசதிக்காரன் கிடைச்சதும் அவன் கிட்டத் தாவினே. இப்போ உன் கனவுகள் கானலானதும் மறுபடியும் நிறம் மாறி என்னோட ஒண்டப் பாக்கிறே. ஆனால் நான் பச்சோந்தி இல்லே. நான் அப்படி இடத்துக்குத் தக்கன நிறம் மாற மாட்டேன்!""

அவள் பதில் பேச வகையின்றி விழிக்கிறாள். ரயில் அவன் உள்ளத்தில் ஓடும் எண்ணங்களைச் சட்டை செய்யாமல் ஓடிக்கொண்டிருக்கிறது.

# பொன் விலங்கு

மணிவண்ணன்

## பதினான்காவது அத்தியாயம்

மல்லிகைப் பந்தலுக்குப் புறப்பட வேண்டிய நாள் நெருங்க நெருங்கப் பிறந்து வளர்ந்த ஊரையும், பழகிய மனிதர்களையும் பிரிந்து வெளியூருக்குச் செல்லப் போகிறோம் என்ற உணர்ச்சி சத்தியமூர்த்தியின் மனத்தில் உறைக்கத் தொடங்கியிருந்தது. தன் ஊர், தன் மனிதர்கள், தான் பழகிய சூழ்நிலை— இவற்றை நீங்கிப் புதிய ஊரில் புதிய மனிதர்களுக்கிடையே — புதிய சூழ்நிலையில் பழகப் போகிறோம் என்ற தவிப்பை எவ்வளவோ திடமாக மறந்து விட முயன்றும் அவனால் முடியவில்லை. எண்ணி இன்னும் நான்கே நான்கு நாட்கள் தான் இருந்தன. நான்காவது நாள் இரவு இரயிலில் மதுரையிலிருந்து புறப்பட்டால் மல்லிகைப் பந்தல் ரோடு நிலையத்தை அடைந்து பஸ் மாறி மறு நாள் காலையில் போய்ச் சேர்ந்து விடலாம். கண் காணாத தேசம் எதற்கும் போகப் போவதில்லை. அரை நாள் பயணத்தில் போய்ச் சேர்ந்து விடுகிறாற் போல் பக்கத்தில் இருக்கும் ஊர்தான். ஆனால் மனம் என்னவோ கண்காணாத தேசத்துக்குப் புறப்பட்டுக் கொண்டிருப்பது போலத் தான்பரிதவித்தது. எந்த ஊருக்கு அவன் புறப்பட்டுக் கொண்டிருந்தானோ அந்த ஊரை அவனுக்குப் பிடித்திருந்தது. அந்த ஊரின் இயற்கையழகை அவன் விரும்பினான் என்பதெல்லாம் ஒருபுறம் இருந்தாலும் மனத்தின் பரிதவிப்பை அவனால் சிறிதும் தவிர்க்க முடியவில்லை. போகிற இடத்தைப் பற்றிய மகிழ்ச்சியும், பிரிகிற இடத்தைப் பற்றிய கனமான துயரமுமாக அவன் மனம் குழம்பியிருந்தது. ஒரு வேலையும் செய்வதற்கு ஓடவில்லை. அதே சமயத்தில் செய்ய வேண்டிய வேலைகள் ஏராளமாக இருப்பது போல் மலைப்பாகவும் இருந்தது. மூன்று அலமாரிகள் நிறைய ஆங்கிலத்திலும் தமிழிலுமாகப் புத்தகங்கள் குவிந்து கிடக்கின்றன. அவற்றில் தேவையான புத்தகங்களை மட்டும் தனியே பிரித்து எடுத்துக் கொள்ள வேண்டும். புத்தகங்களை மட்டும் வைப்பதற்கே தனியாக ஒருபெட்டி தேவைப்படும். கொஞ்சம் புதிய துணி மணிகள் வாங்கித் தைக்கக் கொடுக்க வேண்டும். மீதமிருக்கிற நாட்களில் பயணத்துக்கான ஆயத்தங்களைச் செய்து கொள்ளவே சரியாக இருக்கும் போல் இருந்தது. துடி துடிப்பும், சுறுசுறுப்பும் நிறைந்த இளைஞர்கள் பலரோடு அவர்களுடைய அன்புக்குரிய இளம் விரிவுரையாளனாக — இலட்சிய ஆசிரியனாகப் பழகப் போகிறோம் என்ற நம்பிக்கை ஒன்று மட்டும் தொலைதூரத்து மகிழ்ச்சியாய் ஞாபகத்தில் தோன்றிக் கொண்டிருந்தது. அருகில் வர மறுக்கும் மகிழ்ச்சியும், தொலைவில் விலகிப் போக மறுக்கும் துயரமுமாக உணர்வில் எல்லை கட்டிச் சொல்ல வகையில்லாததோர் மன நிலையோடு இருந்தான் அவன். ஊசியில் உள்ள சிறிய துளையில் நூல் நுழையாமல் தவறிக் கொண்டே இருப்



பது போல் மனத்தின் பிடியில் சிக்க வேண்டிய நிம்மதி ஒன்று — சிக்காமலே விலகி விலகிப் போய்க் கொண்டிருப்பதை எண்ணித் தவித்துக் கொண்டிருந்தான் சத்தியமூர்த்தி. ஊருக்குப் புறப்படும் நாள் நெருங்க நெருங்க இந்தத் தவிப்பு அவன் மனத்தில் அதிகமாகியது.

அன்று பகலில் வெயில் மிகவும் கடுமையாக இருந்தது. வெயில் தணிந்த பின் மாலையில் குமரப்பனை அவனுடைய அறைக்குச் சென்று அழைத்துக்கொண்டு கடைக்குப் போய்ப் பயணத்துக்கான சில பொருள்களை வாங்க எண்ணியிருந்தான் சத்தியமூர்த்தி. காலையில் தந்தை அவனுடைய செலவுக்காகவும், துணி



மணிகள் வாங்கிக் கொள்வதற்காகவும் இருநூறு ரூபாய் பணம் கொடுத்திருந்தார். மல்லிகைப் பந்தல் கல்லூரியில் அவன் முதல் மாதச் சம்பளம் வாங்குகிறவரை எல்லாம் இந்தத் தொகையில் இருந்துதான் செலவழித்துக் கொள்ள வேண்டும். மலைப் பிரதேசமாக இருப்பதால் இரவில் குளிர் வாட்டி விடும். கம்பளிப் போர்வை ஒன்றும், ஸ்வெட்டரும் வாங்கிக் கொள்ள வேண்டும். மல்லிகைப் பந்தலுக்குப் போய்ச் சேர்ந்த பின் வசிப்பதற்கு ஒருசிறிய அறை பார்த்துக் கொண்டு அதற்குரிய வாடகை முன் பணமாகக் கொடுக்க வேண்டியிருக்கும்.





"தனி அறையாகப் பார்த்துக் கொண்டால் வாடகை அதிகமாகும். உன்னைப் போல் அந்த ஊரில் வேலை பார்க்கும் வேறு ஒருவரோ, இருவரோ வசிக்கும் அறையில் மற்றோர் ஆளாக நீயும் சேர்ந்து கொண்டு வாடகையைப் பங்கிட்டுக் கொள்" என்று அப்பா யோசனை சொல்லியிருந்தார்.

"சனி, புதன் எண்ணெய்க் குளி தவறாதே! மலைக் காட்டு ஊராயிருப்பதனால் எப்போது குளித்தாலும் வெந்நீரில் குளி. இரவில் ஒரு மணி, இரண்டு மணி என்று கால வரம்பில்லாமல் தூக்கம் விழித்துப் புத்தகம் படிக்காதே. நேரத்தோடு படுத்துக் கொண்டு விடு. உடம்புக்கு வந்தால் செய்வதற்கு மனிதர்கள் யாரும் அங்கு கிடையாது என்பதை ஞாபகம் வைத்துக் கொள்" என்பதாக அம்மா திரும்பத் திரும்ப அவனுக்கு உபதேசம் செய்து கொண்டிருந்தாள். கண்ணாயிரத்திடம் கடன் வாங்கிய தொகையை வைத்து மாடியை இடித்துக் கட்டுவதற்காகக் கொத்தனார்களையும் காண்ட்ராக்டர்களையும் தேடி அலைந்து கொண்டிருந்தார் அப்பா. பகல் நேரத்திலேயே . புத்தக அலமாரிகளிலிருந்து தன்னோடு ஊருக்குக் கொண்டு போவதற்குத் தேவையான புத்தகங்களைப் பிரித்து எடுத்துக் கொண்டுவிட நினைத்த சத்தியமூர்த்தி அந்த வேலையில் ஈடுபட்டான். மகாகவி சுப்பிரமணிய பாரதியாரின் கவிதைகள், திருக்குறள் பரிமேலழகர் உரை, தொல்காப்பியப் பகுதிகள், சங்க இலக்கியங்கள், கம்ப ராமாயணம், அடிஸன், கோல்ட்ஸ்மித், பிராட்லி முதலியவர்களின் நூல்கள் ஆகியவற்றைத் தனியே பிரித்து அடுக்கினான். அந்தப் பெரிய டிரங்குப் பெட்டியின் முக்கால் பகுதி இடத்தைப் புத்தகங்களே நிரப்பிக் கொண்டன. தேடிக் கண்டு பிடித்து அதில் வைப்பதற்கு இன்னும் புத்தகங்கள் இருந்தன.





"நீ பெட்டி நிறையப் புத்தகங்களை அடுக்குவதைப் பார்த்தால் படிப்புச் சொல்லிக் கொடுக்கப் போகிறாயா? அல்லது படிக்கப் போகிறாயா என்று சந்தேகமாயிருக்கிறது அண்ணா!" என்றாள் தங்கை ஆண்டாள்.

படிக்கிறவனைக் காட்டிலும் படிப்புச் சொல்லிக் கொடுக்கிறவன்தான் அதிகமாகப் படிக்கவும், சிந்திக்கவும் வேண்டியிருக்கும் என்பதைத் தங்கை புரிந்து கொள்ளாமலிருப்பதை எண்ணித் தனக்குத்தானே சிரித்துக் கொண்டான் அவன் பெட்டியில் புத்த

கண்களுக்குக் கீழே அடி மூலையில் பாரதி தனக்கு அந்தரங்கமாக எழுதியிருந்த கடிதங்கள் இரண்டையும் போட்டு வைத்தான். அபர்க்ராம்பி, வின்செஸ்டர், செயின்ட்ஸ்பரி ஆகிய தலைசிறந்த ஆசிரியர்களின் இலக்கியத் திறனாய்வு நூல்கள்



சிலவற்றை ஒரு நண்பன் இரவல் வாங்கிக்கொண்டு போயிருந்தான். 'ஊருக்குப் புறப்படுவதற்கு முன்பு அந்த நண்பனைத் தேடிப் புத்தகங்களைத் திரும்பப் பெற வேண்டும். ஒவ்வொருவராகப் பார்த்துச் சொல்லி விடைபெற்றுக் கொள்வதற்கு நேரம் இல்லை. இன்றிலிருந்து அங்கங்கே நண்பர்களைச்

சந்திக்க நேரும்போது அவர்களிடம் சொல்லிக் கொண்டு விட வேண்டியது தான்' என்று பயணத்துக்கு முன் செய்ய வேண்டிய காரியங்கள் ஒவ்வொன்றாக அவனுக்கு நினைவு வந்தன. கொண்டு செல்ல வேண்டிய புத்தகங்களைப் பிரித்து வைத்து முடித்தபோது மாலை ஐந்து மணிக்கு மேலாகி விட்டது. முகம் கழுவி உடை மாற்றிக் கொண்டு அவன் வெளியே புறப்பட்டான். தெருத் திருப்பத்தில் மாடியில் ஒண்டுக் குடித்தனம் இருக்கிற நிருபர் பரமசிவம் எதிர்ப்பட்டு வேலை கிடைத்ததைப் பற்றி விசாரித்துத் தம் மகிழ்ச்சியைத் தெரிவித்துக் கொண்டார். குமரப்பனுடைய அறைக்குப் போவதற்காக வடக்கு மாசி வீதியிலிருந்து இருள்ளன் கோயில் சந்தைக் கடந்து வந்து கொண்டிருந்த போது மோகினியின் வீடு உள்ள தெரு அங்கிருந்து மிகவும் பக்கத்தில் இருப்பது அவனுக்கு ஞாபகம் வந்தது. தான் மல்லிகைப் பந்தலுக்குப் புறப்பட்டுப் போவதைப் பற்றி மோகினியிடம் சொல்லிக் கொள்வதா, வேண்டாமா என்று அவன் மனத்தில் ஒரு கேள்வி எழுந்தது. இந்தக் கேள்வியின் தொடர்பாக இதையடுத்து அவன் மனத்தில் மோகினியைப் பற்றி ஒரு வாதப் பிரதிவாதமும் எழுந்தது.

'ஊருக்குப் புறப்படுவதற்கு முன்பு வீடு தேடிக் கொண்டு போய்ச் சொல்லிக் கொள்வதற்கும், விடை பெறுவதற்கும் மோகினி யார்? நான் என் வேலை நிமித்தமாக மல்லிகைப் பந்தலுக்குப் போவதைப் பற்றி அவளிடம் எதற்காகச் சொல்ல வேண்டும்? ஏதோ ஒரு விதத்தில் எங்கோ இரயில் பயணத்தின் போது சந்திக்க நேர்ந்தவர்களை நான் எதற்காக என் வாழ்க்கையில் இவ்வளவு அவசியம் நிறைந்தவர்களாகக் கருத வேண்டும்? அவளுடைய போதாத காலம் அவள் இரயிலிலிருந்து குதித்துத் தற்கொலை செய்து கொள்ள முயன்றாள். அதே இரயிலில் நானும் பயணம் செய்ய நேர்ந்ததனால் நல்ல சமயத்தில் அவளுடைய மன வேதனையை மாற்றி அவளைக் காப்பாற்ற முடிந்தது. அதற்காக அவள் என்னை மதிக்கிறாள், வணங்குகிறாள் என்பதெல்லாம் ஒருபுறம் இருந்தாலும், 'நான் என்னுடைய ஞாபகத்தில் அவளுக்கு எவ்வளவு இடம் அளிக்க முடியும்? எதற்காக அளிக்க முடியும்?' என்று கடுமையாகக் கருதித் தடுத்தது ஓர் எண்ணம்.

'நிச்சயமாக அப்படி இல்லை! மோகினி சேற்றில் பூத்த செந்தாமரை. குப்பையில் விளைந்த குருக்கத்தி. காசு பணத்துக்கு ஆசைப்படும் அவளுடைய தாயின் அருகே அவள் கண்ணியமான வாழ்வுக்கு மட்டுமே ஆசைப்படும் பரிசுத்தமான இதயத்தோடு நிற்கிறாள். அவள் எந்த வீட்டில் எப்படிப்பட்ட சூழ்நிலையில் பிறந்து வளர்ந்திருந்தாலும் வாழ்ந்திருந்தாலும் இன்று அவளுடைய எண்ணத்திலும், செயலிலும், சொல்லிலும் தூய்மை இருக்கிறது. நினைப்பையும், செயலையும் சொல்லையும் சத்தியமாக அளவிட்டுக் கணித்து — அந்தக் கணிப்பினால் மட்டுமே மனிதர்களின் சாதியைப் பிரிப்பதாக இருந்தால்— தூய்மை உள்ளவர்கள், தூய்மை அற்றவர்கள் என்று இரண்டு சாதிகள் தான் பிரியும். அப்படிக் கணிக்கிற கணிப்பில் மோகினியின் சாதி நிச்சயம் உயர்ந்ததாகத்தான் இருக்க முடியும். மனிதனுடைய முன்னறிவிலே வேண்டுமானால், செல்வத்தையும், செல்வமின்மையையும் வைத்து வளமும், வறுமையும் நிர்மாணிக்கப்படலாம். ஆனால் கடவுளுடைய சந்நிதியில் வறுமையும், வளமையும் வேறு விதமாகத் நிர்மாணிக்கப்படுகின்றன. மனம், மொழி, மெய்களால் மனிதர்கள் எவ்வளவுக்குச் சத்தியமாக வாழ்ந்தார்கள், அல்லது வாழவில்லை என்பதை வைத்துத்தான் கடவுளுடைய சந்நிதானத்தில் செல்வமும், ஏழைமையும் நிறுத்துத் நிர்மாணிக்கப்படுகின்றன. பணத்தைச் சம்பாதித்துப் பெரிய மனிதனாக முயலும் கஞ்சனையும், பணத்தைத் தாராளமாகச் செலவழித்து அதன் மூலமாகப் பெரிய மனிதனாக முயல்கிற மஞ்சள் பட்டியானும் கடவுளின் சந்நிதியில் நிச்சயம் ஏழைகளாகத் தான் நின்று கொண்டிருப்பார்கள். இவர்கள் ஏழைகளாக நிற்கிற அதே இடத்தில் மோகினியைப் போன்ற அபலைகள் செல்வச் செழிப்போடு நின்று கொண்டிருப்பார்கள்' என்று மோகினியை ஆதரித்துப் பலமாக எதிர்வாதம் செய்தது மற்றோர் எண்ணம். இந்தச் சமயத்தில் கோவில் பிராகாரத்தில் அவள் கூறியிருந்த அந்த அழகிய வாக்கியத்தை மீண்டும் நினைவு கூர்ந்தான் சத்தியமூர்த்தி.

'ஆதரவற்றதெல்லாம் ஏழைதான். அந்த விதத்தில் உண்மையும் ஏழையாயிருப்பதில் தவறில்லை.'

கருத்தாழமும் கருத்தழகும் உள்ள இந்த வாக்கியத்தை நினைவுகூர்ந்த போது இதைச் சொல்லி விட்டு அவள் சிரித்த சிரிப்பும் நினைவில் தோன்றியது. 'தின்பதற்கு மட்டுமல்லாது தின்னப்படுவதற்கென்றே அமைந்தாற் போன்ற பற்கள்' என்ற கவியின் வருணனைக்கு நிதரிசனம் போன்ற அவளுடைய முல்லை அரும்புப் பற்களை அவனும் மறக்க முடியவில்லை. அவள் பேசுவதும், இதழ்களைத் திறந்து சொற்களை ஒலிப்பதும் அழகா



தொண்டை
மற்றும் மார்பு
உபாதைகளுக்குக்
குணமளிக்கும்

# பெப்ஸ் வில்லைகளை

## உட்கொண்டால், உங்கள் இருமல் உடனேயே அகலும்

பெப்ஸ் வில்லை ஒன்றைக் கரைத்து ஆவி போன்ற அதன் சத்து குணமளிக்க வேலை செய்வதை உணருங்கள். வலியைக் குறைக்கவும், தொண்டைப் புண், பிராங்கைடிஸ், இருமல் மற்றும் ஜலதோஷம் இவைகளுக்குக் காரணமாகிய கிருமிகளை அகற்றவும் உதவியளிக்கிறது. பெப்ஸ் உடனடி நிவாரணம் அளித்து விரைவில் குணமடையச் செய்கிறது.




பிராங்கைடிஸ்,
தொண்டைப்புண்,
மண்டைநீர்,
அடைப்பு,
ஜலதோஷம்
மற்றும்
இருமலுக்கு
உடனேயே
நிவாரண
மளிக்கிறது.

எல்லா மருந்து
வியாபாரிகளிடமும்
கிடைக்கும்.

FPT-34-TAM

**ஸி. இ. புல்போர்ட் (இந்தியா) பிரைவேட் லிட்**

சோல் ஏஜண்டுகள்.
தாதா & கோ., 45, வரதமுத்தியப்ப நாயக் தெரு, சென்னை-3

---

**BLACKBIRD**
Rs. 8/75

**BALLPOINT**
Rs. 4/50

SWAN INK

**PERMANENT** **RAPIDRY**

# *Swan*

## PENS & INKS

*100 years of good writing*

Trade Mark

**SWAN INDIA PVT. LTD.,**
Advani Chambers, Sir P. M. Road, Bombay-1.

SI-60

யிருந்தது என்றும், விரிப்பது இந்த அழகுக்கு வேறு இணையில்லை என்று நிச்சயமாக உறுதிப்படுத்துவதாய் இருந்தது. சித்திரைப் பொருட்காட்சியில் அவள் ஆடிய நடனமும் அந்த நடனத்துக்குத் தான் அவசியம் வரவேண்டும் என்று அவளே சொல்லியனுப்பியதும், 'மானிடவர்க்கு என்று பேச்சுப்படின் வாழுகில்லேன்' என்று உள்ளம் உருகப்பாடி ஆடியதும், ஆட்ட முடிவில் தன்னைச் சந்தித்துப் பேசியதும் ஒவ்வொன்றாக ஞாபகம் வந்து அவனைத் தயங்கி நிற்கச் செய்தன.

'நான் கல்லூரியில் விரிவுரையாளனாக வேலை ஏற்றுக் கொண்டு மதுரையை விட்டு வெளியூர் போகிறேன்' என்று சித்திரைப் பொருட்காட்சியில் நாட்டியம் முடிந்தபின்பு அவளைச் சந்தித்துப் பேசிக் கொண்டிருந்த போதே அவளிடம் சொல்லியிருக்கலாம். என்ன காரணத்தாலோ அன்று அவளிடம் இதைப் பற்றிப் பேச வேண்டும் என்று அவனுக்குத் தோன்றவே இல்லை.'

'அங்கே அவளுடைய வீடு இருக்கும் அந்தச் சிறிய தெருவில் நுழைந்து வெளியேறினாலே தெரிந்த மனிதர்கள் யாராவது பார்த்து ஒரு மாதிரிச் சிரித்துக் கொண்டு போவார்களோ' என்ற கூச்சமும், தயக்கமும் ஒருபுறம் இருந்தாலும் இறுதியில் அவையும் தோற்றன. கடைசியில் இனம் புரியாத அந்தப் பாசம் வென்றது. அவனுடைய கால்கள் அவனை அறியாமலே அந்தத் தெருவுக்குள் அவனை இழுத்துக்கொண்டு போயின. அவளுடைய வீட்டைக் கண்டுபிடித்து அவளிடம் எண்ணி இரண்டே இரண்டு நிமிஷங்களில் நாலு வார்த்தை சொல்லிக் கொண்டு புறப்பட்டு விடுவதென்று தீர்மானித்திருந்தான் அவன். பாதித் தொலைவு நடந்ததும் வந்த வழியே திரும்பிச் சென்று விடலாமா என்று கூடத் தோன்றியது அவனுக்கு. ஆனால் கால்கள் அவனோடு ஒத்துழைக்க மறுப்பவை போல் மேலே மேலே நடந்து அந்தச் சந்துக்குள் போய்க் கொண்டிருந்தன. அவள் அடையாளம் சொல்லியிருந்த அந்த வீடும் வந்துவிட்டது. படியேறி உள்ளே போக நினைப்பதிலும், போவதிலும் ஒரு சிறிது தயக்கம் ஏற்பட்டது. யாரோ கதவைத் திறந்தார்கள். உள்ளே போவதற்காகப் படியேறத் தொடங்கியிருந்த சத்தியமூர்த்தி — வருகிறவர்களுக்கு வழிவிடுவதற்காகச் சற்றே விலகினான். வந்தது வேறு யாருமில்லை. அன்று தேடி வந்த அந்தச் சிறுவன்தான் கதவைத் திறந்து கொண்டு வெளியே வந்தான். வந்தவன் சத்தியமூர்த்தியைப் பார்த்தானோ, இல்லையோ, 'வாங்க சார்' என்று மலர்ச்சியோடும், உற்சாகத் துள்ளலோடும் கூறி விட்டு வீட்டின் உள்ளே ஓடினான். வாசற்படியைக் கடந்து உள்ளே நுழைந்ததும் 'கம்'மென்று சாம்பிராணிப் புகையின் நறுமணம் கமழ்ந்து கோயிலுக்குள் நுழைவதைப் போன்ற சூழ்நிலையை உண்டாக்கிற்று. மேற்கொண்டு உள்ளே போவதற்குத் தயங்கியபடி நடையிலேயே நின்றான் அவன். வீடு அமைதியாக இருந்தது.

"வாருங்கள்! இப்போதாவது வர வழி தெரிந்ததா? இன்று இந்த வீடு பாக்கியம் செய்திருக்கிறது என்றுதான் சொல்ல வேண்டும்" என்று அழைப்போடு எதிரே வந்து சிரித்துக் கொண்டு நின்றவளைப் பார்த்து மலைத்துப் போனான் அவன். முதுகில் காடாய்ப் புரளும் கருங்கூந்தலை நடுவாக ரிப்பனில் முடிந்து ஒரு கொத்து மல்லிகைப் பூவை அந்த இடத்தில் சொருகி யிருந்தாள்

> **பொன் மொழி**
>
> நினைவுகளையும் செயல்களையும், சொல்லையும் சத்தியமாக அளவிட்டுக் கணித்து — அந்தக் கணிப்பிலும் மட்டுமே மனிதர்களின் சாதியைப் பிரிப்பதாக இருந்தால் தூய்மை உள்ளவர்கள், தூய்மை அற்றவர்கள் என்று இரண்டே இரண்டு சாதிகள் தான் மிச்சம்.

மோகினி. அவசரமாகவும், கை போன போக்கிலும் அள்ளிச் சொருகிக் கொள்ளப் பெற்றிருந்த அந்தப் பூவானது பார்ப்பதற்குக் கூந்தலிலேயே பூத்துத் தொங்கி—இடம் கொள்ளாமல் சாய்ந்து சரிந்த மாதிரி அழகாக இருந்தது. சந்திர பிம்பமாக மின்னும் முகத்தில் நெற்றியின் நடுவே தீபச் சுடரைப் போல் ஒரு கீற்றுக் குங்குமத்தை எடுத்துத் தீற்றிக் கொண்டு வந்திருந்தாள்.

"என்ன அப்படிப் பார்க்கிறீர்கள்? இன்னும் சிறிது நேரத்தில் கோவிலுக்குப் புறப்பட வேண்டும் என்பதற்காகத் திரும்பவும் நீராடி விட்டு வந்தேன். ஈரத் தலைக்குப் புகை போட்டுக் கொண்டிருந்தேன். ஒரு நாளும் இல்லாத திருநாளாக இந்தப் பையன் ஓடி வந்து நீங்கள் வந்திருப்பதாகச் சொன்னான். முதலில் என்னால் நம்பவே முடியவில்லை. பரக்கப் பரக்கத் தலையை ரிப்பனால் கட்டிப் பூவை அள்ளிச் சொருகிக் கொண்டு கொஞ்சம் குங்குமமும் வைத்துக் கொண்டு இங்கே வந்து பார்த்தால் நிஜமாகவே நீங்கள்தான் வந்திருக்கிறீர்கள். இந்த ஆச்சரியத்தை எப்படிக் கொண்டாடுவதென்றே தெரியவில்லை எனக்கு. உள்ளே வாருங்கள். உட்காருங்கள்"

என்று ஆவலோடும் அன்போடும் அவனை உள்ளே அழைத்தாள் மோகினி. ஊருக்குப் புறப்பட்டுப் போவதைப் பற்றி இரண்டு வார்த்தை சொல்லி விட்டுப் போகலாமென்று வந்திருந்த சத்தியமூர்த்தி அங்கே நீண்ட நேரம் உட்கார்ந்து பேசுவதற்குத் தயங்கினான்.

"ஒன்றுமில்லை! நான் அன்றைக்குச் சித்திரைப் பொருட்காட்சியிலே உங்களைச் சந்தித்த போது சொல்ல மறந்து விட்டேன். எனக்கு மல்லிகைப் பந்தல் கல்லூரியில் வேலை கிடைத்திருக்கிறது. நான் இன்னும் இரண்டு மூன்று நாட்களில் புறப்பட்டு விடுவேன். உங்களிடம் ஒரு வார்த்தை சொல்லிக் கொண்டு போக வேண்டுமென்று தோன்றியது. வந்தேன்."

இதைக் கேட்டு ஒன்றும் பேசத் தோன்றாமல் சிறிது நேரம் அப்படியே திகைத்துப் போய் நின்றாள் அவள். அந்தக் கவர்ச்சி நிறைந்த முகம், கண்கள், இதழ்கள் எல்லாம் திடீரென்று இருந்தாற்போலிருந்து அப்படியே சித்திரமாக மாறி விட்டாற் போல் அமைதியுற்றன. அந்தக் கண்களின் சிரிப்பும், குறுகுறுப்பும் இருந்த இடம் தெரியாமல் மறைந்து அலைகளில் எதையோ இழந்துவிட்டுப் போவதைப் போன்ற சோகம் தெரிந்தது. அந்த வேதனையைக் கண்டு சத்தியமூர்த்தியே மனம் பொறுக்காமல் மேலும் கூறலானான்:

"மனம் தளராதீர்கள். நான் ஊருக்குப் போவதை உங்களிடம் சொல்லி விட்டுப் போக வந்தேனென்பதை விட உங்களுக்குத் தைரியம் சொல்லி விட்டுப் போகவே இங்கு வந்ததாக நினைக்கிறேன். நான் சொல்வதைக் கவனமாகக் கேளுங்கள். அன்று எப்படிப்பட்ட பரிதாபகரமான சூழ்நிலையில் உங்களை நான் காப்பாற்றினேனோ அப்படிப்பட்ட சூழ்நிலை இனி ஒரு நாளும் உங்களுக்கு வரக் கூடாது. உங்களுடைய அழகும், நீங்கள் பயின்றிருக்கும் கலையின் அழகும் உலகத்துக்கு நெடுங்காலம் நல்லபடியாகப் பயன்பட வேண்டும். நான் செய்த உதவி மிகவும் சிறியது. அதற்காக நீங்கள் என் மேல் செலுத்துகிற மதிப்பும், மரியாதையும் அதிகமானவை. மனிதர்கள் ஒருவருக்கொருவர் இயற்கையாகச் செய்து கொள்ள முடியாத எந்த அபூர்வமான உதவியையும் உங்களுக்கு நான் செய்து விடவில்லை. எனக்கு விடை கொடுத்து அனுப்புங்கள். மறுபடி எப்போது சந்திக்க நேர்கிறதோ அப்போது சந்திக்கலாம். நீங்கள் இப்படி அநாவசியமாகக் கண் கலங்கித் தவித்தால் நான் வருத்தத்தோடு விடைபெற்றுத் திரும்ப வேண்டியிருக்கும். நீங்கள் எனக்கு மகிழ்ச்சியோடு விடை கொடுக்க வேண்டும். முதல் முதலாக உங்கள் வீட்டைத் தேடி வந்திருக்கிறேன்...."

"அதனால்தான் இப்படி நடையிலேயே நின்று பேசி விட்டுப் போகப் பார்க்கிறீர்கள் போல் இருக்கிறது."

"எனக்கு நேரமாகிறது. நான் அவசரமாகப் போக வேண்டும். நண்பன் ஒருவனைச் சந்தித்து அழைத்துக் கொண்டு அவனோடு கடைகளுக்குப் போக வேண்டும்" என்றான் சத்தியமூர்த்தி.

"உண்மைதான்! என்னைப் போல் ஒவ்வொரு நாளும் நரக வேதனைப்பட்டுக் கொண்டு தவித்தும் ஏங்கியும் வாழ்கிறவர்களுக்குச் சில சமயங்களில் மற்றவர்களுடைய அவசரம் புரியாமல்தான் போய் விடுகிறது. இந்தப் பையனைக் காப்பி, சிற்றுண்டி வாங்கி வர அனுப்பியிருக்கிறேன். இன்னும் சிறிது நேரத்தில் அம்மா வெளியிலிருந்து வந்ததும் பையனைத் துணைக்கு அழைத்துக் கொண்டு கோவிலுக்குப் போக வேண்டும். அம்மா வந்து விட்டாலோ நீங்களும் நானும் இப்படி நின்று பேசிக் கொண்டிருப்பதைப் பார்த்தாலே காளி சொரூபம் எடுத்து விடுவாள். அவள் யார் யாரிடம் எவ்வளவு நேரம் நின்று சிரித்துப் பேசச் சொல்கிறாளோ அவர்களிடம் மட்டும்தான் நான் பேச வேண்டும். உங்களோடு பேச வேண்டுமென்று எனக்கே ஆசையாக இருக்கிறது. நீங்களோ வாசலில் ஒரு காலும், உள்ளே ஒரு காலுமாகப் பறந்து கொண்டு நிற்கிறீர்கள்...."

இவ்வளவு சொல்லி வேண்டிக் கொண்ட பின்பும் அவள் மனத்தைப் புண்படுத்துவது அழகில்லை என்று கருதியவனாக உள் கூடத்தில் போய் உட்கார்ந்தான் சத்தியமூர்த்தி. கூடம் முழுவதும் சிமெண்டுத் தரையில் பளீரென்று தெரிகிறாற் போல மாக்கோலம் போட்டிருந்தது. மோகினியின் பெரிய பெரிய புகைப்படங்கள் இரண்டு மூன்று அவள் பலவித நிலைகளில் நாட்டியமாடும் கோலத்தில் எடுக்கப் பெற்றுக் கூடத்துச் சுவரில் மாட்டப் பெற்றிருந்தன. கிழக்கு முகமாகப் பிரம்மாண்டமான சரஸ்வதி படமொன்று வைக்கப்பட்டிருந்தது. அந்தப் படத்தின் இரு பக்கங்களிலும் வீணை, தம்புரா, மிருதங்கம் என்று விதம் விதமான வாத்தியங்கள் ஏழெட்டு உறையிடப் பெற்றும் உறையிடப் பெறாமலும் வைக்கப்பட்டிருந்தன. சாம்பிராணிப் புகையின் நறுமணமும் பூக்களின் வாசனையுமாக அங்கே உட்காருவதே மெய்ம்மறந்து பரவசப்படும் அனுபவமாக இருந்தது. கூடத்தில் தனக்கு எதிர்ப் பக்கம் ஒதுங்கினாற்போல் நின்று கொண்டிருந்த

# INDIANOIL

signifies

# PROGRESS!



Constant movement of machines: cogwheels smoothly meshing in factories; the deep roar of airplane engines taking off; the steady hum of motor vehicles; the clatter of metal wheels on rails; ceaseless activity in boiler rooms; tractors biting into fields with iron teeth; mighty crushers champing stone with iron jaws—all these and many more are activated by one motive force—OIL.

Oil signifies PROGRESS, for it is the prime mover of Industry, and the Third Plan envisages a 70% increase in industrial production.

INDIANOIL has entered the competitive market for the nationwide distribution of a wide range of petroleum, automotive and premium products. Whether to keep the wheels of industry in motion; to maintain the flow of traffic; or to light the flame in stove or lamp, INDIANOIL is indispensable to every facet of national life and economy.

*The Indian Oil Company now handles the distribution of high speed and light diesel oils, motor spirit, kerosene, high grade lubricants, transformer and axle oils, furnace and fuel oils.*




**Indian Oil** Company Limited
(A Government of India Undertaking)
"Rashmi", Carmichael Road, Bombay 26-WB;
Volga Building, Clerk Road, Bombay 34;
P-64, Sundari Mohan Avenue, Calcutta 14;
"Chordia Mansion", 150-A Mount Road, Madras 2;
National Insurance Bldg., 5 Parliament Street, New Delhi 1.

மோகினியைப் பார்த்துச் சிரித்துக் கொண்டே கேட்டான் சத்தியமூர்த்தி:

"இத்தனை வாத்தியங்களும் தூசி படிந்து மங்கிப் போய்க் கிடக்கின்றனவே? இவற்றை இங்கு யாரும் எடுத்து வாசிப்பவர்களே இல்லையா?"

"வாத்தியங்கள் மட்டும் இல்லை. இந்த வீட்டில் மனிதர்களும் இப்படித்தான் இருக்கிறோம். உங்களைப் போல் சத்தியமும் நேர்மையும் நிறைந்த சுந்தர இளைஞர் ஒருவர் மனம் வைத்தால் வாழ்நாள் முழுவதும் வாசிப்பதற்குரிய பரிசுத்தமான வாத்தியம் ஒன்று இந்த வீட்டில் உங்களுக்காகக் காத்துக் கிடக்கிறது."

"எந்த வாத்தியத்தைச் சொல்கிறீர்கள்?" — அவனுடைய இந்தக் கேள்விக்கு மறுமொழி கூற மோகினி தயங்கினாள். அவளுடைய முகம் வெட்கத்தால் சிவந்தது. அவளுடைய இதழ்களிலும், கண்களிலும் சத்தியமூர்த்தியே அதுவரை பார்த்திராத விதமானதொரு குறும்புக் குறுநகை விளையாடியது.

"நிஜமாகவே நான் சொல்வது உங்களுக்குப் புரியவில்லையா?" என்று கடைக் கண்களால் அவனைச் சூறையாடி விடுவது போல் பார்த்துக் கொண்டே கேட்டாள் அவள். அவன் இமையாமல் அவள் முகத்தையே பார்த்துக் கொண்டிருந்தான். அந்த மதிமுகமும் மலர் விழிகளும் அப்போது ஆயிரமாயிரம் நயங்கள் நிறைந்த காவியமாகி இலங்கின. மிக மென்மையான குரலில் வெட்கம் அதிகமா, அல்லது இனிமை அதிகமா என்று கண்டு பிடிக்க முடியாத நளினமான தொனியோடு அந்த வாக்கியத்தைச் சத்தியமூர்த்தியிடம் கூறினாள் அவள்:

"இந்த வீட்டில் நீங்கள் எடுத்து வாசிப்பதற்காகவே உங்கள் காலடியில் காத்துக் கொண்டிருக்கும் வாத்தியம் இதோ இருக்கிறது" என்று தன் நெஞ்சைத் தொட்டுக் காண்பித்து விட்டு அவனைக் கைகூப்பினாள் அவள். அப்போது அவளுடைய கண்களில் தெரிந்த தாபமும், தாகமும்; எத்தனை எத்தனையோ யுகங்களாக இந்தச் சந்திப்புக்குக் காத்திருப்பது போல் அவ்வளவு மிகையாயிருந்தன. கோவில் பிராகாரத்தில் அவள் தன்னுடைய பாதங்களைத் தொட்டுக் கண்களில் ஒத்திக் கொண்டபோது எந்த எதிர்பாராத உணர்ச்சி சத்தியமூர்த்திக்கு ஏற்பட்டதோ, அதே உணர்ச்சிதான் இப்போதும் ஏற்பட்டது.

"பிரிந்து வெளியூர் போகப் போவதைச் சொல்லிக் கொண்டு போக வந்தால் என்றும் பிரிய முடியாத பந்தத்தைச் சொல்லி நீங்கள் என்னைத் தளைப்படுத்துவது நியாயமா?" என்று சிரித்துக் கொண்டே கேட்டான் சத்தியமூர்த்தி.

"மன்னிக்க வேண்டும்! உங்கள் முன்னிலையில் நான் எதற்காக இப்படி மனமும் உணர்ச்சிகளும் நெகிழ்ந்து போய்த் தவிக்கிறேன் என்று எனக்கே புரியவில்லை. இது ஏதோ பழம் பிறவித் தொடர்பாயிருக்க வேண்டும்... இரயில் கதவைத் திறந்து கொண்டு கீழே குதித்து ஒரேயடியாகச் செத்துத் தொலைந்து போய்விட இருந்தவளைப் பின்னாலிருந்து கையைப் பிடித்து இழுத்துக் காப்பாற்றினீர்களே? எதற்காகக் காப்பாற்றினீர்கள்? 'இருந்து என் கழுத்தை அறுக்கிறதுக்குப் பதில் நீ ஒரேயடியாகச் செத்துத் தொலையறதே மேல்' என்று சொல்லிப் பெற்ற தாயே கைவிட்டு விட்டவளை நீங்கள் எதற்காகக் குறுக்கிட்டுக் காப்பாற்றினீர்கள்? மேளம் கொட்டாமல், நாதஸ்வரம் வாசிக்காமல், அந்த அதிகாலை நேரத்தில் ஓடும் இரயிலில் பாணிக்கிரகணம் செய்து கொண்டது போல் என் வலது கையைப் பிடித்து இழுத்தீர்களே — அப்போது எனக்கு எந்த ஞாபகம் வந்தது தெரியுமா? ஆண்டாள் கண்ணனைத் திருமணம் புரிந்து கொள்வதாகக் கனவு கண்டு பாடிய 'வாரணமாயிரம்' பாடல்கள் நினைவு வந்தன. 'கைத் தலம் பற்றக் கனாக் கண்டேன் தோழீ நான்' என்று அப்போது என் இதயம் எனக்கு மட்டுமே கேட்கிற குரலில் பாடிக் கொண்டிருந்தது. பிடித்த கையைப் பாதியில் இழுத்து உதறிக்கொண்டு போய்விடமாட்டீர்களா? நீங்கள் மல்லிகைப் பந்தலுக்குப் போனாலும் சரி, அதற்கு அப்பாலுள்ள வேறு ஏதாவது ஓர் ஊருக்குப் போனாலும் சரி, உங்களுடையவள் ஒருத்தி இங்கிருக்கிறேன் என்ற பவித்திரமான நினைவு உங்களுக்கு இருக்க வேண்டும்."

மிக மென்மையான தன் நெஞ்சின் உணர்ச்சிகள் தவிக்கத் தவிக்க அவள் இவ்வாறு கூறிக் கைகூப்பிய போது சத்தியமூர்த்தியும் கண்கலங்கிப் போய் இருந்தான். அந்த நிலையில் காப்பி சிற்றுண்டி வாங்கி வரப் போயிருந்த பையன் திரும்பி வந்து சேர்ந்தான். மோகினி தன் கைகளாலேயே அவனுக்குச் சிற்றுண்டியை எடுத்து வழங்கினாள். அவன் சிற்றுண்டி சாப்பிட்டுக் கொண்டிருக்கும்போது சிறிதும் எதிர்பாராத கேள்வி ஒன்று அவளிடமிருந்து பிறந்தது.

"நீங்கள் புறப்படுவதற்கு இன்னும் எத்தனை நாட்கள் இருக்கின்றன?"

"ஏன்? இன்னும் நான்கு நாட்களில் நான் புறப்பட வேண்டும்! ஆனால் இப்போதே பிரயாணச் சுறுசுறுப்பு வந்து விட்டது."

"புறப்பட்டுப் போவதற்கு முன் உங்களை நான் இன்னொரு முறை சந்திக்க வேண்டும்."

(தொடரும்)

# வீடு கொண்ட வீராங்கனை!



தாமரை மணாளன்

நான் சொந்த புத்திரி பத்மாவை என் தலையில் கட்டும்போது என் மாமனார் வெகு பரவசத்துடன், ''மாப்பிள்ளை! இப்போ என் சக்திக்கேற்பப் பத்மாவுக்குப் பொன்னை வைக்கிற இடத்தில் பூவை வைத்துச் செய்திருக்கிறேன். ஆனால் அவள் புகுந்த இடத்தில் அவளால் லட்சாதிபதிப் பெருமையுடன் இருக்கணும்'' என்று சொல்லியிருந்தார்.

எப்பொழுதுமே வாக்குச் சுத்தத்தில் அப்பழுக்கு இல்லாதவர் என் மாமனார். இதை அந்தப் 'பொன்னை வைக்கிற இடத்தில் பூவை வைக்கிற' விவகாரத்திலிருந்தே தெரிந்து கொண்டேன். கல்யாணத்தின் போது, பொன்னை வைக்க வேண்டிய இடத்தில் அதாவது சங்கிலி போட வேண்டிய பத்மாவின் கழுத்தில் வெறும் ரோஜாப்பூ மாலையைப் போட்டே சமாளித்து விட்டார் மனிதர். அன்றிலிருந்து அவர் வார்த்தைகளில் எனக்கு ஓர் அபரிமிதமான விசுவாசம்.

அந்தப் பொன் சமாசாரத்தைப் போலவே அவர் அடுத்து அறிவித்த லட்சாதிபதிப் பெருமை கூட எப்படியும் எந்த நிமிஷத்திலும் எனக்குச் சம்பவிக்கலாம் என்று நான் எதிர்பார்த்துக் கொண்டுதான் இருந்தேன். நான் எதிர்பார்த்தது வீண்போகவில்லை.

இலட்சாதிபதி என்ன, கோடீசுவரனாகத் தான் ஒருவன் இருக்கட்டுமே. அவன் அதிக பட்சம் வருஷத்துக்கு ஒரு புது வீடு கட்டிக் குடிபெயருவான். ஆனால் நானோ இந்தச் சென்னையில் குடித்தனம் ஆரம்பித்துப் பத்தே பத்து மாதங்கள் ஆகுமுன் பதினைந்து வீடுகளில் வாசம் செய்துவிட்டேன்.

கிராமத்திலிருந்து என்னுடன் தனிக்குடித்தனம் பண்ண வந்த முதல் நாளன்றே தன் வாய் வரிசையை அங்குரார்ப்பணம் செய்து விட்டாள் பத்மா. ஆனால் அவள் புதுக் குடித்தனம் வந்ததும் புத்தம் புதிதாகக் கேட்ட கேள்வி இதுதான். ''இந்த வீட்டுக்கா

மனைவியை இருத்தி அவளுக்குத் தலை பின்னிக் கொண்டிருந்தாள் வீட்டுக்கார அம்மாள்.

என்னைக் கண்டதும், "குழந்தை! உன் வீட்டுக்காரர் வந்து விட்டார்! காப்பி கொடு. போ!" என்று கனிவுடன்கூறி அலங்காரத்தை முடிக்க, "சரி, அம்மா!" என்று கனிவினும் கனிவாகக் கூறிப் பத்மா எழுந்தாள்.

எனக்கு மூச்சு நின்று விடும் போல் இருந்தது! 'குழந்தையாவது! அம்மாவாவது! இது என்ன பத்மா பாசம்! எப்படி ஏற்பட்டது? மனோதத்துவ நிபுணர் யோசனை அவ்வளவு வேகமாக வேலை செய்து விட்டதா?....'

பத்மா வீட்டுக்குள் வந்ததும் ஆவலுடன், "காலையிலே ஏதோ சண்டை போட்டாற் போல் இருந்ததே. இப்போது சமாதானமாகி விட்டீர்களா?" என்று கேட்டேன்.

சட்டென்று அவள் முகம் ஆவேசமாக மாறியது. பல்லைக் கடித்துக் கொண்டு, "சமாதானம் பண்ணினேன், சமாதானம்! வீட்டிலே ஆண் பிள்ளை சரியில்லாமல் இருந்தால் கண்டவளிடமெல்லாம் தாழ்ந்து போக வேண்டியதுதான். காலையில் அவ என்கிட்டே சண்டைக்கு வந்ததுக்கு அவளைப் பின்னியிருப்பேன், பின்னி! எல்லாம் உங்களால் போச்சு" என்று என் மேல் பாய்ந்தாள்.

இந்த எதிர்பாராத போர்க்கோலத்துக்குக் காரணம் புரியாமல் திணறினேன்.

"அந்த வீட்டுக்காரி என்ன கேட்டிரு தெரியுமா? நூற்றைம்பது ரூபாய் சம்பளம் வாங்குறவன் பெண்டாட்டிக்கு என்ன வாய்ன்னு கேட்டிரு! அது மட்டுமா? 'அக்கம் பக்கத்திலே இந்த மாதிரி வீட்டுக்கு நூறு ரூபாய் வாடகை குடுக்கிறாங்க. அப்படிக் கொடுக்கிறவங்க குற்றம் குறை சொன்னால் நியாயம் இருக்கிறது? அம்பது ரூபாய் கொடுக்கிற நீ கேட்க என்ன யோக்கியதை?' அப்படீங்கிறு. எனக்குப் பதில் சொல்ல முடியலே. எனக்கு உங்களாலே எவ்வளவு கேவலம்?" என்று ஆவேசமாகக் கத்தினாள்.

செய்வதறியாது நான் தவித்தேன். என் தவிப்பைப் பத்மா இலட்சியம் செய்யத் தயாராக இல்லை. ஒரே வார்த்தையாகச் சொல்லி விட்டாள். "இதோ, பாருங்க. என்னால் இந்த அவமானத்தைத் தாங்க முடியாது. நீங்கள் என்ன செய்வீர்களோ, யார் காலில் விழுவீர்களோ எனக்குத் தெரியாது. குறைந்தது ஐந்நூறு ரூபாய் சம்பளமாவது கிடைக்கிற ஒரு வேலையை ஒரு மாதத்துக்குள் வேலே பார்த்தாகணும். அப்புறம் நூறு ரூபாய் பணத்தை அவளுக்கு வாடகைன்னு எறிந்துவிட்டுப் பேசிக் கொள்ளணும்" என்று வீர சபதம் செய்தாள்.

நான் பார்க்கும் நூற்றைம்பது ரூபாய் உத்தியோகத்தைக் காப்பாற்றிக் கொள்வதே பெரும்பாடு! இந்த லட்சணத்தில் ஐந்நூறு ரூபாய் சம்பளத்துக்கு எங்கே போவேன்? எனவே, வெகு சாமர்த்தியமாக, "பத்மா, உடனே இந்த வீட்டைக் காலி பண்ணி விடுவோம்" என்றேன் ஐந்நூறு ரூபாய் சம்பளப் பிரச்னையிலிருந்து விடுபட.

பத்மாவோ திருப்பி வீர கர்ஜனை செய்தாள். "சேச்சே! அவளை மடக்காமல் இந்த வீட்டைக் காலி பண்ணுவதாவது! ஒரு நாளும் நடக்காது. நீங்கள் ஐந்நூறு ரூபாய் சம்பளம் வாங்கணும். நான் ஒரு மாதமாவது அவளுக்கு நூறு ரூபாய் வாடகையைக் கொடுத்து விட்டு மனத்தில் அடக்கி வைத்திருக்கிற கேள்வியைக் கேட்டாகணும். அப்புறம்தான் காலி பண்ணணும். அதுவரை அவளிடம் சும்மா சமாதானமா இருக்கிறாற் போல நடிச்சுக்கிட்டிருக்கேன்."

எனக்கு மூளை கலங்கியது. வீட்டைக் காலி பண்ணுவதும் புது வீடு தேடிக் கொள்வதும் எனக்குக் கைவந்த பழக்கம். ஆனால் வேலை விஷயம்? வீட்டுக்காரர் மூலம் அவர் மனைவியைத் தூண்டி விட்டு மீண்டும் சண்டை போடச் செய்தால்தான் இந்தச் சிக்கலில் இருந்து தப்பலாம் என்று தோன்றியது.

இந்த நோக்கத்துடன் வீட்டுக்காரரைத் தேடி ஓடினேன். அச்சமயம் அவரே என்னைத் தேடி ஓடி வந்து கொண்டிருந்தார்! காரணம்? வேறென்ன? என் நிலையே அவருக்கும்!

காலைச் சண்டையின் போது, பத்மா, பதினைந்து ரூபாய் வாடகையில் இருக்கும் வீடெல்லாம் புதுப் பேஷனில் இருக்கும் போது இந்த வீடு மட்டும் பாழடைந்த கோழிக் கூடு மாதிரி இருப்பதாக வருணித்தாளாம். அதனால் வீட்டுக்கார அம்மாளுக்கு ரோஷம் தாங்க முடியாமல், வீட்டைப் புது மாதிரியாக ரிப்பேர் பண்ணி என் மனைவியின் வாயை அடைத்தாக வேண்டும் என்று தீப் பொறி பறக்க நிற்கிறாளாம்! பத்மாவைப் போல் அவளும் கேட்பதற்காக நிறைய மனத்தில் அடக்கி வைத்திருக்கிறாளாம்!

"என்னய்யா! வீட்டைக் கட்டக் கடனே வாங்கினேன். அந்தக் கடனுக்காக அதை இப்போ அடமானம் வைத்திருக்கிறேன்.... நான் இனிமேல் ரிப்பேர் பணத்துக்கு எங்கே போவேன்? எப்படியாவது உம் சம்சாரத்திடம் சொல்லி வீட்டைக் காலி பண்ணிக் கொண்டு போய்விடும்!" என்று கெஞ்சினார்.

"நீங்களே ஒரு வழி பண்ணுங்க. உங்க மனோதத்துவத்தால் வந்த வினைதானே!" என்று ஒப்பாரி வைத்தேன் நான்.

"மனோதத்துவம் என்னய்யா பண்ணும்? அவர் பெண்கள்னு நினைக்கச் சொன்னார். இதுகள் அந்த இனத்துக்கு அப்பாற்பட்டதாக இருந்திருக்குதுகள்" என்று அவர் பதிலுக்குப் பிலாக்கணம் வைத்தார்.

அன்று தொடங்கிய ஒப்பாரியை ஆறேழு மாதங்களாக நாங்கள் தொடர்ந்து நடத்துகிறோம். எனக்கும் ஐந்நூறு ரூபாய் சம்பளத்தில் உத்தியோகம் கிடைத்தாகவில்லை. வீட்டுக்காரருக்கும் வீட்டைப் புது மாதிரியாக்கிப் பத்மாவின் வாயை மடக்கப் பணம் சேரவில்லை. 'தங்கள் தங்கள் குறைகள்' தீர்க்கப்படாததால் பெண்கள் இருவரும் பரஸ்பரம் தங்களுக்குள் தாக்கிக் கொள்ள முடியாமலும், அதே நேரத்தில் தங்கள் 'தினவெடுத்த நாக்கு'களின் வேகத்தை அடக்க முடியாமலும் வட்டியும் முதலுமாக எங்களைத் திட்டி எடுக்கிறார்கள். இதற்கு மேல் பொறுப்பதற்கில்லை. ஏனென்றால், பொறுக்க முடியவில்லை! எனவே குடும்பம் நடத்துவதில் டிப்ளமோ வாங்கிய சம்சாரிகளுக்கு ஒரு வேண்டுகோள்: உங்களைப் போன்ற சக ஆண்களுக்கு நீங்கள் செய்யும் புண்ணியமாக இருக்கட்டும். யாருக்காவது இச் சிக்கலைத் தீர்க்க வழி தோன்றினால் ஒரு வரி எழுதிப்போடுங்கள்.

9-14-4

# பத்தினிக் கோட்டம்

அத்தியாயம் ஐந்து

## அன்னையின் தரிசனம்

ஜெகசிற்பியன்

**நா**ழிகை வட்டிலில் கடிகையாள் நேரம் கணித்துப் பல்லவபுரம் நகர மாந்தருக்கு அறிவிப்பதற்கென அமைந்த அழகிய கோபுரம் ஒன்றின் அடிவாரத்துக்கு வந்து சேர்ந்தனர் பரமேசுவர வர்மனும், பெரும்பிடுகு முத்தரையரும்.

அரண்மனைக் கோட்டைக்கு நேர் எதிரே தண்ணிழல் படர்ந்த மாஞ்சோலைச் சூழலில் தன்னந் தனியே அமைந்திருந்தது அந்தக் கடிகைக் கோபுரம். எட்டுப் பட்டைகள் தீர்ந்த வடிவிலே அடி பருத்துத் தலை சிறுத்துத் திண்மையுடன் காணப்பட்ட அது, சுமார் நான்கு 'குடிதாங்கிக் கோல்' (தொண்ணூற்றாறு அடி) உயரத்துக்கு மேலெழும்பி நீள் விசும்பை முத்தமிடுவது போல் கம்பீரமாக நின்றிருந்தது. எக்காளக் கருவிக்குப் பூண் பிடித்திருப்பது போல் அந்தக் கோபுரத்தின் சுற்றுப் பரப்பில் பன்னிரண்டு அடி உயர இடைவெளிக்கு ஒன்றாக எட்டுப் பிதுக்கக் கரைகள் இருந்தன. அவ்வொவ்வொரு வளைவுக் கரைக்கும் ஒரு சாளரமென எட்டுச் சாளரங்கள் திசைக்கு ஒன்றாய் அமைந்திருந்தன. அதன் படிக்கட்டு கீழ்த் தளத்திலிருந்து தொடங்கி உட்புறமாகவே சுழன்று சுழன்று மேலே சென்றது.

இப்படி விளங்கிய அந்தக் கடிகைக் கோபுரத்தில் கடந்த பல மாதங்களாக நேரம் கணித்து அறிவிக்கும் தொழில் நடைபெறாதிருந்ததால் அது கவனிப்பாரின்றிப் பாழ்பட்டுக் காட்சி அளித்தது.

சுற்றிலும் தம் பார்வையை வெகு உன்னிப்பாகச் சுழல விட்டுப் பார்த்துக் கொண்டு நின்றிருந்த முத்தரையர் புரவிகளை மறைவானதோர் இடத்தில் கட்டிப் போட்டுவிட்டுத் திரும்பி வந்து, "வாருங்கள் அரசே! தயவுசெய்து இந்தக் கடிகைக் கோபுரத்தின் உச்சித் தளத்துக்கு என்னோடு வாருங்கள்" என்று குழைவாகக் கூறிக்கொண்டே கோபுரச் சுழற் படிகளின் மேல் ஏறினார். உள்ளார்ந்த திகைப்புடன் தயங்கி நின்ற பரமேசுவர வர்மனும் அவரைப் பின்தொடர்ந்து ஏறினான்.

கால்கள் சோர்வுற்றுக் களைப் படைந்த நிலையில் கோபுர உச்சித் தளத்தை அவ்விருவரும் அடைந்தனர். அங்கே பிரும்மாண்டமான வெண்கல வட்டையொன்று களிம்பேறிக் கறுத்துத் தொங்கிக் கொண்டிருந்தது. அதன் எதிரே நாழிகை கணக்கிடுவதற்கென அமைந்த 'குறுநீர்க் கன்னல்' எனப்படும் காலேந்திரக் கருவி பாழ்பட்டுப் பழுதுற்ற நிலையில் கிடந்தது.

உச்சிக் கோபுரத்தின் வெளிச் சுற்றுத் தளத்தில் வந்து நின்ற பரமேசுவர வர்மன் அதன் கைப்பிடிச் சுவரைப் பற்றியவாறு தொலை தூரத்துக்கு அப்பால் தன் பார்வையைச் செலுத்தினான். ஒரு காலத்தில் தேவேந்திரனின் அமராவதிப் பட்டணம் போல் அத்தனை அழகுடன் விளங்கிய அந்தப் பல்லவபுரம் நகர் இப்போது புகை படிந்த ஓவியமாகப் பொலிவிழந்து காட்சியளித்தது. இடுகாட்டைப் பார்க்கும் துறவி போல் ஒருவித ஆழ்ந்த விரக்திப் புன்முறுவலோடு அந்தக் களையிழந்த நகரின் காட்சிகளைப் பார்த்தவாறு அமைதியாக நின்றிருந்தான் பரமேசுவரவர்மன்.

பெரும்பிடுகு முத்தரையர் எங்கே? அதோ, வெள்ளைப் பனி மலை போல் தோன்றும் பல்லவ அரண்மனையின் மேன் மாடங்களைப் பார்த்துக் கொண்டு நிற்கிறார்....!

வழக்கம் போல் அந்த அரண்மனைப் பகுதிகளும் பாழடைந்து காணப்பட்டன. கட்டுப்பாடற்ற சளுக்கியக் காவல் வீரர்கள் மதர்ப்படைந்த களிறுகள்போல் அங்குமிங்குமாக உலாவிக் கொண்டிருந்தனர். இதோ மிகப் பெரிய குதிரைப் படையொன்று அரண்மனையின் தெற்கு வாயிலை நோக்கி அணிவகுத்து எங்கோ புறப்படுவதற்குத் தயாராக நின்று கொண்டிருந்தது. அரண்மனையைச் சார்ந்த ஜேஷ்டாதேவி கோயிலுக்கு எதிரே, பணி மக்களுக்கெனத் தனியாக அமைந்த வேளத்தைச் சுற்றிப் பலத்த காவல் போடப் பெற்றிருந்தது. நூற்றுக்கணக்கான காவல் வீரர்கள் ஈட்டிகளையும் கத்திகளையும் ஏந்தி நின்று அதனை வெகு கவனமாகக் கண்காணித்துக் கொண்டிருந்தனர். முத்தரையரும் இப்போது அவ்வேளத்து மேன் மாடப் பகுதியைத்தான் கூர்ந்து பார்த்தவாறு நின்றிருந்தார்.

உச்சிப் போது நெருங்கி வரும் அந்த நேரத்தில் திடீரென்று தாரை முழங்கும் ஒலி கேட்டது. வேளத்தைச் சுற்றிப் பரவலாக நின்ற காவல் வீரர்கள் அவ்வொலி கேட்டு எச்சரிக்கை பெற்றவர்களாய்ச் சிறுசிறு குழுவாகக் கூடினர்.

இந்நேரம் வரை அந்த வேளத்து மேன்மாடத்தையே இமைக்காமல் பார்த்துக் கொண்டிருந்த முத்தரையர் அவசரமாகத் திரும்பி, ''அரசே! தயைசெய்து இந்தக் காட்சியைப் பாருங்கள்!'' என்று துயரம் முட்டிய குரலில் படபடத்தார்.

சிந்தனையில் ஆழ்ந்தவனாய்த் துவண்டு நின்று கொண்டிருந்த பரமேசுவர வர்மன், அவர் சுட்டிக் காட்டிய திசைப் பக்கம் தன் பார்வையைத் திருப்பினான். அங்கே—

அரண்மனை வேளத்து மேன்மாடத்தின் சிறிய கதவொன்று திறக்கப்பட்டது. மறு கணம் வெண்ணிற ஆடை புனைந்து வயதான தோற்றத்



துடன் விளங்கிய பெண்மணியொருவர், இரு கரங்களிலும் நீண்ட இரும்புச் சங்கிலிகள் இழுபட்டுத் தொங்க வெயில் எரிக்கும் தளத்தை நோக்கி வெளியே வந்தார். அவரது அண்ணுந்த பார்வை அந்த ஜேஷ்டா தேவி கோயில் பக்கமே திரும்பி இருந்தது. நடுங்கித் துவளும் தம் கரங்களை மேலே உயர்த்திக் குவித்தவாறு பிரார்த்தனையில் ஈடுபட்டவராய் அப்படியே சமைந்து நின்றார் அவர்.

''பார்த்தீர்களா, அரசே? அவர் தான் இந்தப் பார் புகழ் கொண்ட பல்லவ நாட்டின் பல கோடி மக்களுக்கும் சொந்தமான ஞானத் தாய்! தங்களைப் பத்து மாதம் சுமந்து பெற்ற அன்னை காடவன்மாதேவி! தம் இஷ்ட தெய்வத்தை நேரில் தரிசித்து வழிபாடு செய்யவும் உரிமை இழந்த நிலையிலே நிற்கும் அவரது பரிதாபக் கோலத்தைப் பாருங்கள், அரசே!'' என்று நெஞ்சு அடைக்கக் குரல் தழுதழுக்க விம்மிக் குமுறினார் முத்தரையர்.

ஆனால் பரமேசுவர வர்மனோ எவ்விதச் சலனமுமின்றித் தன் அன்னையின் தொலை தூர உருவத் தோற்றத்தையே அமைதியாகப் பார்த்துக் கொண்டு நின்றான். அவனது ஒளி மங்கிய கண்கள் பனித்துத் தாழ்ந்து விட்டன.

அவசரப் பரபரப்புடன் நிமிர்ந்த முத்தரையர் தம் இடுப்புப் பட்டியில் செருகி வைத்திருந்த திருமுக ஓலைச் சுருளை எடுத்துப் பல்லவ மன்னவனின் எதிரே நீட்டி, ''இப்போதாவது இதில் தங்களது மேலான கைச்சாத்தை இட்டருளுங்கள், அரசே!'' என்று இறைஞ்சுவது போல் கரகரத்தார்.

பரமேசுவர வர்மன் அவரைப் பார்த்து அவலப் புன்முறுவல் பூத்தான். ''ஹூம்! விதி வலிமை வாய்ந்தது. அதன் விருப்பத்துக்குக் குறுக்கே நிற்க நான் யார்?'' — பெருமூச்சு விட்ட அவன் அந்தக் கடிகைக் கோபுர உச்சித் தளத்திலிருந்து அகன்று போய்ப் படிகளில் இறங்கலானான். தோல்விச் சுமையால் தலை தொங்க அவனைப் பின் தொடர்ந்தார் முத்தரையர்.

பல்லவபுரத்துக்கும் தலைத்துறைக்கும் இடையே குறுகலான வண்டிப் பாட்டையொன்றில் முன்னும் பின்னுமாக விரைந்து கொண்டிருந்த அவ்விரு குதிரைகளும் சட்டென்று வேகத்தைக் குறைத்துத் திமிறவிட்டுக் கனைத்தன. முன்னால் சென்ற முத்தரையர் தம் குதிரை மீதிருந்து கீழே குதித்து இறங்கிச் சுற்று முற்றும் திரும்பிப் பார்த்தார்.

அந்த வண்டிப் பாட்டைக்கு வடகிழக்கே சுமார் அரைக் குரோச தொலைவுக்கப்பால் சிற்றூர் ஒன்றின் பக்கமிருந்து ஏதோ கூக்குரலும் அழுகை ஓலமுமாகச் சேர்ந்து நாற்புறமும் எதிரொலிப்பது கேட்டது.

பரமேசுவர வர்மனை அணுகி வந்த முத்தரையர், ''அரசே! தாங்கள் காண வேண்டியதும், நான் காட்ட விரும்பியதுமான மற்றொரு காட்சி! தயைசெய்து என்னோடு வாருங்கள்!'' என்று கம்மிய குரலில் கூறிக்கொண்டே தம் குதிரையின் சேணக் கசையைப் பற்றி நடத்திக் கொண்டு அந்தச் சிற்றூரை நோக்கி வேகமாக நடந்தார். மறுமொழி எதும் கூறாமல், மௌனம் சாதித்த பரமேசுவரவர்மனும் அவர் பின்னால் சென்றான்.

அது ஒரு சிற்றூர்தான். விவசாயிகளும், வணிகர்களும், தொழில் விற்பன்னர்களும் அங்கே வசித்து வந்ததால் அவ்வூரின் அமைப்பு மிக அழகாகவே காணப்பட்டது. ஆனால் அதன் உட்புற நிலையோ பாழ்பட்டு வறுமை மிஞ்சி, பரிதாபக் கோலத்துடன் விளங்கியது. எங்கும் எதிலும் ஒருவித வறட்சித்தன்மையே தலைவிரித்தாடியது. அச் சிற்றூரை நெருங்கிய பரமேசுவர வர்மனும் முத்தரையரும், இடிந்து தூர்ந்த கூவல் ஒன்றின் அருகில் தம் குதிரைகளை நிறுத்தி விட்டுச் சற்றுத் தள்ளிப் போய், தகர்ந்து கிடந்த ஒரு 'நடு கல்'லின் பின்னால் மறைந்து நின்றவாறு கூக்குரல் எழும் இடத்தை நோக்கித் தமது பார்வையைச் செலுத்தினர்.

நான்கு வீதிகள் சேரும் அந்த நாற்சந்தியின் மேலண்டைப் பக்கமாக— 'திலக்களம்' எனப்படும் வரித் தண்டல் சதுக்கமொன்றை ஒட்டினாற் போல் — பிரும்மாண்டமான 'ஊர்ப் பண்டார'க் கட்டிடம் எழும்பி நின்றது. வரியாக வசூலிக்கப் பெறும் காசுகளைச் சேர்த்து வைப்பதற்கான 'கருவூலம்' ஒன்றும், நிர்வையாகத் தண்டப்படும் தானிய வகைகளைச் சேமித்து வைப்பதற்கான 'களஞ்சியம்' ஒன்றுமாக இரு பகுதிகளைக் கொண்டு அது விளங்கியது. ஆனால் அந்தக் கருவூலத்திலும் களஞ்சியத்திலும் இப்போது ஒரு செப்புக் காசோ ஒரு தானிய மணியோ கூட இன்றி அவை வெறிச்சோடிக் கதவுகள் திறந்தே கிடந்தன. நிலங்களின் தன்மைகளை தரம் பிரித்து அறிந்து வரி விதிப்புக்குத் தோதாக எழுதி வைக்க உதவும் 'தரவு சாத்து' என்கிற நூலும், நிலவரிக் கணக்குகளைக் கொண்ட 'வரிப் பொத்தகம்' என்ற நூலும், மற்ற வரிகளைப் பதிந்து வைக்கும் 'புரவு வரி' என்ற நூலும், வசூலிக்கப் பெற்ற வரிக் கணக்குகளை

# சமைக்கும்போதே இளைப்பாறலாம்

இந்த அற்புத மண்ணெண்ணெ அடுப்பு கண்டு பிடிக்கும் வரையில் சமையல் என்றாலே மிகக் கஷ்டமான காரியம் என்று கருதப்பட்டு வந்தது. இப்பொழுது நீங்கள் சமைக்கும்போதே இளைப்பாறலாம். கரி உடைக்கும் கஷ்டமோ அடுப்பூதும் சிரமமோ, கண்ணில் புகை மண்டுதலோ இல்லை. சமையலறையில் புகைக்கரி பிடிக்காது. இந்த அடுப்பு துப்புரவானது. எளிதானது. எளிமையானது.

- தூசி, தும்பு, புகை, சத்தமில்லை
- சிக்கனமும் பாதுகாப்புமுள்ளது
- ஸ்பேர் பாகங்கள் கிடைக்கும்




# காஸ் ஜனதா

மண்ணெண்ணெ அடுப்பு

சுவையான சமையல்  சுலபமான சமையல்

தயாரிப்பாளர்கள் :

**தி ஓரியண்டல் மெட்டல் இண்டஸ்ட்ரீஸ் பிரைவேட் லிமிடெட்**

77, பௌபஜார் தெரு, கல்கத்தா-12

---

## மிக நம்பகமான அண்டிஸெப்டிக்



வெட்டுக்காயங்கள், பூச்சிகளின் கடி, வாய்கழுவ கொப்பளிக்க, வசிக்கும் அறைகள், நிலம், துணி மணிகள் முதலியவைகளை விஷக்கிருமிகளை ஒழித்து சுத்தம் செய்ய, முதலியவைகளுக்கு




# அன்டோல்

55, 110, 450 மிலி கொண்ட பாட்டில்களிலும் 4.5 (1 காலன்) கொண்ட டின்களிலும் கிடைக்கும்.

 பெங்கால் இம்யூனிட்டியின் உற்பத்தி

மட்டுமே கொண்ட 'வரிவீடு' என்று நூலும் தாறுமாறாகக் கிழிந்து, அங்கு மிங்குமாகச் சிதறிக் கிடந்தன.

இப்படி அலங்கோலமாகக் காட்சியளித்த அந்த நிலைக்களத்தில் அவ்வூர்க் குடிமக்கள் அவ்வளவு பேரும் திரண்டு வந்து குழுமியிருந்தனர். வறுமையாலும், பிணியாலும், பசியாலும் வதைபடும் தோற்றத்துடனிருந்த அவர்களைப் பார்க்கவே மிகவும் பரிதாபமாக இருந்தது. இரைச்சலிட்டுப் பேசிக் கொண்டிருந்த ஆண்களிடையேயும் அழுது புலம்பிக் கொண்டிருந்த பெண்களிடையேயும் திடீரென்று அமைதி நிலவியது. அவர்கள் அனைவரது பார்வையும் மேல் நோக்கி நிமிர்ந்து, எதிரேயிருந்த பண்டாரக் கட்டிடத்தின் கூரை முகட்டில் போய்ப் பதிந்தது.

அங்கே — இருபத்தைந்து வயது மதிக்கத்தக்க வாலிபனொருவன் அலட்சியமாக நின்று கொண்டிருந்தான். தன்னை நோக்கி நின்ற பெரும் ஜனத் திரளையே விழியசைக்காமல் பார்த்துக் கொண்டிருந்த அவன் சட்டென்று நிமிர்ந்து வீராவேசமான குரலில் உரக்கப் பேசினான்: ''பெரியோர்களே, தாய்மார்களே, வீர சகோதர சகோதரிகளே! சளுக்கியரின் காட்டாட்சியால் இந்த நாடே இப்போது சின்னாபின்னப்பட்டுக் கொண்டிருக்கிறது. நாளுக்கு நாள் அவர்களுடைய கொடுமைகள் அளவு மீறிப் போகின்றன. வரி என்ற பெயரால் நம்மையெல்லாம் வாட்டி வதைத்துப் பிழிகிறார்கள். ஒவ்வொரு நாளும் ஒவ்வொரு புது வரியாகச் சொல்லிக் கொண்டு நம் சொத்துக்களைச் சூறையாடுகிறார்கள். இந்த அநியாயக் கொடுமைகளை எதிர்க்கச் சக்தியின்றி நாம் அடங்கி ஒடுங்கிக் கிடக்கிறோம்! எத்தனை காலத்துக்கு இந்த ஈன வாழ்க்கை வாழப் போகிறோம்? நம்முடைய எதிர்ப்பை ஏதாவது ஒரு வகையில் அந்தச் சளுக்கியச் சண்டாளருக்குக் காட்டியே ஆக வேண்டும். அதற்காகவே இன்று நான் உங்கள் முன்னே உயிர்த் தியாகம் செய்ய முன் வந்திருக்கிறேன். அநியாய வரிகளை எதிர்ப்பதற்காக ஓர் இளைஞன் வரிப் பண்டாரத்தின் மீதேறிக் குதித்து உயிரை விட்டான் என்ற செய்தியை அந்த ஆணவத் திமிர் பிடித்த சளுக்கிய வரித் தண்டல்காரர்களின் செவிகளிலே படும்படி செய்யுங்கள். இதைத் தவிர உங்கள் உய்வுக்கு இப்போது வேறு வழியே இல்லை. வாழ்க, பரமேசுவர வர்மர், வாழ்க பல்லவ நாடு!'' — அனல் தெறிக்கப் பேசி நிறுத்திய வாலிபன் சடாரெனக் கீழ்நோக்கிப் பாய்ந்தான். அடுத்த விநாடி அந்த நிலைக்களமெங்கும் ஒரே இரத்த வெள்ளம்!

ஜனக் கூட்டத்திலிருந்து 'ஹா, ஹோ' என்ற அலறல் ஒலியும், அழுகைக் கூக்குரலுமாக எழுந்து எட்டுத் திக்குகளையும் கிடுகிடுக்க வைத்தன.

## அத்தியாயம் ஆறு

# வாதாபி கணபதி

சிவந்த கண்களில் நீர் கசியப் பெருமூச்சு விட்டுத் திரும்பிய முத்தரையர் அங்கே அமைதியாக நின்று கொண்டிருந்த பரமேசுவர வர்மனை நோக்கி வேதனை செறிந்த குரலில் ''பார்த்தீர்களா அரசே? நெஞ்சின் ஈரலைக் குத்திக் கிழிப்பது போன்ற இந்தப் பயங்கரப் பரிதாப நிகழ்ச்சி இங்கு மட்டுமே நிகழ்வதாக நினைக்காதீர்கள். அரசாங்கத்தின் வரிக் கொடுமைகளையும் வேறு பல அநீதிகளையும் எதிர்க்க மக்கள் இறுதியாக மேற்கொள்ளும் இந்தப் பழைமையான முறை இப்போது ஒவ்வொரு சிற்றூரிலும், பேரூரிலும், பெரிய நகரங்களிலும் கூடத் தினம் நடந்து கொண்டுதான் இருக்கிறது. சளுக்கியர் இழைக்கும் கொடுமைகளை நேரிடையாக எதிர்த்து நிற்க வாய்ப்பில்லாத மக்கள், கோபுரங்களின் மேலேறிக் குதித்துப் பிராணத் தியாகம் செய்து கொள்வதும், தீ மூட்டி அதில் வீழ்ந்து இறப்பதுமாகத் தம் மனக் குமுறலை வெளிக் காட்டிக் கொண்டிருக்கிறார்கள்'' என்றார்.

மாலைப் போது வருகை தரவிருந்த நேரத்தில் தவத்துறைக்கு அண்மையில் உள்ள சென்னி வாய்க்கால் என்னும் இடத்தைச் சார்ந்து சென்ற கிளை வழி ஒன்றில் விரைந்து கொண்டிருந்தன அவ்விரு குதிரைகளும். ஏதோ ஒரு பயங்கரக் காட்சியைக் கண்டு மிரட்சியுற்றாற்போல் பெருங் குரலெடுத்துக் கனைத்துத் திமிறியவாறு பாதையை விட்டுத் திரும்பித் தறிகெட்டு ஓட ஆரம்பித்தன. இதனால் திக்குமுக்காடிவிட்ட பரமேசுவர வர்மனும் முத்தரையரும் புரவிகளை அடக்கிச் சாந்தப்படுத்திப் பாதைக்குத் திருப்பிக் கொண்டு வந்து சேர்த்துவிட்டுத் தம் பார்வையை அங்குமிங்குமாகச் செலுத்தி நோக்கினர்.

கூப்பிடு தூரத்தில் — சென்னி வாய்க்கால் கரை மேட்டில் — பழைமையான ஞாழற் கோயில் ஒன்று இருப்பது தெரிந்தது. அந்தக் கோயிலின் எதிரே அடிதடி கலவரம் நடப்பதற்கு அறிகுறியாக 'ஆ'கார, 'ஊ'காரக் கூக்குரல்களும் புழுதிப் படலமும் எழுந்தன.

தாம் எதிர்பார்த்துத் தேடி வந்த ஏதோ ஒன்று கிடைத்துவிட்டாற்போல் உற்சாகமடைந்த முத்தரையர் "அரசே! தாங்கள் இங்கேயே இருங்கள்! நான் போய் அங்கு என்ன நடக்கிறதெனப் பார்த்துக் கொண்டு வந்துவிடுகிறேன்" என்றவாறு அந்தச் சென்னி வாய்க்கால் ஞாழற் கோயிலை நோக்கி விரைந்தார்.

களைப்பும் சோர்வுமாகப் பாதையின் ஓரம் நின்றிருந்த பரமேசுவர வர்மன், 'நாமும்தான் போய்ப் பார்ப்போமே' என்று எண்ணியவனாய் முத்தரையர் சென்ற வழியாகப் புரவியை நடத்திக் கொண்டு நடக்கலானான்.

சென்னி வாய்க்காலின் கரை மேட்டில் ஏறிய பரமேசுவர வர்மனுக்கு அந்த ஞாழற் கோயிலின் எதிரே நிகழ்ந்து கொண்டிருந்த அடிதடி கலகக் காட்சி இப்போது ஓரளவு புலனாயிற்று. பரபரப்புடன் சற்று வேகமாக நடந்து கொண்டே அந்த நெஞ்சுருக்கும் காட்சியைக் கூர்ந்து பார்த்தான்.

சமணத் துறவிகள் போல் மழுக்கிய தலையும் காவியுடையுமாகத் தோன்றிய சுமார் ஐம்பது அறுபது பேர்கள் ஒரு குழுவாகவும் நூற்றுக்கும் மேற்பட்ட ஊர் மக்கள் ஒரு குழுவாகவும் நின்று ஈட்டி, கம்பு, கத்திகளுடன் மூர்க்காவேசமாக ஒருவரை யொருவர் தாக்கிப் போரிட்டுக் கொண்டிருந்தனர்!

பரமேசுவர வர்மனுக்கு ஒன்றும் புரியவில்லை. 'கோயிலின் எதிரே அவர்கள் இப்படிப் பயங்கரச் சண்டையிட்டுக் கொண்டிருக்கக் காரணம் என்னவாயிருக்கும்?' என்று தன்னைத் தானே அவன் கேட்டுக் கொண்டான். அத்துடன், சமணத் துறவிகள் போல் தோற்றமளிப்பவர்கள் ஈட்டி, கத்திகளை ஏந்திப் போரிடுவது அவனுக்கு விந்தையிலும் விந்தையாக இருந்தது. தன்னை மீறிய ஒரு துடிப்புடன் — தன் நிலையையும் மறந்தவனாய் — அந்த ஞாழற் கோயிலை நோக்கி விரைந்தான்.

"அக்கிரமம் எல்லை கடந்துவிட்டது! அநியாயம் வரம்பு மீறிப் போய்விட்டது!" என்று முணு முணுத்துக் கொண்டே கோயிலின் பின்புறம் இருந்து வெளிப்பட்டு வந்தார் பெரும்பிடுகு முத்தரையர்.

சற்று முன் அங்கே வெறியாவேசத்துடன் போரிட்டுக் கொண்டிருந்தவர்களில் ஒருவரைக்கூட இப்போது காணோம். கத்திகளும், கம்புகளும், ஈட்டிகளும்தான் ஆங்காங்கு சிதறிக் கிடந்தன. அவற்றுடன் விலைமதிப்பு வாய்ந்த ஆபரணங்களும், பொற் காசுகளும், பொன், வெள்ளிகளாலான வேறு சில பொருட்களும் இறைந்து கிடந்தன.

பிரமையுற்ற நிலையில் நின்று இதையெல்லாம் சுற்றிச் சுழன்று பார்த்த பரமேசுவர வர்மன், "என்ன இது? இங்கே என்ன நடந்தது?" என்று கேட்டுக்கொண்டே திரும்பினான்.

"நாடெங்கிலுமுள்ள திருக் கோயில்களில் இப்போது என்ன நடந்துகொண்டிருக்கிறதோ, அதுவேதான் இங்கேயும் நடந்திருக்கிறது, அரசே!" என்று சலிப்புடன் சொல்லி முகத்தைச் சுளித்த முத்தரையர் தொடர்ந்தார்.

"இந்த ஞாழற் கோயிலில் எழுந்தருளியுள்ள ஞாழற் பெருமான் தம் பொக்கிஷத்தில் நிறைய ஆபரணங்களைப் பூட்டி வைத்துக் கொண்டு அவற்றைப் பாதுகாக்க முடியாமல் மிகவும் சிரமப் பட்டுக் கொண்டிருந்தாராம். அவருடைய சிரமத்தைப் போக்கிப் புண்ணியம் கட்டிக்கொண்டு போயிருக்கிறார்கள் சளுக்கிய வீரர்கள்."

இதைக் கேட்டதும் பரமேசுவர வர்மனின் கண்கள் அனல் துண்டங்களாயின. "சளுக்கிய வீரர்களா? அவர்களுக்கு இங்கென்ன வேலை?" என்று குமுறிக் கேட்டான் அவன்.

"அவர்களுடைய பிரதான அலுவலே இப்போது இதுவாகத்தான் இருக்கிறது, அரசே!... மக்களிடம் வரி என்ற பெயரால் கொள்ளை யடித்த செல்வங்கள் போதாதென்று, இம்மாதிரியான கோயில்களிலும் தங்கள் இரத்தக் கறை படிந்த கரங்களை நீட்டத் தொடங்கி விட்டார்கள்."

பல்லவ மன்னனின் முகம் நெருப்பெனச் சிவந்து பழுத்தது.

முத்தரையர் மேலும் சொன்னார்: "இதிலே வேதனை தரும் விஷயம் என்னவென்றால், மதிப்புக்குரிய சமணத் துறவிகள் போல் வேடமிட்டுக் கொண்டு வந்து இந்த மாபாதகச் செயலை அவர்கள் நடத்துகிறார்கள் என்பதுதான்!"

சினத்தால் உடல் முறுக்கேறித் துடிக்க ஓங்கி நிமிர்ந்தான் பரமேசுவரவர்மன்.

"அந்த அநியாயக்காரர்கள் அப்படிக் காவியுடை வேடமிட்டு வரக் காரணம் என்ன தெரியுமா அரசே? கோயில் சொத்துக்களைச் சூறையாடுவதோடு அல்லாமல், இப்போது நாட்டிலே சைவர்களும், சமணர்களும் ஒன்றுபட்டு நிற்பதையும் கலைத்துக் குலைத்தெறிய வேண்டும் என்பதே அவர்கள் நோக்கம். அதற்காகவே அவர்கள் இந்தப் புதிய தந்திரத்தைக் கையாள்

ஸேப்டி பின்களில்
யூனிடிக்கு பதில்
வேறென்றுமேயில்லை






* நேர்த்தியான தாம்
* திருத்தமாக அமைக்கப்பட்ட தலைபாகம்
* கூரான முனை
* கனமான நிக்கல் பூச்சு
* உன்னத தயாரிப்பு

'யூனிடி'யே ஜார்ஜ் குட்மேன் லிமிடெட்டின் ரிஜிஸ்டர்டு டிரேடு மார்க்காகும்.
ரிஜிஸ்டர் செய்யப்பட்ட உபயோகிப்பாளர்,

**கெஸ்ட், கீன், வில்லியம்ஸ், லிட்.,**

கல்கத்தா பம்பாய் மதராஸ் புது டில்லி

GKW3187A

கிறார்கள். சைவ — வைணவக் கோயில்களில் சமணத் துறவிகள் புகுந்து கொள்ளையடிக்கிறார்கள் என்ற செய்தி பரவினால் மக்களிடையே நிலவும் ஒற்றுமை தகர்ந்து, பழைய விரோத — குரோதம் தலைதூக்கி விடும் என்று அவர்கள் எதிர்பார்க்கிறார்கள்.''

பரமேசுவரவர்மனின் நிழல் நீண்டிய புற்பூண்டுகள் கருகித் துவண்டன.

''ஆனால் அதிர்ஷ்ட வசமாக அவர்களின் அந்தத் தீய நோக்கம் சிறிதும் நிறைவேற வில்லை. அவர்களுடைய போலி வேடத்தைப் புரிந்துகொண்ட சைவர்களும் சமணர்களும் ஒன்று சேர்ந்தே அவர்களை எதிர்த்து வருகிறார்கள்! சற்று முன் இந்தக் கோயிலில் கொள்ளையிட வந்த சளுக்கிய வேடதாரிகளை அடித்து நொறுக்கி விரட்டியடித்தவர்களில் பெரும்பாலோர் சமணப் பெரு மக்களே!'' என்று அடைத்த குரலில் சொன்னார் முத்தரையர்.

பரமேசுவர வர்மன் பயங்கரமாகச் சிரித்தான். ''நம்மைப் பற்றி நாம் தவறாக எடை போட்டு எதிரியின் பலத்தைக் குறைத்து மதிப்பிட்டு விடக்கூடாதே என்பதற்காக இத்தனை காலம் பொறுமையோடு காத்திருந்தேன். இனி அந்தப் பொறுமைக்கே இடமில்லை! இனிப் பொறுக்கவும் என்னால் இயலாது!'' என்று இந்திராயுதம் மோதவிடுவது போல் கர்ஜித்த அவன், ''முத்தரையரே! எங்கே அந்த ஓலை? எங்கே அந்தத் திருமுக ஓலை?'' என்றவாறு அவரை நோக்கிப் பாய்ந்து சென்றான்.

பெரும்பிடுகு முத்தரையர், விம்மிப் புடைத்த தம் புஜங்களைக் குலுக்கி, நேராக நிமிர்ந்து நின்று கொண்டு தாம் வரைந்து வைத்திருந்த திருமுக ஓலையை எடுத்துப் பல்லவ மன்னனின் எதிரே மிடுக்குடன் நீட்டினார்.

பளீரென்ற ஓர் ஒலி!

பரமேசுவர வர்மனின் பரந்த மார்பிலும் அவனது வலக் கரத்திலும் செங்குருதி சொட்டிற்று. தன் கையைக் கொண்டே தனது மார்பில் ஓங்கி அறைந்து கீறி வழித்தெடுத்த இரத்தத்துடன் நிமிர்ந்த அவன் அந்தத் திருமுக ஓலையில் குருதிக் கைச்சாத்து இட்டு விட்டுத் திரும்பி, ''மாவீர முத்தரையரே! எடுத்துச் செல்லுங்கள். இந்த ஓலையை. எவ்வளவு விரைவில் முடியுமோ அவ்வளவு விரைவாகச் சளுக்கிய அரக்கர்களைச் சங்காரம் பண்ண என் நாட்டு மக்களைப் போர் அணிக்குத் திரட்டிக் கொண்டு வாருங்கள்!'' என்று முழங்கினான்.

மகிழ்ச்சியால் பூரித்துக் குலுங்கிய முத்தரையர் தம் இரு கரங்களையும் நீட்டி, அவ்வோலையைப் பணிவுடன் பெற்றுக் கண்களில் ஒற்றிக் கொண்டு நிமிர்ந்து, ''மாமன்னரவர்களை இன்னும் இரண்டொரு வாரங்களுக்குள் சேதியக் கலைஞர் பரவாதி மல்லர் இல்லத்தில் வந்து சந்திக்கிறேன்'' என்று உற்சாகமாகக் கூவியவாறு தம் குதிரையின் மீது தாவி ஏறி அமர்ந்தார். மறு கணம், அந்தக் குதிரை காற்றெனக் கடுகி மறைந்தது.

உணர்ச்சிக் கனல் பரக்க ஓங்கி உயர்ந்து நின்று கொண்டிருந்த பரமேசுவர வர்மன் சற்றே அமைதி அடைந்தவனாய் ஆழ்ந்த சிந்தனையுடன் அந்த ஞாழற் கோயிலை நோக்கி நடந்தான்.

கோயிலின் வலப்புறத் திருச்சுற்றை யொட்டிப் பெரியதொரு ஞாழல் மரம் பசுமைக் குடை விரித்து வளர்ந்து நின்றது. அதன் அருகில் —ஞாழற் பெருமானின் சந்நிதானத்தைப் பார்த்தாற்போல்—சிறியதொரு கோயில் புதிதாக எழுப்பப் பெற்றிருக்க அதில் வாதாபிகணபதி எழிலுற வீற்றிருந்தார்.

சளுக்கியப் புலிகேசியை அடக்கி யொடுக்கி வாதாபி நகரைத் தீக்கிரையாக்கிய பல்லவ மன்னன் நரசிம்ம வர்மனின் படைத் தளபதியான பரஞ்சோதியார் அங்கிருந்து அழகிய விநாயகர் படிமங்கள் சிலவற்றை எடுத்து வந்து தம் சொந்த ஊரான திருச்செங்காட்டங்குடியில் ஒன்றும் அவ்வூருக்கு அண்மையில் உள்ள திருப்புகலூரில் ஒன்றும், திருவாரூரில் ஒன்றுமாக எழுந்தருளுவித்தார். மற்றுமொரு படிமம் இந்தச் சென்னி வாய்க்கால் ஞாழற் கோயிலில் பிரதிஷ்டையாகியது.

அந்த வாதாபி விநாயகரின் சந்நிதானத்திலே வந்து நின்ற பரமேசுவர வர்மன், கரம் குவித்து, மெய்யொடுங்கிக் குரல் குழைய வேண்டினான்: ''மதுரமொழி நல்லுமையாள் செல்வரே! அன்று அதர்மத்தை எதிர்த்து இராஜசூய வேள்வி தொடங்கு முன் மகா கணபதியான உம்மைத்தான் முதன் முதலாகப் பூஜை செய்து வணங்கினான் தரும புத்திரன்; இன்று நானும் அவ்வாறே, உமது திருவடி முன் வந்து நிற்கிறேன். அதர்மத்தை அழிக்கும் வல்லமையை எனக்கு அளித்தருள வேணும், தந்தி முகனே!''— தன்னை மறந்த நிலையில் மெல்லக் கண் மூடினான் அவன்.

இந்தச் சமயம் எங்கோ தொலை தூரத்துக்கு அப்பால் யானை ஒன்றின் பயங்கரமான பிளிறல் ஒலி எழுந்து அந்தப் பிரதேசத்தையே கிடுகிடுக்க வைத்தது!

(தொடரும்)

சமீபத்தில் நான் என் வண்டியை எடுத்துக் கொண்டு செஞ்சிக்கோட்டையைப் பார்ப்பதற்காகப் புறப்பட்டேன். செங்கல்பட்டைத் தாண்டியதும், பாதையில், ''தலைவரே, வருக, வருக!'' என்று எழுதப்பட்டிருந்த வரவேற்பு வளைவைப் பார்த்ததும் எனக்கு ஏற்பட்ட சந்தோஷம் கொஞ்ச நஞ்சமல்ல. நாம் இந்த வழியாக வரப் போவது தெரிந்து நமக்கு வரவேற்பு எழுதிவைத்திருக்கிறார்களே, தேவலையே என்று சந்தோஷப்பட்டேன்.

நான் தலைவரா இல்லையா என்பதைப் பற்றி உங்களுக்கு வேண்டுமானால் சந்தேகமாக இருக்கலாம். ஆனால் பிரிட்டிஷ் அரசாங்கம் நான் தலைவர்தான் என்பதைச் சென்ற யுத்தத்தின்போது, என் குடும்பத்துக்கு ரேஷன் கார்டு விநியோகித்த போதே, ஒப்புக் கொண்டு விட்டது என்பதைத் தெரிவித்துக் கொள்ள விரும்புகிறேன். நான் வெறும்






தலைவர் மட்டும் அல்ல; குடும்பத் தலைவர் என்று பிரிட்டிஷ் அரசாங்கம் ஒப்புக் கொள்ளவே அன்றிலிருந்து நான் என்னைத் தலைவராகவே நினைத்து ஒழுகத் தொடங்கியுள்ளேன். மற்றத் தலைவர்கள் எதிர்பார்க்கும் மரியாதைகளையெல்லாம் நானும் எதிர்பார்க்கத் தொடங்கியுள்ளேன்.

ரஸ்தாவில் இன்னும் கொஞ்சதூரம் சென்றதும் ''தமிழ் நாட்டின் தவப் புதல்வரே வருக, வருக!'' என்று எழுதப்பட்டிருந்த ஒரு பெரிய வளைவு காணப்பட்டதும், ''ஆஹா! நம்மை எப்படி எப்படி யெல்லாம் போற்றியிருக்கிறார்கள்!'' என்பதை நினைக்க எனக்குப் பெருமகிழ்ச்சி உண்டாயிற்று.

இன்னும் கொஞ்சதூரம் சென்றதும், ''ஊருக்கு உழைக்கும் உத்தமரே, வருக, வருக!'' என்று பெரிய துணியில் எழுதி ரஸ்தாவின் குறுக்கே கட்டியிருந்தார்கள். இங்குள்ளவர்கள் எப்படியோ நம் வரவைத் தெரிந்து கொண்டு நம்மை இப்படி யெல்லாம் வரவேற்றிருக்கிறார்களே என்று சந்தோஷப்பட்டேன்.

ஆனால் இன்னும் சிறிது தூரம் சென்றதும் எனக்குப் பெருத்த ஏமாற்றம் காத்துக் கிடந்தது. யாரோ ஓர் அமைச்சரின் பெயரைக் குறிப்பிட்டு, 'வருக, வருக' என்று எழுதப்பட்டிருந்ததைப் பார்த்த போது இத்தனை வரவேற்புக்களும் நமக்கல்ல, அந்த மந்திரிக்கல்லவா என்று தெரிந்து கொண்டேன்.

இந்த மாதிரி வரவேற்பு வளையங்களும் 'வருக, வருக' அறிக்கைகளும் போடும் வழக்கம் தமிழ்நாட்டில் இப்பொழுது அதிகரித்து வருகிறது. மந்திரிகளுக்கு மட்டும் தான் இந்த வரவேற்பு என்று வைக்காமல், சர்க்கார் அதிகாரிகளுக்கும் இத்தகைய வரவேற்பு அளிக்கத் தொடங்கியிருக்கிறார்கள்.

இந்த வழக்கம் மிகவும் நல்ல வழக்கம்தான். இது வேண்டாம் என்று நான் சொல்லவில்லை. ஆனால் இப்படி வளைவுகள் அமைக்கும்போது மக்களோ அல்லது வரவேற்புகளை எதிர்பார்க்கும் அமைச்சர்களோ சற்று இது விஷயமாகக் கவனம் செலுத்தினார்களானால், இது விஷயமாகச் செலவாகும் பணத்தில் எத்தனையோ பங்கு மீதப்படுத்தி அதைத் தற்காப்பு நிதிக்கு அனுப்பி வைக்கலாம்.

முதலில் இப்படிப் போடப்படும் வளைவுகளில் உபயோகிக்கப்படும் வெள்ளைத் துணிகளை எடுத்துக் கொள்ளுங்கள். அரசாங்க அதிகாரியோ, அல்லது அமைச்சரோ அந்தப் பக்கமாகப் போகும் போது, ஒவ்வொரு தடவையும் துணி வாங்கிப் புதிதாக எழுதுகிறார்களே யொழிய, பழைய துணி

களைப் பத்திரமாக வைத்துக் கொள்ளும் வழக்கம் கிடையாது. அப்படியே பத்திரமாக வைத்துக் கொண்டாலும், அந்தக் குறிப்பிட்ட அதிகாரியோ, அமைச்சரோ மீண்டும் அந்தப் பக்கமாக வருவார் என்கிற நிச்சயம் கிடையாது.

ஆகவே, இப்படிப் புதிது புதிதாக அடிக்கடி துணிகளில் எழுதுவதால் ஏற்படும் நஷ்டத்தைத் தவிர்க்க நான் ஒரு நல்ல யோசனை கூற முடியும். அதாவது எந்த அமைச்சர்கள், அதிகாரிகள் இப்படி வரவேற்பு விழாவுகள் எதிர்பார்க்கிறார்களோ, அவர்கள் தங்கள் செலவிலேயே இத்தகைய துணிகளைத் தயாராக எழுதி வைத்துக்கொண்டு அவற்றை



முன்கூட்டியே தாங்கள் போகும் இடங்களுக்கு அனுப்பி வைத்து, பின்னர் அவற்றைத் திரும்பப் பெற்றுத் தங்களிடம் வைத்துக் கொள்ள வேண்டும். இப்படி வைத்துக் கொண்டால் மக்கள் ஒரே அமைச்சருக்காகவோ, அதிகாரிக்காகவோ மீண்டும், மீண்டும் வரவேற்புத் துணிகள் எழுத வேண்டிய செலவு குறையும்.

இந்த முறையில் சம்பந்தப்பட்ட அமைச்சர்களுக்கும், அதிகாரிகளுக்கும் ஓர் அநுகூலம் இருக்கிறது. அவர்கள் தங்களை எப்படி யெல்லாம் வர்ணித்துக்கொள்ள விரும்புகிறார்களோ, அப்படி யெல்லாம் வர்ணித்துக் கொள்ளலாம். பொது ஜனங்கள் தங்களைச் சரியானபடி வர்ணிக்கவில்லையே என்று கவலைப்படத் தேவையில்லை.

இது தங்களுக்குச் செலவாகுமே என்று அமைச்சர்களும், அதிகாரிகளும் கவலை கொள்வார்களானால், அரசாங்கம் தன் செலவிலேயே இந்த வரவேற்புத் துணிகளை எழுதிக் கொடுக்கலாம். ஆனால் இதிலும் சிக்கனம் கையாள ஒரு வழி இருக்கிறது.

இன்றைக்கு இருக்கும் மந்திரி, நாளைக்கு இருப்பார் என்ற நிச்சயம் இல்லையாதலால், இந்த வாசகங்களை எல்லா அமைச்சர்களுக்கும், எல்லா அதிகாரிகளுக்கும் பொருந்தும்படியாக அமைப்பது நலம்.

''தமிழ் நாட்டின் தவப் புதல்வரே!'' என்று எழுதினால் எல்லா அதிகாரிகளுக்கும் அமைச்சர்களுக்கும் பொருந்தும், அல்லது பொருந்துவதாகத்தான் அவர்கள் நினைத்துக் கொள்வார்கள். ஆனால் இந்தியாவின் மற்றப் பாகங்களிலிருந்து தலைவர்கள் வரும்போது இது பொருந்துமா? அப்பொழுது அவர்களுக்கென்று தனியாக ஒரு வரவேற்பு எழுத வேண்டி வராதா? அதனால் செலவு அதிகரிக்காதா! ஆகவே ''இந்தியாவின் தவப் புதல்வரே, வருக, வருக!'' என்று எழுதி வைத்து விட்டால், இது எக்காலத்துக்கும், எல்லாருக்கும் பொருந்துமல்லவா?

அதைப் போலவே, ''நாட்டுக்காக உழைக்கும் உத்தமரே, வருக!'' ''தமக்கென வாழாப் பிறர்க்குரியாளரே, வருக வருக!'' ''கர்மவீரரே, வருக, வருக!'' ''தியாக மூர்த்தியே வருக, வருக!'' என்று பொதுப்படையாக வரவேற்புகள் எழுதி வைத்தால் இவை எல்லாருக்கும் எக்காலத்துக்கும் பொருந்தும்.

வரவேற்பு வாசகங்கள் இப்படிப் பொதுப்படையாக எழுதப்படும் போது அவற்றை அதிகாரிகள் வைத்துக்கொண்டு தாங்களே தாங்கள் செல்லும் இடங்களுக்கெல்லாம் அனுப்பிப் பின்னர் அவற்றைத் திரும்பப் பெற்றுக்

**நாடோடி**



> நான் சூக்ஷ்ம திருஷ்டி வாய்ந்தவனல்ல; தத்துவ ஞானியல்ல; முனிபுங்கவனுமல்ல. நான் ஓர் ஏழை. ஏழைகளை நேசிப்பவன் நான்..... இந்த ஏழைகளையே உங்கள் கடவுளாகக் கொள்ளுங்கள். அவர்களைப் பற்றியே சிந்தியுங்கள்; அவர்களுக்காகவே உழையுங்கள்; அவர்களுக்கென்றே இடைவிடாமல் பிரார்த்தியுங்கள். ஆண்டவன் உங்களுக்கு வழி காட்டுவான். ஏழைகளுக்காக எவனது இதயம் கசிகிறதோ அவனையே நான் மஹாத்மாவென்று அழைக்கிறேன்; அந்த அன்பு இல்லாதவன் துராத்மாவே ஆவான்......கோடிக் கணக்கான மக்கள் உண்ண உணவின்றி, அறியாமையில் வாடும்போது அவர்களினால் சௌகரியம் பெற்றுக் கல்வி கற்ற ஒருவன் அவர்களிடம் கவனம் செலுத்தவில்லையானால் அவனை நான் துரோகி என்றே கருதுகிறேன்... நாம் எல்லோரும் ஏழைகள், சோதரர்களே. நாம் எல்லாம் சமூக நிலையில் மிகவும் அற்பமானவர்கள்; ஆனால் எப்போதுமே பரம புருஷன் இப்படிப் பட்டவர்களைத்தான் தன் கருவிகளாக்கிக் கொள்கிறான்.
>
> — ஸ்வாமி விவேகானந்தர்

கொள்ள வேண்டும் என்றுகூட வைத்துக் கொள்ள வேண்டியதில்லை. இப்பொழுதுதான் தமிழ் நாடு முழுதும் பஞ்சாயத்து யூனியன்களாகப் பிரிக்கப்பட்டு விட்டதால், ஒவ்வொரு பஞ்சாயத்து யூனியனுக்கும் இவற்றை அனுப்பி வைத்து, அவை இவற்றை உபயோகப்படுத்திவிட்டு, பின்னர் பத்திரமாக வைத்துக் கொள்ள வேண்டும் என்று உத்தரவு போட வேண்டும்.

ஆனால் அப்படிச் செய்யும் போது இன்னொரு விஷயமாகவும் ஒரு சிக்கனம் கையாளலாம். வளைவுகளுக்காக உபயோகிக்கப்படும் மூங்கில்களும், பிளாச்சுகளும் அவ்வப்போது போடப்பட்டு அவ்வப்பொழுது பிரிக்கப்படுகின்றன. அப்படிச் செய்யாமல் ஒவ்வொரு ஊரிலும் இன்ன இன்ன இடங்களில்தான் வரவேற்பு வளையங்கள் இருக்கவேண்டும் என்று முன்கூட்டியே நிச்சயித்து அங்கு இவற்றை நிரந்தரமாகப் போட்டு வைக்கலாம். அப்படிப் போட்டால் இவற்றை அடிக்கடி பிரித்துப் போட வேண்டிய செலவு மிச்சமாகும்.

யுத்த நெருக்கடியை உத்தேசித்து இன்னொரு விதத்திலும் பணத்தைச் சிக்கனமாகச் செலவழிக்கலாம் என்று கூறுவேன். தலைவர்களோ, அதிகாரிகளோ வெளியூர்களுக்குச் செல்லும்போது அவர்களை வரவேற்பதற்கென்று பெரிய பந்தல் போடப்பட்டு அங்கு வாழை மரங்களும் தோரணங்களும் கட்டப்படுகின்றன. ஆனால் இந்தப் பந்தல்கள் ஒரு நாள் கூட்டத்துக்கென்று போடப்பட்டு அடுத்த நாளே பிரிக்கப்படும் பொழுது வயிற்றெரிச்சலாக இருக்கிறது. நம் நாட்டின் பணமும் உழைப்பும் இப்படி வீணாகிறதே என்று கவலைப்படத் தோன்றுகிறது. ஆகவே தலைவர்களுக்காகப் போடப்படும் பந்தல்களைப் பிரிக்காமல் நான்கு உள்ளூர்க் கலியாணங்களையாவது அங்கு நடத்த வேண்டும் என்று கேட்டுக் கொள்ளுகிறேன். அப்படி நடத்த முடியாமல் போனால் அந்த ஊரில் எப்பொழுது நான்கு கலியாணங்கள் ஒன்று சேருகின்றனவோ, எப்பொழுது அந்த நான்கு கலியாணக்காரர்களும் ஒரே பந்தலில் ஒருவர் பின் ஒருவராகக் கலியாணம் நடத்தத் தயாராக இருக்கிறார்களோ, அப்பொழுதுதான் தலைவர்களுக்குப் பந்தல் போடுவது என்று வைத்துக் கொள்ள வேண்டும்.

தலைவர்களுக்கு வாசித்தளிக்கப்படும் வரவேற்புப் பத்திரங்களும் அவ்வப்போது அந்தந்தத் தலைவர்களுக்கென்று தனியாக அச்சிடப்படுகின்றன. அதற்குப் பதில் எல்லா வரவேற்புப் பத்திரங்களும் எல்லோருக்கும் பொருந்தும்படியாக ஒரே ரீதியில் பொதுப்படையாக இருந்துவிட்டால் ஆயிரக் கணக்கில் அச்சிட்டு வைத்துக் கொள்ளலாம். அதில் தலைவர் பெயருக்கு மாத்திரம் இடம் விட்டு வைத்தால் அதில் பெயரைக் கையினால் எழுதிக் கொள்ளலாம்.

இன்னும் தலைவர்களுக்கென்று புதுப் புது மேடைகள் அமைக்கப்படுகின்றன. இந்த மேடை மேல் ஏறுவதற்கென்று தனி ஏணிகள் செய்யப்படுகின்றன. மேடைகள் அவசியம்தான் என்றால் அமைத்துக் கொண்டு போகட்டும். ஆனால் ஏணிகள் எதற்காக என்பதுதான் எனக்குப் புரியவில்லை. அவர் எத்தனை உயரமாக இருந்தாலும் தாவி ஏறிவிடுவார். ஆனால் மற்றவர்களையோ? அங்குள்ள கிராமத் தொண்டர் படையினர் தூக்கி மேடையில் வைத்தால் போச்சு.

ஆக, இந்த மாதிரி வழிகளில் சிக்கனம் பிடித்தால்தான் பொதுஜனங்கள் 'தலைவர்களை வருக வருக' வென்று மகிழ்ச்சியோடு வரவேற்க முடியும். இல்லையோ, இந்த ஊதாரிச் செலவுகள் ஸ்ரீ மொரார்ஜி தேசாயின் காதுகளுக்கு எட்டிற்றோ, அவர் உடனே இதற்கு ஒரு கட்டுப்பாடு போட்டாலும் போட்டு விடுவார்! ஜாக்கிரதை!

Printed & Published by R. Ananthanarayanan on behalf of Messrs Bharathan Publications Private Limited at the Kalki Press Kilpauk Madras-10
Managing Editor T. Sadasivam.

